உ

கடவுள் துணை.

புகழேந்திப்புலவரால்
செய்யப்பட்ட

# நளவெண்பாமூலமும்

சென்னை இராஜதானி வித்தியாசாலைத்
தமிழ்ப்பிரதமபண்டிதராயிருந்த
தி. ஈ. ஸ்ரீநிவாசராகவாசாரியார்செய்த
மணிவிளக்குப்புதவுரையும்
ஆங்கிலேய மொழிபெயர்ப்புடனும்.

ச-ம் பதிப்பு.




ஊ. புஷ்பரதசெட்டி அண்டுகம்பெனியாரால்
கலாரத்நாகரம் என்னும்
தமது அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.

1899.

மாய்ச் "சோழராஜன் எங்கள் குலத்துப்பெண்ணைக் கொ[illegible]த தக்கவனோ? எங்களிலும் ஏற்றமானவனோ? சொல்லும்" [illegible] ஒட்டக் கூத்தப்புலவர் சோழராஜன் பெருமைதோன்ற [illegible]னுடைய குதிரை நதி மாலை முதலியவைகளுக்குப் பாண்டிய[illegible]னுடைய குதிரை நதி மாலை முதலியவைகள் சமான[illegible] மாட்டா என்னும் பொருளுள்ள—

"கோரத்துக்கொப்போ கனவட்டமம்மானே
கூறுவதுங்காவிரிக்கு வையையோவம்மானே
ஆருக்குவேம்புநிக ராகுமோவம்மானே
ஆதித்தனுக்குநிக ரம்புலியோவம்மானே
வீரர்க்குள்வீரனொரு மீனவனோவம்மானே
வெற்றிப்புலிக்கொடிக்கு மீன்கொடியோவம்மானே
ஊருக்குறந்தைநிகர் கொற்கையோவம்மானே
ஒக்குமோசோணாட்டுக்குப் பாண்டிநாடம்மானே."

என்று இப்பாடலைச் சொன்னார். அதுகேட்டு அப்பாண்டிய ராஜன் சமஸ்தான வித்வானாகிய மேற்குறித்த புகழேந்திப் புலவர் ஒட்டக்கூத்தப் புலவரை நோக்கி அதற்கு மாறாக,—

"ஒருமுனிவனேரியிலோ வுரைதெளித்ததம்மானே
ஒப்பரியதிருவிளையாட லுறந்தையிலோவம்மானே
திருநெடுமாலவதாரஞ் சிறுபுலியோவம்மானே
சிவன்முடியிலேறுவதுஞ் செங்கதிரோவம்மானே
கரையெதிரல்காவிரியோ வையையோவம்மானே
[illegible]பகைக்குத்தாதகியஞ் சண்ணியோவம்மானே
பரவைப்பணிந்தனுஞ் சோழன்மைந்தனையோவம்மானே
பாண்டியனார்பராக்கிரமம் பகர்வரிதேயம்மானே."

என்று இக்கவியைச் சொன்னார். அப்போதே ஒட்டக்கூ[illegible] புலவருக்குப் புகழேந்திப் புலவர்மேற் பொறாமை யு[illegible]யிற்று. பின்பு பாண்டியராஜன் தன் பெண்ணைச் சோ[illegible]னுக்குக் கலியா[illegible] செய்துகொடுத்துத் தான் அனுப்பிய வரிசையுடன் [illegible] புலவரையும் தன்பெண்ணுக்கு[illegible]ணா யனுப்ப, ஒட்ட[illegible]வன் உமக்குப் பெண்[illegible] வொட்டாமற் றடைசெய[illegible]வனுடைய குலமுதலிய[illegible]

படிக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்று சொல்லி மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டாள்.

இதைக் கேள்வியுற்ற சோழராஜனானவன் புகழேந்திப்புலவரை வெகுநாளாய்ச் சிறைச்சாலையினின்று மீட்காதிருந்த கோபத்தினால் தன்மனைவிக்கு ஊடலுண்டாயிற்றென்று ஊகித்துப் புகழேந்திப் புலவரைச் சிறைநீக்கி ராணியின் கோபத்தைத் தணிக்கும்படி யனுப்ப, அவர் அந்தப்புரம்போய் ராஜஸ்திரீக்கு ஊடல் தணியும்பொருட்டு,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்திய பொற், குழையொன் றிரண்டு விழியணங் கேகொண்ட கோபந் தணி, மழையொன் றிரண்டுகைம் மானா பரணனின் வாசல் வந்தால், பிழையொன் றிரண்டு பொறுப்பரோ குடியிற் பிறந்தவரே",—என்றார்.

இப்பாடலைக் கேட்டவுடனே மகிழ்ச்சியடைந்து இராணி கோபந்தணிந்தாள். அதுமுதல் சோழராஜன் புகழேந்திப்புலவரைப் பரிபாலித்து வந்தான். ஆயினும் ஒட்டக்கூத்தனுடைய பொறாமையினாலும் அவன் பேச்சை யரசன் கேட்பதனாலும் புகழேந்திப்புலவர் அங்கிருக்க இஷ்டமில்லாமல் அந்நாட்டிற் சேர்ந்த மள்ளுவமென்னும் ஒரு சிறியநாட்டில் முரணூரிலிருந்த சந்திரன்சுவர்க்கி யென்னு மரசனிடஞ்சேர்ந்து அவன் விரும்பினபடி நளவெண்பா வென்னும் நூலைச் செய்து பரிசு பெற்று வாழ்ந்திருந்தார்.

பின்பு குலோத்துங்கன் மிக மரியாதையுடன் அவரை வரவழைத்து உபசரித்து நளவெண்பாவைப் பிரசங்கிக்கச் செய்தான். அந்நளவெண்பாவைக் கம்பர் ஒட்டக்கூத்தர் முதலிய வித்துவான்கள் முன்னிலையில் பிரசங்கஞ் செய்துகொண்டு வருகையில்,—

"மல்லிகையே வெண்சங்கா வண்டே தவான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

என்னும் இப்பாடலைச் சொல்லும்போது ஒட்டக்கூத்தப்புல வர் "மல்லிகை யரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கநாதஞ் செய்கிறவனாகவும் கற்பித்தது உசிதமே. சங்கவாத்தியஞ் செய் வோர் அதன் அடியை யல்லவோ வாயில்வைத்து ஊதுவார் கள்; அப்படிக்கு வண்டுகள் அடிப்புறத்தி லூதுகிறதில்லையே, ஆதலால் அந்த வர்ணனை குற்றம்" என்றார்.

அதற்குப் புகழேந்திப்புலவர் "கட்குடியனுக்குச் சூத்தென் றும் வாயென்றுந் தெரியுமா?" என்றார். இவ்வாறு அவர் செய்த துராக்ஷேபங்களுக்கெல்லாம் சாதுரியமான உத்தரஞ் சொல்லி அவர் நாவை யடக்கினார். கம்பர் அவருக்குச் சார்பாய நின்று புகழ்ந்தார்.

ஒட்டக்கூத்தர் புகழேந்திப்புலவரை வெளிக்கு அவமதித்து வந்தும் உள்ளத்தில் அவர் கவித்திறத்தைப்பற்றி வியப்படைந் தே யிருந்தார். ஒருகால் அவர் தன்மனைவியோடு நளவெண் பாவை வியந்து பேசிக்கொண் டிருக்கையில் அவர் வீட்டுப் புறத்தி லொளித்திருந்து கேட்ட புகழேந்தி அவரிடத்திருந்த பகைமையை விட்டு அவர் வீட்டுக்குட் சென்று அவரோடே சிநேகம்பாராட்ட அவரும் மனமுற்றுச் சிநேகம் பாராட்டினார். அரசனும் இச்செய்தி கேட்டுச் சந்தோஷித்து அவ்விருவரையு நோக்கி அந்நாட்டிலுள்ள நெய்த்தான மென்னுந் தலத்துச் சுவாமியின்மேல் "நெய்த்தா னத்தானைச் சேவித்தே" என் பது மகுடமாக சந்தவிருத்தம் பாடும்படி சொல்ல, ஒட்டக் கூத்தர்,

"விக்கா வுக்கா வித்தா விப்போயி
விட்டார் நட்டார் சுட்டேர் புக்கார்
இக்கா யத்தா லைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சு
ழப்பா டத்தீ வெப்பா டப்பூ
ணைக்கா டக்கா னத்தா டப்பே
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே."—

என்கிற பாட்டையும்,—

புகழேந்திப்புலவர்,—

“தற்றோ விப்பூ சற்பா சத்தே
திபா மற்சா கைக்கே திற்பீர்
மூற்றோ விக்கோ விப்பூ சித்தே
மூடா மற்சே வித்தே நிற்பீர்
வற்றுநெட் டோடைப் பாரைச்சேன்
மைபூ கத்தே றித்தா விப்போய்
நெற்றுநெற் றுலைப்பா கிற்சோ
நெய்த்தா னத்தா னச்சே வித்தே.”

என்கிற பாட்டையும் பாடினார்கள்.

மற்றொருநாள் திருக்குறுங்குடி யென்னுந் தலத்
மாள்மேல் வல்லோசையுள்ள கலித்துறைகளைப் பாடு
சின்சொல்ல ஒட்டக்கூத்தர்,—

திக்குளெட் டுக்கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டல
மைக்கடற் பூசரந் தைக்கவிட் டோற்கிட் ம்மாம
விக்குமுற் றிங்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்ட
கொக்குமொ ழிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்

என்றொரு பாட்டும்,

புகழேந்திப்புலவர்,—

எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுநித் தம்ப
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்த
வட்டநெட் டைப்புணி மெத்தையத் தற்கிடம் வா
குட்டினத் துக்தலந் தத்திமுத் தீனுங் குறுங்குடி

என்றொரு பாட்டும் பாடினார்கள். அரசனும் முன்
இருவருக்கும் சமமாகவே நடப்பித்து வந்தான். இவ்
ழேந்திப்புலவர் சோழநாட்டிலிருந்து காலங்கழித்தா

---

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ செயங்கொ
விருத்தமென்னு, மொண்பாவி லுயர்கம்பன் கோவை
தாதிக் கொட்டக்கூத்தன், கணபாய கலம்பகத்திற்
யர்கள் வசைபாடக் காளமேகம், பண்பாகப் பகர்சந்
காச லாதொருவர் பகரொ ணாதே.

---

உ

கடவுள் துணை.

# நளவெண்பா.

## நூற்சிறப்புப்பாயிரம்.

### தெய்வவணக்கம்.

#### விநாயகக்கடவுள்.

நசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
சரிதங் கூற வருந்துணையாம் - ஈசன்
கரியா னனித்தான் கருதுபுகழ் பூண்ட
கரியானனத்தான் கழல்.

In order to relate the great history of Nala, who protects his kingdom, so that his subjects may obtain happiness, I invoke as a help the feet of the renowned elephant-faced Deity, who forms the subject of the contemplations of Siva, Vishnu and Brahma.

(இதன் பதப்பொருள்.) நேசர் - மித்திரர், இதம் கூர - நன்மை மிகும்படி, நிலவலயம் - பூமண்டலத்தை, தாங்கு நளன் - இரக்ஷித்த நளமகாராஜனுடைய, மா சரிதம் - பெருமையுள்ள சரித்திரத்தை, கூற - சொல்வதற்கு, துணையா வரும் - சகாயமாகவரும், (எதுவெனில்), ஈசன் - சிவனும், கரியான் - விட்டுணுவும், அனத்தான் - பிரமனும், கருது - சிந்திக்கின்ற, புகழ் பூண்ட - கீர்த்தியணிந்த, கரி ஆனனத்தான் - ஆனைமுகமுள்ள விநாயகமூர்த்தியினது, கழல் - திருவடி, எ-று.

அனத்தான் — அன்னத்தை வாகனமாக வுடையவன்; அவர்கவால் கருதப்படும் புகழ் மாபாரதம் எழுதியது முதலிய செய்கைகளால் விளைந்தது.

### மற்றொருபாடம்.

#### சடகோபமுனிவர்.

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாய் - பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மகிழ்மா றன்றூண் மலர்.

In order to relate the great history of Nala, who protects his kingdom, so that his subjects may obtain happiness, I invoke as a help the feet of the great Sadagopa Mooniver, who is adorned with wreaths of makizham flowers, and who expounded to the world the Tamil Vedas which contemplate the praise of Vishnu, the lo[ver] of Luckshmi.

(இ - ள்.) நேசர் - மித்திரர், இதம் கூர - நன்மை[...] படி, நில வலயம் - பூமண்டலத்தை, தாங்கு நளன் - இரக்ஷி[...] நளமகாராசனுடைய, மா சரிதம் - பெருமையுள்ள சரித்[...]தை, கூற - சொல்வதற்கு, துணையா வரும் - சகாயமா[...] (எதுவெனில்), பேசரிய - சொல்ல எளிதாகாத, மா[...] மகள், மகிழ் - களிக்கின்ற, மால்தன் - திருமாலினுடைய, புகழாம் - புகழே பொருளாக்கொண்ட, வண் தமிழ் வேதம் - அழகிய தமிழ்வேதத்தை, விரித்த - வெளியிட்ட, மா மகிழ் - மேன்மையான மகிழம்பூமாலை யணிந்த, மாறன் - சடகோப முனிவருடைய, தாள் மலர் - திருவடியாகிய தாமரைமலர்,

தமிழ்வேதம் - திருவாய்மொழிமுதலிய பிரபந்தங்கள்.

## விஷ்ணுமூர்த்தி.

ஆதித் தனிக்கோல மானா னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான் - வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
என்னென்றா னெங்க ளிறை.

He is our god, who has incarnated as the matchless Varaca, who has for the sake of his devoted follower Pracalatha, issued forth from the great and holy pillar, who is contemplated as the head of the Vedas, and who, when the elephant cried out for help saying "O thou original cause" appeared and enquired into the reason of the cry.

(இ-ள்.) ஆதி - முதல்வனை, தனி - ஒப்பற்ற, கோலம் ஆனான் - வராக அவதாரமானவனும், அடியவற்கு ஆ - அடியவனாகிய பிரகலாத ஆழ்வானுக்காக, சோதி - ஒளிபொருந்திய, திரு தூணில் - மேன்மையான தூணில், தோன்றினான் - அவதரித்தவனும், வேதத்தின் - வேதங்களுக்கு, முன் - முதலாகிய பி[...]

As is the tying of the furious and angry elephant with the sweet-smelling fibre of the lotus plant, so is this attempt of mine to sing the divine and excellent history of Nala, who ornaments himself with wreaths made of fresh flowers upon which the bees sing.

(இ - ள்.) பைந் தொடையில் - பசுமையான மலர்களில், தேன் பாடும் - வண்டுகள் பாடப்பெற்ற, தார் - மாலையணிந்த, நளன்தன் - நளனுடைய, தெய்வத் திருக்கதையை - தெய்வத் தன்மையுள்ள சிறப்பான கதையை, யான் பாடலுற்ற இது - நான் பாடத்தொடங்கிய இச்செய்கை, வெம் தறுகண் - உக்கிர மான கோபம் உள்ள, வேழத்தை - யானையை, வேரி கமலத்தின் - வாசனையுள்ள தாமரையினது, தந்துவினால் - நூலினால், கட்ட - கட்டுதற்கு, சமைவது - முயன்றதை, ஒக்கும் - ஒத்திருக்கும், எ - று.

## ஆசிரியன்பேயர்.

பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொண்
மொழியின் சுவையே முதிர்ந்து.

The famous Pukazhanthi, whose poetical excellence obliged Pandia and Chola kings adorned with victorious garlands to protect him, related the renowned history of Nala, the king of the great country of Nidhatha, in Venba metre, clothed in words pregnant with meaning.

(இ-ள்.) தார் ஆர் - (வெற்றி) மாலைகள் பொருந்திய, செழியனையும் - பாண்டியனையும், சென்னியையும் - சோழனையும், சேர - ஒருமிக்க, திறை கொள் - அடிமையாக்கிய, மொழியின் சுவை - சொற்சுவையானது, முதிர்ந்து - முதிர, வெண்பாவால் - வெண்பாக்களால், பார் ஆர் நிடதம் - பூமியில் (பெருமை) பெற்றிருந்த நிடததேசத்தின், பதி - அரசனாகிய, நளன் சீர் - நளமகாராசனுடைய சிறப்புள்ள சரித்திரத்தை, பேர் ஆர் - (நல்ல) பேர் பெற்ற, புகழேந்தி - புகழேந்திப்புலவர், பேசினான் - பாடினார், எ - று.

புகழேந்திப்புலவருடைய கவித்திறத்தை நன்கறிந்து வரகுணபாண்டியனும் குலோத்துங்கசோழனும் ஆதரித்துவந்ததைக் குறிக்க "தாரார் செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொள்" என்றார்.

6

கடவுள் துணை.

# நளவெண்பா.

## மூலமும் உரையும்.

நளனைக்குறித்துச் செய்யப்பட்ட வெண்பா என்பது பொருளாம். வெண்பா — வெண்பாவாலாகிய நூல்; இது கருவி ஆகுபெயராய் நின்றது. நளசரித்திரமுணர்த்திய வெண்பாவாலாகிய நூல் என்பது திரண்ட பொருள். இதை நளனது வெண்பா என ஆறும்வேற்றுமைத் [ ] தொகையாக் கொண்டாலும் பொருந்தும். விஷயமாயிருத்தல் வேற்றுமைப் பொருளாகிய சம்பந்தம்; ஆகவே நளனை விஷயமாகக்கொண்ட வெண்பா என்பதாம். இருவகையிலும் கருத்திற் பேதமில்லை.

---

## சுயம்வர காண்டம்.

தமயந்தியின் சுயம்வரத்தைக்குறித்துக் கூறிய காண்டம் எனப் பொருள் கொள்க. சுயம் - தன்னாலே, வரம் - வரித்தல், [இவன் கணவன் என்று ஏற்படுத்திக்கொள்ளல்]; காண்டம் என்பதற்குக் கூட்டம் என்பது பொருள். ஆதலின் சுயம்வரத்தைக் குறித்த கதைகளின் கூட்டத்தை யுணர்த்திய பிரிவு என்பது கருத்து.

## நூல்.

1. பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்
றொருநாள், ஆண்டகையே தூதுவனாய்ச் சென்
றவனி — வேண்ட, மறுத்தா னிருந்தானை மண்
ணொடும்போய் மாளப், பொறுத்தா னிருந்தான்
புலர்ந்து.

1. Dharma, the first born of the sons of Pandu whose patience after the loss of his dominions at the game at dice, saw the destruction of Thuriyothana with his great armies, and who (latter) one day refused to restore

the lost dominions at the request of Krishna who went to him as a mediator, lived downcast in a forest.

(இ-ள்.) பார் முழுதும் - பூமிமுழுதையும், தோற்று - தோற்றுவிட்டு, ஒரு நாள் - ஒருகாலத்தில், ஆண் தகையே - ஆண்மைக்குண நிறைந்த கண்ணனே, தூதுவனாய் - தூதனாகி, சென்று - போய், அவனி - பூமியை, வேண்ட - தரும்படி கேட்கவும், மறுத்தான் - (அங்கீகரியாமல்) தடுத்தவனாகிய துரியோதனன், இரு தானை - பெரிய சேனையோடும், மண்ணொடும் - பூமியோடும், போய்—, மாள - நாசமாகும்படி, பொறுத்தான் - (மனங்கோணாமல்) பொறுத்துக்கொண்டிருந்த, பாண்டவரின் முன் தோன்றல் - பாண்டு குமாரருக்குள் முதல்வனாகிய அரசன் [யுதிட்டிரன்], புலர்ந்து - (துக்கத்தினால்) வாடி, இருந்தான் - (வனத்தில் வாசஞ்செய்துகொண்) டிருந்தனன், எ-று.

கண்ணன் தூதுசென்று பூமிவேண்டியது வனவாசத்தின் பின்னதாயினும், இந்நூல் செய்வதற்கு முற்பட்டதாகலின் அவர் பொறுமையைச் சிறப்பிக்கும்பொருட்டு ஈண்டு எடுத்துக் கூறினாரென் றறிக.

பாண்டவர்—பாண்டு என்கிற அரசனுடைய புத்திரர், தத்திதாந்த வடமொழி. தோன்றல்—தோன்றுதல், அதாவது விளங்குதல், அல்லது உதித்தல், தொழிற்பெயர்; தோன்று - பகுதி, அல் - விகுதி, உகரக்கேடு - சந்தி, ஆகுபெயராய் அரசனைக்காட்டியது; இந்த அல் விகுதியையே அநுபவத்தினால் கர்த்தாப் பொருளைக் காட்டுவதெனக் கொள்வது நேர். முன்தோன்றல்—முன்னாய தோன்றலெனப் பண்புத்தொகையாகக் கொள்ளலாம். முன் தோன்றல் - முன் பிறந்தவன், தமையன் எனவும் பொருள் கொள்ளலாம். தோற்று—வினையெச்சம், இருந்தான் என்பதைக்கொண்டு முடிந்தது. தோல் - பகுதி, ல் ற் ஆனது சந்தி, ற் - இறந்தகால இடைநிலை, உ - விகுதி. ஒருநாள்—பண்புத்தொகை. தகை—தகுதி, அதாவது சற்குணம், இது தொழிலடியாகப்பிறந்த தாயினும் பொருளாற் பண்புப்பெயர்; தகு - பகுதி, ஐ - விகுதி; முற்றியலுகரமாயினும் "முற்று மற்றொ

ரௌவுதி" என்பதனால் உகரம் கெட்டது; உடையவனுக்கு ஆகுபெயர். பறவை என்பதில்போல ஐ கர்த்தாவைக் காட்டுவதெனவுங் கொள்ளலாம். ஆன்றகை — இது பண்புப் பெயராயின், ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்; கர்த்தாப்பெயராயின், பண்புத்தொகை; ஆன்றகை ஆன்றதகை எனவிரியும்; கருத்தில் ஆண்மைக்குண முள்ளவ னென்பதாம். இங்கு ஏகாரம் சிறப்பில் வந்ததெனக் கொளல்வேண்டும். தூதுவன் — தூது (=தூதத்தன்மை) - பகுதி, அன் - ஆண்பால் விகுதி, குற்றுகரம் கெடாது வகர வுடம்படுமெய் தோன்றியது சந்தி. வேண்ட என்பது காரணப்பொருட்டால் வந்த செயவெனெச்சம். இதன்மேல் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மறுத்தான் — வினையாலணையும் பெயர், மறு - பகுதி, ஆன் - விகுதி, த் - இடைநிலை, த் - சந்தி. மறுத்தான் இருந்தானை — தரமாட்டேன் என்று மறுத்துத் தான் ஸ்திரமாயிருந்த துரியோதனனை என்றும் பொருளுரைக்கலாம். அப்போது மறுத்தானென்பது முற்றெச்சம், இருந்தான் என்பது வினையாலணையும்பெயர். மாள — காரியப்பொருட்டாய் வந்த செயவெனெச்சம். இகழப்பட்டவர் பொறுத்தல் இகழ்ந்தோர்க்குக் கேடாதலின், 'இருந்தானை மண்ணொடும்போய் மாள' என்றார். இருந்தானைமண் — உம்மைத் தொகையுமாம். முதலும்மை முற்றுப்பொருளது; இரண்டாவது எச்சவும்மை. (க)

2. நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறை
ஈட்டங்கள் சூழ விருந்தானைக் - காட்டில் [யோர்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள்
வருந்தகைய ரெல்லாரும் வந்து. [வேந்தர்

2. Dharma, having left his wealth behind him in his country, lived in a forest surrounded by a crowd of Brahmins, where kings with beautiful shoulders, who were fit visitors, came to see him.

(இ - ள்.) நாட்டின்கண் வாழ்வை - நாட்டில் உண்டாகிய போகத்தை, துறந்து போய் - விட்டுப்போய், நான் மறையோர் - பிராமணருடைய, ஈட்டங்கள் - கூட்டங்கள், சூழ - சுற்றிக்கொண்டிருக்க, காட்டில் - வனத்தில், இருந்தானை -

வாசஞ்செய்துகொண்டிருந்தவனாகிய, பெருந்தகையை - பெரிய குணமுள்ள யுதிட்டிரமகாராஜனை, வரும் தகையர் - வளரும் குணமுள்ளவராண, பேர் எழில் தோள் - மிகுந்த அழகுள்ள புசங்களையுடைய, வேந்தர் எல்லாரும் - அரசர் யாவரும், வந்து - (அக்காட்டிற்கு) வந்து, கண்டார்கள் —, எ-று.

காட்டின்கண் என்னுமிடத்தில் சாரியை னகரமாதலின் "இடையுரி" என்கிற [மெய் - புணரியல் ௩௬ - ஆம்] சூத்திரப்படி றகரமாகத் திரியவில்லை. "ஒரு பொருண்மேல்" என்கிற சூத்திரவிதியை "இருந்தானைப் பெருந்தகையை" என்னுமிடத்துக் கொள்க. நான்மறையோர்—நான்குவேதங்களை ஓதுவோர் என்க் காரணக்குறி. மறை—யாவர்க்கும் சாதாரணமாகாமல் மறைக்கப்படுதலால் மறை; செயப்படுபொருள் விகுதி குன்றியது. ஈட்டம் — ஈண்டு - பகுதி, அம் - தொழிற்பெயர் விகுதி, ணகரம் டகரமாக வலித்தது விகாரம்; சேர்ந்தவர்களுக்கு ஆகுபெயர். பெருந்தகை — பண்புத்தொகை, இதன்மேற் பிறந்த அன்மொழித்தொகையு மாகலாம். ஆண்டகை என்பதனையும் இவ்வாறு கொள்ளலாம். வருந்தகையர் — வருவதற்குத் தகுதி யுள்ளவர்கள் எனவும் உரைக்கலாம். தோளுக்கு எழிலாவது திரண்டு ஓங்கி வீரத்தனத்தைக் குறிப்பிக்கும்படியான நிலை, கண்டார்கள்—வினைமுற்று, (காண் குறுகிய) கண் - பகுதி, ட் - இடைநிலை, ஆர், கள் - விகுதிகள். (௨)

3\. கொற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீ ஞாலத் திருணீங்க - முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி.

3 The sage Vyasa, who, to remove the dark ignorance of the world which is surrounded by the moving waters, taught his disciples the Vedas which were traditionally handed over to him, and who embodied the puranas in a compact form, came and visited Dharma, the king of the Kuru country, who possessed armies with victorious weapons.

(இ - ள்.) எற்றும் - எறிகிற, நீர் - கடல்சூழ்ந்த, ஞாலத்து - பூமியிலுள்ள, இருள் - (அஞ்ஞான) இருள், நீங்க - நீங்கும்படி

8



றுட்டு, முற்றும் - முழுவதும், வழி முறையே - ஆசாரிய பரம்பரையால், வந்த - (தனக்கு) ஓதக்கிடைத்த, மறை எல்லாம் - நான்கு வேதங்களையும், தந்தான் - சீஷர் மூலமாகப் பரவச் செய்தவனாகிய, மொழி - (புராண) மொழிகளை, முறையே - வரன் முறையாக, கோத்த - (சுருக்கி) நூல்செய்த, முனி - வியாசமுனி, கொற்ற வேல் தானை - ஜயமுள்ள வேலேந்திய சேனையையுடைய, குரு நாடனபால் - குருநாட்டின் அரசனாகிய யுதிட்டிரனிடத்து, அணைந்தான் - வந்து சேர்ந்தான், எ-று.

"வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்த மொழிமுறையே" எனவும் பாடம். தந்தமொழி முறையே—அவ்வவற்றின் வாயிலியுக் கிரமங்களின்படி எனப் பொருள்கொள்க; அதாவது இருக்கு முதலியவைகளைத் தனித்தனியே ஒன்றாகச் சேர்த்தவர் என்பது கருத்து. ஆதியில் வேதங்களும் புராணங்களும் ஒன்றாயுண்டாயினவென்று சாஸ்திர மிருப்பதால் மொழி என்பதற்கு வேதமல்லாத மொழி புராணம் என்று பொருள் கொள்ளப்பட்டது. வரன்முறையாவது எந்தெந்தச் சரித்திரம் எதெதி லிருக்கவேண்டுமோ அவ்வவ்வகையாம். முதல் இரண்டு என்கிற வரிசை யெனினும் ஒக்கும்.

கொற்றம்—கொல் - பகுதி, அம் - தொழிற்பெயர் விகுதி, று - சாரியை, பகுதி லகரமும் சாரியைத் தகரமும் றகரமாகிய சந்தி, உகரக்கேடும் அதுவே; ஜயம் என்பது பொருள்.

நீங்க என்பது தந்தான் கோத்த என்பவைகளோடு கூடும். புராணங்கள் அவரவரால் செய்யப்பட்டவாயினும் நெடுங்காலமானது பற்றிச் சிதைந்துபோயின வாதலால் அவற்றை முறையே கோத்தார் வியாசமுனிவர். தந்தான் என்பதை முனியோடு கூட்டுக. (௩)

4. மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம் - அறவே
பிழைத்தேனயா வென்றானப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட வரசு.

4. The king (Dharma), who sent for Krishna, and employed him as his messenger, addressing Vyasa said:

"O thou author of the Vedas! I have had the pleasure of seeing you come hither, and have in consequence escaped the great troubles arising from transmigration.

(இ - ள்.) அ பேர் ஆழியானை - அந்தப் பெரிய சக்கராயுத முடைய கண்ணனை, அழைத்து - (தம்மிடம்) வருவித்து, ஏவல் கொண்ட - (தூதுசெல்லும்படி) ஏவலாளாகக்கொண்ட, அரசு - யுதிட்டிர மகாராஜன், (அம்முனிவரைநோக்கி) மறை முதல்வ - வேதத்துக்கு ஆதாரமானவனே, பிறவி பெரு துயரம் எல்லாம் - பிறவியைப்பற்றிவரும் மூவகைத்துன்பங்களும், அற - நீங்க, நீ இங்கே—, வந்து அருளப் பெற்றேன் - கிருபைசெய்து வரப் பாத்திரமானேன், (ஆதலால்) யான் - நான், பிழைத்தேன் - தப்பினேன் [கடைத்தேறினேன்], என்றான் - என்று சொன்னான், எ-று.

நீ யிங்கே வந்தருளப்பெற்றேன் அதனால் பிறவிப் பெருந் துயரமெல்லாம் அறவே அற்றதனால், பிழைத்தேன் என்றான் எனக் கூட்டியு முரைக்கலாம். வந்து அருள - வந்து கிருபை செய்ய, பெற்றேன் என்னவுமாம். பெறுதல் செயப்படு பொருள் குன்றுவினையாதலால் செயவெ னெச்சத்தைத் தொழிற்பெயராகக்கொண்டு செயப்படுபொருளாக்குக. பிறவி பற்றிய துன்பங்களாவன:—ஆத்தியாத்துமிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என்பன. ஆதியாத்துமிகம் என்பது சரீரத்தைப்பற்றிவருந் தலைநோய் முதலியவையும் மனதைப்பற்றிய காமக் குரோத முதலியவையுமாம். ஆதிபவுதிகம் என்பது மனிதர் மிருகம் பிசாசு முதலியவைகளால் நேரிடுவதாம். ஆதிதெய்விகம் என்பது காற்று மழை வெயில் முதலியவைகளா லுண்டாவதாம்.

(என்றான்—என் - பகுதி, இடைச்சொல்; விதம் என்பது அதன்பொருள்; ற் - இறந்தகால இடைநிலை, ஆன் - ஆண்பால் விகுதி; என்று சொன்னான் - இவ்விதமாகச் சொன்னானென்பது பொருள். என்று, என்றால், என, முதலிய எச்சங்களுக்கும் இவ்வாறே யுரைத்துக்கொள்க. (௪)

5. மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் தாவேரனே - சித்தம் [ப

வருந்தியவா றென்னென்றான் மாமறையா லுள்ளந்
திருந்தியவர் மெய்த்தவத்தோன் றேர்ந்து.

5. The great sage Vyasa whose mind is purified by the Vedas, seeing Dharma uneasy, addressed him thus: 'O thou who art equable in temper whether true prosperity or heavy affliction befalls thee! What is the cause of thy sorrow?'

(இ-ள்.) மா மறையால் - பெருமையான வேதத்தினால், உள்ளம் திருந்தி - மனம் சுத்தமாகி, அவாம் - இச்சிக்கத்தக்க, மெய் தவத்தோன் - மெய்யான தவஞ்செய்பவனாகிய வியாச முனிவன், தேர்ந்து - (காரியத்தை) அறிந்து, (அரசனை நோக்கி) மெய் திரு - மெய்யாகிய செல்வம், வந்து உற்றாலும் - வந்து சேர்ந்தாலும், வெம் துயர் - கொடிதான துன்பம், வந்து உற்றாலும் —, ஒத்திருக்கும் - (மாறுபடாமல்) ஒரு தன்மையதாய் இருக்கின்ற, உள்ளத்து - மனத்தையுடைய, உரவோனே - வலிமையுள்ள அரசனே, சித்தம் - (உமது) மனம், வருந்திய ஆறு - வருத்தப்பட்ட விதம், என் என்றான் - என்னவென்று வினவினான், எ-று.

மெய்த்திருவாவது நன்மைக்குக் காரணமாயும் நிலைபெற்றிருக்கத்தக்கதுமான செல்வம்.

உற்றால் — உறு - பகுதி, உற்று என விகாரப்பட்டு, ஆல் என்னும் எதிர்கால வினையெச்சவிகுதி புணர்ந்தது. அவாம் — அவாவும் என்னும் செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சம் "செய்யுமெனெச்ச வீற்று" என்கிற [வினையியல் - உஉ - ஆம்] சூத்திரத்தினால் வு - என்னும் உயிர்மெய் கெட்டு வந்தது. திருந்தி என்னும் எச்சம், சினைவினையாதலின் அவாம் என்பதைக்கொண்டது; காரணப்பொருட்டாய் வந்த செயவெனெச்சத் திரிபெனவுங் கொள்ளலாம். உள்ளம் திருந்தியதனால் மெய்த்தவத்தை அவாவினவன் என்பது கருத்து. உரவோன் — உரம் - பகுதி, ஆன் - ஆண்பால் விகுதி, மகரக்கேடும் வகரந் தோன்றியதும் சந்தி, ஆ ஓ ஆயிற்று; உரவு - பகுதி யெனினும் ஒக்கும். என் — எவன் என்கிற அஃறிணை வினைக்குறிப்பு இடைக்குறைந்தது. இது இகர ஐகாரச் சாரியைகளைப்பெற்று என்ன என்னை என்றும் வரும்.

6. அம்பொற் கயிலைக்கே யாகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமியனு - எம்பியைமுன்
போக்கினே னென்றுரைத்தான் பூதலத்து மீதலத்
வாக்கினே ரில்லாத மன். [தும்

6. The king (Dharma) whose veracity was matchless, alike on earth or in heaven, answered (Vyasa) saying—"I have already sent my brother, alone to the resplendant Kailasa, which is fabricated of silver, to obtain a golden weapon from Him whose body is adorned with serpents."

(இ - ள்.) பூதலத்தும் - பூமியிலும், மீதலத்தும் - மேலுலகத்திலும், வாக்கில் - (சத்திய) வசனத்தில், நேர் - இல்லாத - ஒப்பில்லாத, மன் - யுதிட்டிரராஜன், அம் பொன் - அழகிய வெள்ளியாலாகிய, கயிலைக்கு - கயிலாசமலைக்கு, ஆகத்து - திருமேனியில், அரவு அணிவார்தம் - சர்ப்பங்களை ஆபரணமாகத் தரித்த சிவபிரானது, பொன் படைக்கு - பொன்போற் சொலிக்கும் அஸ்திரம் பெறுவதற்காக, எம்பியை - என் தம்பியாகிய அருச்சுனனை, தமியன் ஆ - ஒருவனாக, முன் - முன்னமே, போக்கினேன் - அனுப்பினேன், என்று—, உரைத்தான் - (அம்முனிவருக்குச்) சொன்னான், எ-று. ஏ - அசை.

பொன் என்பது பசும்பொன், செம்பொன், வெண்பொன், கரும்பொன் என்று பலவற்றிற்கும் பொதுப்பெயரா நிற்றலின் இங்கு வெள்ளிக்குக் கொள்ளப்பட்டது.

கயிலைக்கு—குவ்வுருபு இடப்பொருளில் வந்து மயங்கிற்று. படைக்கு — குவ்வுருபு பொருட்டுப்பொருளில் வந்தது. ஆ— ஆக என்பதில் ஈறுதொக்கது.

போக்கினேன்—பிறவினை, போக்கு - பகுதி, [போ - தன்வினைப்பகுதி, கு - பிறவினைவிகுதி], இன் - இடைநிலை, ஏன் - விகுதி.

7. காண்டா வனந்தீக் கட்டவுணக் கைக்கணையால்
நீண்ட முகிறடுத்து நின்றாற்கு - மீண்டமரர்
தாளிரண்டு போவத் தனித்தனியே யோடியநாள்
தோளிரண்டு மன்றே துணை.

7. On the day that he defeated the celestials, and made them flee, each in his own way, thus causing pain to both feet, were not his two shoulders a help to him who in order that the God of fire might consume the forest of Kanda, standing, prevented, with an arrow he held in his hand, the wide-spread clouds from pouring down rain."

(இ - ள்.) காண்டா வனம் - காண்டவமெனகிற வனத்தை, தீ கடவுள் உண - அக்கினிதேவன் உண்ணும்படி, கை கணை யால் - கையில் தரித்த அம்பினால், நீண்ட முகில் - பெரிய மேகங்களை, தடுத்து - (மழைபெய்ய வொட்டாமல்) நிறுத்தி, நின்றற்கு - நின்ற அருச்சுனனுக்கு, அமரர் - தேவர்கள், மீண்டு - (அங்கு நின்றும்) திரும்பி, தாள் இரண்டும் - இரண்டுபாதங்களும், நோவ - துன்பப்பட, தனித்தனியே - ஒருவரோடு ஒருவர் சேராமல், ஓடிய நாள் - ஓடிப்போன காலத்தில், தோள் இரண்டும் அன்றோ - இரண்டு புஜங்களும் அல்லவோ, துணை - துணையாயிருந்தன, எ-று.

துஷ்டரான அசுரர் முதலானோர்கள் சேர்ந்து மிக்க நெருக்கமும் கொடுமையுமா யிருந்த காண்டவவனம் என்கிற பெருங்காட்டை அக்கினிபகவான் எரிக்க நினைத்துத் தேவேந்திரன் தன் தோழனாகிய தக்ஷகனுடைய குடும்பத்திற்காக அதைப் பாதுகாத்து வந்ததனால் அவனுக்கு அஞ்சி ஒரு பிராமணன் போல் வந்து அர்ச்சுனனை யர்சிக்க அவன் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அனுமதியினால் எரிக்கும்படி உத்தரவு கொடுக்கவே அக்கினி அதிற் பற்றிக்கொண்டு தகித்தது. அப்போது இந்திரன் மேகங்களைக்கொண்டு மழை பொழிகையில் அதைப் அருச்சுனன் தடுத்தமையால் தேவதைகள் தன்மேல் எதிர்த்துவர அவர்களை முறியவடித்து ஓட்டினான் என்பது பாரத கதை. இப்படிப்பட்ட சுத்தவீரனுக்காக நீயேன் மனக்கவலைப் படுகிறாயென்று முனிவர் அரசனுக்குச் சொன்னார்.

காண்டாவனம்—காண்டவவனம் என்பதின் திரிபு. தீக்கடவுள் தீயினது கடவுள், தீயாகிய கடவுள், என ஆறும் வேற்றுமைத் தொகையும் பண்புத் தொகையுமாம். முகிற்கு— "குறில் செறியாலள" என்கிற சூத்திரத்தில் 'ஒள் பிற' என்

பதனுல் வேற்றுமையிலும் லகரம் கெட்டதெனக் கொள்க
ஓசை நயம் பயன். (௭)

8. பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானஞ் சேர்தற்குக் - காரணந்தான்
யாதோவப் பாவென்றா னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய்.

8. The king (Dharma) who always, under his white umbrella, i. e. upright rule, protected his kingdom from evil, said;—"O Father, I know not the cause which led me to lose my extensive dominions, and my great wealth, and to come to this inaccessible aud sultry desert.

(இ - ள்.) [இப்படிச்சொல்ல முனிவரை நோக்கி] என்றும் - எப்போதும், தன் வெண் குடைக்கீழ் - தன்னுடைய வெண்மையான குடைநிழலில், தீது - துன்பம், ஓவ - ஒழிந்துபோக, பார் - பூமியை, காத்த சேய் -- பரிபாலனஞ்செய்த அரசன் [தருமராஜன்], அப்பா - அப்பனே, எங்கள் - எங்களுடைய, பேர் அரசும் - பெருமையான அரசாட்சியும், பெருந்திருவும் - பெரிய செல்வமும், கைவிட்டு - இழந்து, சேர்வு அரிய - சேர்தற்குக்கூடாத, வெம் கானம் - கடினமான கானகத்தை, சேர்தற்கு - அடைதற்கு, காரணம் யாது - என்ன காரணம், என்றான்—, எ-று.

தான் - ஓ - அசை. அப்பா என்பது இரக்கச் சொல்லுமாம்.

பேர்—பெருமையில் மை கெட்டு உயிர் முதன்மொழி வருதலால் ஈறுகெட்டு முதல் நீண்டது, "முற்றுமற்றொரோவழி" என்பதனால் உகரம்கெட்டதெனவுமாம். பெருந்திரு—இங்கு இனமிகல். சேர்வு—தொழிற்பெயர், நான்காம் வேற்றுமைத் தொகை. வெண்குடைக்கீழ் பார்காத்தலாவது நல்லரசாட்சியால் ஜனங்களைக் காத்தல். (அ)

9. கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
வேட்டவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் - வாடிக்
கலங்கலைநீ யென்றுரைத்தான் காமருவு நாட்டி
லிலங்கலைநூன் மார்ப னெடுத்து.

9. The sage (Vyasa) whose breast was adorned with he shining and moving thread said to him (Dharma) who ossessed the kingdom which was surrounded by extensive roves,—"Faint not thou in despair, for dost thou not ee that it is the nature of kings, who wear garlands of etal-opened flowers, to play at dice, which is fatal to heir inexhaustible great wealth."

(இ-ள்.) கேடு இல் - கெடுதியில்லாத, விழு செல்வம் - பெரு மையான செல்வம், கேடு எய்த்து - நாசம் அடையத்தக்க, சூது ஆடல் - சூதம் ஆடுவது, எடு அவிழ் - பூவிதழ்கள் விரியப்பெற்ற, தார் - மாலையணிந்த, மன்னர்க்கு - அரசருக்கு, இயல்பே - சுபாவமேயாம்; (ஆனதால்) நீ வாடி கலங்கலை - நீ உடம்பு மெலிந்து மனங் கலங்க வேண்டாம், என்று—, கா மருவு - சோலை நெருங்கின, நாடற்கு - நாட்டையுடைய அரசனுக்கு, [யுதிட்டிரனுக்கு], இலங்கு - விளங்காநின்ற, அலை - அசை கின்ற, நூல் மார்பன் - பூணூலை மார்பில் அணிந்த முனிவன், எடுத்து உரைத்தான் - எடுத்துச்சொன்னான், எ-று.

இலங்கலை நூன்மார்பன் என்பதற்கு விளங்காநின்ற அலை போலுஞ் சொற்பெருக்குடைய சாஸ்திரங்களை இருதயத்தில் தரித்தவன் எனவும் பொருள் கொள்ளலாம்.

ஏகாரம் தேற்றத்தில் வந்தது. காண் - அசை; நீபார் என வும் பொருள் கொள்ளலாம். கலங்கலை என்பதில் ஐ சாரியை; கலங்கல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. கலங்கு என்ப தோடு எதிர்மறையைக் காட்டும் அல் சேர்ந்த கலங்கல் என வும் பகுதிமேல் ஐ முன்னிலை யொருமை விகுதி வந்த தெனவுங் கொள்ளலாம். ஆயினும் மறுத்தலே பொருளான இல் எதிர்மறைவினைக்கு வருமல்லது (பாயுதாஸம்) மற்றொன்றற் றுவும் பொருளதான அல் என்பது வருவது நேரன்றென அறிக. இலங்கு அலை என்னும் இரண்டு வினைத்தொகையு மடுக்கி நூல் என்னும் பெயரைக்கொண்டன. விழுச்செல்வம்—விழுப்ப மாகிய செல்வம் எனப் பண்புத்தொகை. எய்த சூது—வினைத் தொகையிலைத்தொடர். எடுத்து உரைத்தலாவது காரணங்க ளோடு விவரித்துச்சொல்லுதல். (௯)

10. கண்ணிழந்து மாயக் கவறாடிக் காவலர்தாம்
மண்ணிழந்து போந்து வனநண்ணி - விண்ணிழந்த
மின்போலு நூன்மார்ப மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர்.

10. O thou that hast on thy breast, thread as brigh
as lightning descended! Are there any kings on this eart
who like myself have lost their wisdom and involve
themselves in difficulties and troubles, by playing
deceitful dice, thus losing their kingdom and being force
to retire to the forest.

(இ-ள்.) விண் இழந்த - வானத்தை விட்டுவந்த, மின் போ
லும் - மின்னலை யொத்த, நூல் மார்ப - பூணூலோடுகூடிய
மார்பையுடையவனே, மேதினியில் - பூமியில், என் போல் -
என்னைப்போல, கண் இழந்து - விவேகங்கெட்டு, மாய கவறு -
மோசத்துக்கிடமாகிய சூதை, ஆடி—, மண் இழந்து - பூமி
யைத் துறந்து, போந்து - போய், வனம் - காட்டை, நண்ணி -
சேர்ந்து, இடர் - ஆபத்தினால், உழந்தார் - வருந்தினவரான
காவலர் - அரசர், வேறு உண்டோ—, (என்று யுதிட்டிரன்
வினவினான்,) எ-று. தாம் - அசை.

கண் - உவமையாகுபெயர், காண் என்னும் பகுதி முதல்
குறுகி கருவிப்பொருள் விகுதி கெட்டு வந்தது; காண்பதற்கு
கருவியாயுள்ளது; அல்லது கண் - கண்ணுதல் = சிந்தித்தல்
இப்பகுதிமேல் அவ்விகுதி குன்றிவந்ததெனவுங் கொள்
போந்து — போ - பகுதி, உ - விகுதி, த்-இறந்தகால இடை
நிலை, சந்தியால் இரட்டித்த தகரம் நகரமாய் விகாரப்பட்ட
இது புகுந்து என்பதின் விகாரம் எனவுங் கொள்வர். காவலர் -
காவல் அர் எனப்பிரித்து காக்கும் அதிகாரமுடையவர் எ
வும், கா வலர் எனப் பிரித்து காத்தலில் வல்லவர் எனவு
கொள்ளலாம். புரவலர் முதலானவையு மிப்படியே. கா - மு
னிலைத் தொழிற்பெயர். வேறு — குறிப்பு வினையாலணையு
பெயர், "வேறில்லை யுண்டைம்பான் மூவிடத்தன" வினை
உ0-சூத்திரம்.] (கo

11. சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிச்
(க)நாமவேற் காளை நளனென்பான் - யாமத் [கோ

தொலையாழி வையமொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை.

11. (Vyasa) related to king Dharma, who was possessed of dreadful weapons, the story of the hero Nala, who had a straight unequalled sceptre, and who at midnight was made by Kali to lose the whole of his kingdom, which was surrounded by the roaring ocean.

(இ-ள்.) செம் தனி கோல் - செம்மையாகிய ஒப்பற்ற செங்கோலையும், நாமம் வேல் - பயத்தை யுண்டாக்கும்படியான ஆயுதத்தையும் உடைய, காளை - வீரனான, நளன் என்பான் - நளன் என்று சொல்லப்பட்டவன், யாமத்து - நடு இராத்திரியில், ஒலி - (விசேஷமாக) ஒலிக்கின்ற, ஆழி - சமுத்திரஞ் சூழ்ந்த, வையம் - பூமியை, கலியால் - கலிபுருஷனால், ஒருங்கு - ஒருமிக்க [சேர்ந்ததாய்], இழப்ப - இழந்துபோகும்படி, பண்டு - பூர்வத்தில், விளைந்த கதை - நேர்ந்த கதையை, சேமம் - காவல் செய்யத்தக்க, வேல் - ஆயுதத்தைத் தரித்த, மன்னனுக்கு - தருமபுத்திர மஹாராஜனுக்கு, செப்புவான் - சொல்லத்தொடங்கினான் (அந்த வியாசமுனி), எ - று.

ஒலி — வினைத்தொகை. ஒருங்கு — வரிப்புனைபந்து என்பதுபோல் முதனிலையே வினையெச்சமாக வந்தது. செப்புவான் என்பது இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமானது. [பொதுவியல் - ௩௩ - ஆவது - சூ.] ஆழி — ஆழ் - பகுதி, இ - இடப்பொருளைக்காட்டும் விகுதி, எதுவும் அமிழ்ந்துபோகுமிடம் என்பது பொருள்; அல்லது ஆழ்தல் — தாழ்தல், அதனையுடையது எனவுமாம். அப்போது, விகுதி கர்த்தாவைக்காட்டும். காளை னென்பான் என்னு மெழுவாய் இழப்ப என்பதிலும், இழப்ப என்னும் வினையெச்சம் விளைந்த என்னும் பெயரெச்சத்திலும் முடிந்தன. வியாசமுனி — தோன்றா எழுவாய்; செப்புவான் — பயனிலை; கதை - செயப்படுபொருள். (கக)

12. காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப் பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

12. The country (of Nala), where the tank fish glide along gracefully, where the buds of the dark-lilly blossom, and where the good honey-comb of the lotus bursts open, and which is worthy of pre-eminence in this good earth surrounded by water, is like the sporting of the eyes of the goddess of the earth.

(இ - ள்.) சாகரம் சூழ் - சமுத்திரம் சூழ்ந்த, நல் நாட்டில் - நல்ல தேசங்களில், முன் நாட்டும் - முதலிலே வைக்கத்தக்க நாடு - (நளனுடைய) தேசமானது, காமர் - அழகாகிய, கயல் - மீன்கள், புரள - புரண்டுவருதலாலும், காவி முகை - நீலோற்ப‌ல முகிழ்கள், நெகிழ - மலர்தலாலும், தாமரையின் - தாம ரைப்பூவினது, செம் தேன் தனை - நல்ல தேனோடுகூடிய கட் டானது, அவிழ - விரிதலினாலும், பூமடந்தைதன் - திருமக ளுடைய, நாட்டம் போலும் - கண்ணையொத்த, தகைமைத்து - குணமுள்ளது, எ - று. ஏ-அசை.

கண்ணானது புரளுங் கயல்போலவும் மலர்கின்ற குவளையும் தாமரையும் போலவும் இருக்கும், ஆதலால் நீர்வளப்பத்தா லாகிய பொலிவுபற்றி அந்நாடு திருமகளின் கண்ணோடு உவ மிக்கப்பட்டது. அன்றியுந் தன்னாட்டம் என்பதில் ஆட்டம் எனப் பதம் பிரித்துத் திருமகளின் நர்த்தனம்போலிருக்குமெ தனப் பொருள்கூறினு மமையும்; அந்தப்பக்ஷத்தில் கயல் என் பதைக் கண்ணாகவும், காவி - சிவந்த, முகை - (அல்லி) மொட் டுள், எனக்கொண்டு, இதழாகவும், தாமரை என்பதை முக மாகவும், செந்தேனைப் பாடும் பாட்டாகவும், உருவக வுயர்வு நவிற்சியணியாகக் கொள்ளவேண்டும்; ஆடுங்கால் கண் புரள் வதும், உதடு விரிந்து தோன்றுவதும், முகம் மலர்ந்து இனிய பாட்டில் உண்டாவதும் முறையாதலா லெனக.

பூமடந்தை - தாமரைமலரில் வீற்றிருக்கும்பெண், பூதேவி என்று பொருள் கொள்ளலுமாம். தன் — தான் என்பதின் விகாரம். அந்நாட்டின்பெயர் நிடதம். புரள முதலிய செய வெனெச்சம், மழைபெய்ய நெல்விளைந்த தென்பதிற்போலக் காரணப்பொருட்டாய் வந்தன. காமர் — உரிச்சொல். நாட் டம் — நாடு - பகுதி, அம் - கருவிப்பொருள் விகுதி, "நெடி லோடுயிர்த்தொடர்" என்னுஞ் சூத்திரத்தில் மிக என்றதனால்

)ங்கேயும் டகரம் இரட்டித்தது; உகரம் கெட்டது சந்தி.
ட்டம்—ஆடு - பகுதி, அம் - தொழிற்பெயர் விகுதி, மற்றவை
றன்போல். தகைமைத்து—ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்று,
கைமை - பண்புப்பெயர்ப்பகுதி, து - விகுதி, த் - சந்தி. (௧௨)

௩. கோதை மடவார்தங் கோதின் மெயிற்றிமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால் - வீதிவாய்
மானக் கரிவழுக்கு மாவிந்த மென்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

13. There is a town called Mavindum, which abounded
n living literature and science, and in whose streets the
lephants slid on the rich and cool mixture of sandal
which the garland-bedecked females daub on their bodies.

(இ - ள்.) கோதை மடவார்தம் - மாலைசூடிய பெண்களு
டைய, கோது இல் - குற்றமில்லாத, மெய்யில் - உடம்பில்,
மிர்ந்த - பூசிய, சீத களபம் - குளிர்ச்சியான கலவைச் சாந்
ாகிய, செழும் சேற்றால் - வளமான சேற்றினால், வீதிவாய் -
தருக்களில், மானம் கரி - பெருமையான யானைகள், வழுக்
ம் - சறுக்கிவிழப்பெற்ற, மாவிந்தமென்பது - மாவிந்த
மென்று சொல்லப்பட்ட, ஞானம் கலை - ஞானசாஸ்திரங்கள்,
ாழ் - வாழும் இடமான, ஓர் நகர் - ஒருபட்டணம் (உண்டு,)
-று.

அப்பெண்கள் நீராடுவதினால் சந்தனச்சேறு உண்டாயிற்று
ன்பது கருத்து. இதனால் அந்நகரத்தின் செல்வமிகுதி குறிப்
ிக்கப்பட்டது. கோதைபோன்ற மடவார் எனவுங் கொள்
லாம்.

வாழ்—வினைத்தொகை, இது பெயரெச்சத்தின் விகாரமாத
ின் பெயரெச்சத்தின் முடிபுகளைக்கொள்ளும். "செய்வதாதி
றுபொருட்பெயரு மெஞ்சுநிற்பது பெயரெச்சம்மே" என்ற
[வினையியல் ௨௪-ம்] சூத்திரப்படி வாழ் என்பது நகர் என்னும்
இடத்தைக்கொண்டது. சீதகளபம் என்பது வடமொழி முடி
ாதலின், இயல்பாயிற்று. சீதக்களபம் என்று தமிழ்முடிபாக
வும் கொள்ளலாம். 'கொங்கைமிசைத்திமிர்ந்த' என்ற பாடமும்
உண்டு. (௧௩)

14. நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால் - தென்றல்
அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால்
புலர்த்தும்புகைவான் புகுந்து.

14. They say that long streaks of water which th standing clouds pour from the sky always smell of sanda since on the terraces of lofty houses upon which the flag flutter in the south wind, the maidens who are adorne with the choicest jewels, (after bathing) dry their hai in the smoke (of the sandal incense) which goes up int the skies.

(இ - ள்.) தென்றல் - தென்காற்று, அலர்த்தும் - அசையச் செய்கின்ற, கொடி - கொடிச்சீலைகளையுடைய, மாடத்தி - உபரிகைகளில், ஆய் இழையார் - ஆய்ந்த ஆபரணங்களைத் தரித்த பெண்கள், ஐம்பால் - கூந்தல்களை, புலர்த்தும் - உலர்த் துகிற, புகை - அகிற்புகை, வான் புகுந்து - வானத்திற் பிரவே சித்து (இருப்பதினாலே,) வானம் - ஆகாசத்தில், நின்று - இருந்து, புயல் - மேகம், பொழிந்த - பெய்த, நெடு தாரை - பெரிய மழைத் தாரையானது, என்றும் - எப்போதும், அகில் கமழும் - அகில் வாசனை வீசும், என்பர் - என்று சொல்வர், எ-று. ஆல் - அசை.

இதுவும் அந்நகரத்தின் வளத்தைக் குறித்தது. புகுந்து என் னும் செய்தென் எச்சம் கமழும் என்னும் பிறகருத்தாவினை யோடு முடியாதாதலின் 'இருப்பதினால்' என்பது வருவிக்கப் பட்டது. "சொற்றிரியினும்" என்கிற [வினையியல் உள் - ம் சூத்திர விதியினால் புகுந்து என்பது புக என்பதின் திரிபெ னக்கொண்டு காரணப்பொருட்டாய்க் கொள்ளினும் பொரு அம். ஐம்பால் - ஐந்து பகுப்பினை யுடையது; அவையாவன - உச்சியில் முடித்தலாகிய முடியும், பக்கத்தில் முடித்தலாகிய கொண்டையும், பின்னே செருகலாகிய சுருளும், சுருட்டி முடித்தலாகிய குழலும், பின்னிவிடுதலாகிய பனிச்சையுமாம்.

அலர்த்தும் கொடி—பெயரெச்சம், செயப்படு பொருளைக் கொண்டது. புலர்த்தும்புகை—இங்கே கருவியைக்கொண்டது.

5. வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன - கஞ்சம்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

15. The only curved things in this city are the cruel ows; the only thing which gets loose is the soft hair of males; the only things which open their mouths and ment are the ankle ornaments; the only thing which embles is water; and the only things which go astray om the right path are the eyes of the maidens who sit on ne terraces of houses.

(இ - ள்.) வெம் சிலையே - கடுமையான வில்லே, கோடுவன- கோணலாகுவன (மற்றெவையும் அல்ல); மெல் குழலே - மெல்லிய கூந்தலே, சோருவன - தளர்ச்சியடைவன; அம் லம்பே - அழகிய சிலம்பு என்னும் (ஆபரணமே,) வாய் விட்டு- ாய்திறந்து, அரற்றுவன - கதறுவன; கஞ்சம் - தண்ணீரே, லங்குவன - கலங்கிப்போவன; (அல்லது) [கஞ்சம் - கைத்தா ங்கள், கலங்குவன - பல ஒன்றுயச் சேர்ந்து ஒலிப்பன]; ாளிகை மேல் - வீடுகளின்மேலுள்ள, காரிகையார் - பெண்க நடையி, கண்ணே - கண்களே, மெய் நெறியை விட்டு - ேரான வழியைவிட்டு, விலங்குவன - ஒதுங்கிப்போவன, எ-று.

கஞ்சம் என்பது சங்குமாம்; தாளத்தை யுணர்த்தும்போ வும்) இது காம்ஸ்யம் என்னும் ஆரியத்தின் திரிபேயாதலால் வெண்கலத்திறும் செய்த பலதாளங்களுக்குமா மென அறிக. ம் - நீரில், சங்கு - சங்குகளே, அலங்குவன - அலைந்துகொண் ருப்பன எனவுங் கொள்ளலாம்.

மற்றெவையும் அல்ல என்பதை ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும், ஏகாரத்தைக் கஞ்சம் என்பதோடுங் கூட்டிக் கொள்க. அந்நகரிலுள்ளாரில் யார்க்கும் கோடுதல் முதலான தீக்குணங்க ளில்லையென்பது கருத்து. இதுவும் அந்நகரின் பெருமையை யுணர்த்தியது.

காரிகை - அழகு, அதனையுடையார் காரிகையார். காரிகை - பெண் எனக் கொள்ளின், ஆர் - பலர்பால் விகுதி.

பெண்கள் அன்பினாலும், நாணத்தினாலும், கோபத்தினாலும், நேராகப் பாராமல் கீழ்வளைத்துப் பார்த்தல் இயல் பாதலால் மெய்ந்நெறியைவிட்டு விலகுந்தன்மை அக்கண்களுக்கே ய
றி மற்றவைகளுக்கு இல்லை என்பது. [உயிர் புணரியல் அ
சூத்திரம்] "குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி மிகு
வும்" என்பதனால் மெய்ந்நெறியென நகரமிகுந்தது. ஏகார
ன் பிரிநிலையில் வந்தன. (கரு

16. தெரிவன நூ லென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே - ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே யிகழ்ந்தெவரும்
கல்லா தனவுங் கரவு.

16. That which is ever studied is literature and scienc
that which is never seen is the waist of females wh
wear striped bangles; that which is never fonud is beg
gary and that which is ever despised by all and neve
studied is deceit.

(இ-ள்.) என்றும் தெரிவன - எக்காலமும் யாவராலும் அறி
யப்படுவன, நூல் - சாஸ்திரங்களே (அன்றி மந்திராலோசனை
முதலியவையல்ல); தெரியாதனவும் - காணப்படாதனவும், வரி
வளையார் தங்கள் - சித்திரரேகைகளுள்ள வளைகளையணிந்த
பெண்களுடைய, மருங்கே - இடையே (அன்றி ஞாயமுதல
னவையல்ல;) ஒருபொழுதும் - எப்போதும், இல்லாதனவும்
இல்லாத பொருள்களும், இரவே - இரக்குந்தொழிலே (அன்
றிச் சுகத்துக்கு வேண்டியவையல்ல); எவரும் - எப்படிப்பட்
டவரும், இகழ்ந்து - தூஷித்து, கல்லாதனவும் - கல்லாமல்
விட்டவையும், கரவு - வஞ்சனையே (அன்றி மற்ற மெஞ்ஞான
வகைகள் அல்ல); எ-று.

இவ்விரண்டுபாட்டும் ஒழித்துக் காட்டல் அணி.

கல்லாதன என்பது "செயப்படுபொருளை" என்கிற [பொது
வியல் சகூ-ம்] சூத்திரவிதியைக் கொண்டது. (கசு)

17. மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான் - காம்ருபூ

தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

17. We may say that the capital of king Nala, who rules the earth is like the city of Muranai, the capital of king Swarki, who is as beautiful as the moon, who was born to uphold the great institutes of Manu, upon whose broad shoulders Lakshmi dwells, and who is decked with garlands of beautiful flowers.

(இ - ள்.) மா மனு நூல் - பெருமைபொருந்திய மனுதரும நூலானது, வாழ - வாழ்வதற்கு, வரு - உற்பவித்த, சந்திரன் - சந்திரன்போன்றவனும், தாமரையாள் - திருமகள், வைகும் - வாழ்கின்ற, தடம் - விசாலமாகிய, தோளான் - தோளையுடையவனும், காமர் - அழகிய, பூ தாரான் - பூமாலை தரித்தவனும் ஆகிய, சுவர்க்கி - சுவர்க்கி யென்பவனுடைய, முரணை - முரணை யென்னும், நகர் தான் என்று - நகர் இது என்று, சாற்றலாம் - சொல்லிக்கூடும், பார் ஆளும் - பூமியை யாளுகின்ற, வேந்தன் - நளமகாராஜனுடைய, பதி - ஸ்தானமாகிய மாவிந்தநகரத்தை, எ - று.

சந்திரன்சுவர்க்கி யென்று ஒருபெயராக்வுங் கொள்ளலாம். இவ்வரசன் இந்நூலாசிரியர்க்கு உதவிசெய்தவன், ஆனதுபற்றி இவனை ஏற்குமிடமறிந்து புகழ்ந்துபேசுவர். வேந்தன்பதியை முரணைநகர் என்று சாற்றலாம் எனக் கூட்டிக்கொள்க. சாற்றல் - எழுவாய், ஆம் - பயனிலை. வேந்தன்பதி - எழுவாய்; சாற்றல் ஆம் - பயனிலை என்னவுமாம்; சாற்றற்கு ஆம் என்பது பொருள். இவன் திருமாலின் அவதாரம் எனக் குறிப்பித்தற்கு "தாமரையாள்வாழுந் தடந்தோளான்" என்றார். (கஎ)

18. ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டே - நீடாழி
மூருகுடைய மாந்தர் முகநனைக்குந் தண்டார்
அருகுடையான் வெண்குடையா னங்கு.

18. There was one Nala, who commanded armies that never retreated in battle, who ruled his country under a white umberlla, and who decorated his chest with garlands

abounding in honey which wets the faces of men and feeds friendly bees.

(இ-ள்.) ஆங்கு - அப்பட்டணத்தின்கண், பீடு - பெருமை, ஆரும் - நிறைந்த, செல்வம் - செல்வமுள்ள, பெடை - பெண் வண்டு, வண்டோடு - ஆண்வண்டோடு, ஊடா - பிணங்கினதனால், முருகு உடைய - உள்ளிருந்த தேன் பெயர்ந்து வர, அருகு - சமீபத்திலுள்ள, மாந்தர் முகம் - மனிதருடைய முகத்தை, நனைக்கும் - நனைக்கும்படியான, தண் தார் - குளிர்ச்சியான மாலையை, உடையான் - உடையவனும், வெண் குடையான் - வெண்மையான குடையுடைவனும் ஆகிய, ஓடாத தானை - தோற்காத சேனையுள்ள, நளன் என்று - நளனென்று சொல்லப்பட்ட, ஒருவன் - ஓரரசன், உளன் - இருந்தான், எ-று.

வண்டு ஊடுகையில் விசையாய் மலர்களின்மேல் உழுது கொண்டு செல்வதனால் உள்ளிருந்த தேன் வெளிப்பட்டதென அறிக. வண்டுக்குச் செல்வமாவது பொன்சிறகுடைமை.

ஊடா என்பினைதக் காரணப்பொருட்டாய் வந்த செய்வெனெச்சத்தின் திரிபெனக் கொள்க. "மாதர்முலைநனைக்கும்" என்றும் பாடம் உண்டு. (கஅ)

19. சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான் - மாதர்
அருகூட்டும் பைங்கிளியு மாட்டற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு.

19. The garland bedecked Nala governed the world, alone, under a cool moon-like umbrella that justice might prosper un-interrupted, and that the green parrots, which feed by the side of women, might live together in the same cage with the kite, which is uaturally warlike.

(இ-ள்.) தாது அவிழ் - வாசனைப்பொடி உதிருகின்ற, பூந்தாரான் - பூமாலையையுடைய நளமகாராஜன், சீத மதி - குளிர்ச்சியான சந்திரனைப்போன்ற, குடைக்கீழ் - குடையின் கீழ், அறம் - தருமம், செம்மை - நன்றாக, கிடப்ப - இருக்கும்படியும், மாதர் - பெண்கள், அருகு - சமீபத்தில், ஊட்டும் - (பால் முதலியவைகளை) உண்பிக்கப்பெற்ற, பை கிளியும் -

பசுமையான கிளியும், ஆடல் பருந்தும் - போர் செய்கின்ற பருந்தும், ஒரு கூட்டில் - ஒரே கூண்டில், வாழ - வாழும்படி யும், உலகு - உலகத்தை, தனி - ஒப்பில்லாமல், காத்தான் - காப்பாற்றினான், எ-று.

குடையென்பது ஆகுபெயராய் அதிகாரத்தை யுணர்த்திற்று. கிடப்ப, வாழ, என்பவை வினைச்செவ்வெண் ஆதலின் எண்ணும்மை வருவிக்கப்பட்டது. (கக)

20. வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான் - தேங்கு
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன் [வளைத்
பூநாடிச் சோலை புக.

20. Nala, who possessed a well watered country in which the bees, having bathed in the sweet honey of the kuvalai flower, dried their wings on his way to the flower garden, went through the forest of the gazing eyes of females, whose faces resembled the moon, and whose hands were adorned with bangles.

(இ - ள்.) தேம் குவளை - வாசனை பொருந்திய குவளைப்பூவி னது, தேன் - தேனிலே, ஆடி - நீராடி, வண்டு - வண்டுகள், சிறகு உலர்த்தும் - சிறகுகளை உலர்த்தும்படியான, நீர் நாடன் - நீர்வளமுள்ள நாடுடைய நளன், பூ நாடி - மலர்களை இச்சித்து, சோலை புக - தோட்டத்திற் போவதற்கு, வாங்கு - கொண்ட, வளை கையார் - வளைகளுள்ள கைகளையுடைய பெண்களின், வதன மதி - முகமாகிய சந்திரனிடத்து, பூத்த—, பூ குவளை காடு இடையே - (பார்வையாகிய) அழகிய நீலோற்பலக் காட்டி னடுவில், போயினான் - போனான், எ-று.

நளன் பெண்கள் தன் கட்டழகை வியந்து பார்த்துக்கொண் டிருக்கச் சென்றான் என்பது கருத்து.

பூநாடி என்பதற்குப் பூக்கும்படியான நாம்புள்ள என்று பொருள்கொண்டு சோலைக்கு விசேடணமாக்கினு மமையும். வாங்கு என்பதற்கு வாங்கிப்போன [கழன்றுபோன], வளைக் கையார் எனவும் பொருள் கொள்ளலாம்; அப்போது அவனைப் பார்த்துக் காதல்கொண்டமையால் உடம்பு மெலிய வளை கழன்

றது என்பது கருத்தாம். வாங்குதல் அழைத்தலு [க]ாதலான் தம்மொலியால் அரசனை அழையாநின்ற என்னவுமாம். (உ0)

21. வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றன் மதுநீர் தெளித்துவர – நின்ற
தளவேனல் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர்.

21. The morning sun shed its rays against Nala, who possessed the vale-girt country, where the jessamine branches out over the millet and flower; where cupid uses his bow (with flowered arrows,) and where the south wind sprinkles honeyed water all through the streets.

(இ - ள்.) வீதி எலாம் - தெருக்களில் எல்லாம், வென்றி - வெற்றிபொருந்திய, மதன் வேடன் - மன்மதனாகிய வேடன் வில் எடுப்ப - வில்லையெடுத்து நிற்கும்படியாகவும், தென்றல் - தென்காற்று, மது நீர் - தேனாகிய நீரை, தெளித்து வர - தெளித்துக்கொண்டு வரவும், நின்ற - நிலைபெற்ற, தளவு - முல்லைக்கொடி, ஏனல் மீது - தினையின்மேல், அலரும் - மலரும்படியான, தாழ் வரை - மலைகளின் தாழ்வரைகள், சூழ் - சூழ்ந்த, நாடற்கு - நாடுடைய நளனுக்கு, இள வேனில் - இளவேனிற் காலமானது, எதிர் வந்தது - எதிர்ப்பட்டது, எ - று. [இளவேனில் - வசந்தகாலம்.]

ஒரு பிரபு வருகையில மெய்காப்பாளன் விற்பிடித்து உட[ன்] வரலும் வாசனைநீரை வழியில் தெளித்திருத்தலும் இயல்பா[த]லின், வசந்தன் பிரபுவாக அங்ஙனம் அமைந்தா னென்பதும் அந்தப்பிரபு சோலைக்குரியவனாதலின் அரசனை எதிர்கொண் டான் என்பதும் குறிப்புப்பொருள். மன்மதன் வில்லெடுக்க என்பது பெண்கள் ஆசை கூர என்றபடி.

வென்றி—வெல் - பகுதி, றி - தொழிற்பெயர்விகுதி, லகரம் றகரம் ஆனது சந்தி, றகரம் னகரம் ஆனது மெலித்தல் விகாரம். மதன்வேடன் என்பது "சிலவிகாரமா முயர்திணை" என் பதனால் மதவேடன் என்றாயிற்று; அன்றி, வேள் தன் எனப் பிரிக்கினும் அமையும். இளவேனில் எதிர்வந்தது என்றால் தென்றல் முதலிய குறிப்பாற் றோன்றிய தென்கிறபடி. (உக)

. தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனனனைப்ப வேயடைந்தான் - கார்வண்டு
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்
கொதுங்கிப், புக்கிருந்தா லன்ன பொழில்.

22. Nala, the dust of whose car (flying about) gets aked in the scented water on the flower-bedecked hair jewelled maidens, retired into a grove, where the black es swarmed together, flying about joyfully, and where ounded perpetual darkness, which retreated there be- re the rays of the sun.

(இ - ள்.) தேரின் - தேரினின்றும் உண்டாகிய, துகளை- பொடியை, திருந்து இழையார் - திருத்தமான ஆபரணம் ண்ட பெண்களினுடைய, பூ குழலின் - பூச்சூடிய கூந்தலி ண்டாகிய, வேரி புனல் - வாசனை நீர், நனைப்ப - நனைக்கும் டி, கார் வண்டு - கறுத்தவண்டுகள், தொக்கு இருந்து - சேர்ந் ருந்து, ஆலித்து - களித்து, உழலும் - சுழலப்பெற்ற, தூங்கு ருள் - அசையாத இருட்டு, வெய்யோற்கு - சூரியனுக்கு, துங்கி-, புக்கு - புகுந்து, இருந்தால் அன்ன - இருந்தா தை யொத்திருக்கின்ற, பொழில் - சோலையை, அடைந்தான்- ளன்) சேர்ந்தான், எ - று. ஏ - அசை.

இவன் போக்கைப் பெண்கள் கூந்தல்சோர வியந்து பார்த் க்கொண் டிருக்கையில் துகள் கூந்தலில் படிந்து வாசனை ரால் நனைக்கப்படுகின்ற தென்பதாம்.

இங்கு உழலும், அன்ன, இவ்விரண்டு பெயரெச்சங்களும் டுக்கிப் பொழில் என்பதைக்கொண்டன. சூரியனுக்கு ஒதுங்கி ன்றால் சூரியனுக்கு அஞ்சி என்பது கருத்து. தேரின் - இன் உ ந்தனுருபு, ஏதுப்பொருளில் வந்தது; ஆறனுருபோடு வந்த ாரியையுமாம். வேரிப்புனல் - பூந்தேன்; காலையில் நீராடித் திர ம் பெண்களின் கூந்தலினீர் எனனவுமாம். தொக்கு - செய் தன்வாய்ப்பாட்டு வினையெச்சம், தொகு - பகுதி, உ - விகுதி, கரம் இரட்டித்துக் காலங்காட்டிற்று, உ - கெட்டது சந்தி. ன்ன - குறிப்புப்பெயரெச்சம், அன் - பகுதி, இடைச்சொல், - விகுதி, ன் - சாரியை, சாரியையாய்வந்த னகர மிரட்டித்து

சந்தி. அன் - பகுதி என்னவுமாம். சுட்டின்மேல் விதத்தைக் காட்டும் ன் என்கிற விகுதிசேர உண்டாகியதோர் இடைப் பகு பதமென்பது நியாயத்திற்கு ஒத்திருக்கின்றது. இன்ன என் பது மிப்படியே. அங்கு அன்று முதலியவைகளுக்கும் இவ் வாறே உறுப்பமைத்தல் தக்கது. (௨௨

23. நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன், தா
ணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப - மாணிறத்
தான், முன்னப்புட் டோன்று முளரித் தலைவை
கும், அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு.

23. Before the upright Nala, appeared in the garden a swan that lived on a lotus in the tank, changing the dark hue of the garden with the bright colour of its body and imparting to the waters the red-colour of its long feet.

(இ - ள்.) ஆங்கு - அச்சோலையில், மாண் நிறத்தான் - பெரு மையான குணமுள்ள நளனுக்கு, முன் - எதிரில், நீள் நிறத் தால் - பிரகாசமான தனது தேக நிறத்தினால், சோலை - அந்த தோட்டம், நிறம் பெயர - நிறம் மாறிநிற்க, நீடிய - மிகுந்த தன் தாள் நிறத்தால் - தன்னுடைய பாதத்தின் நிறத்தினால் பொய்கை தலம் - தடாகத்தின் இடம், சிவப்ப - சிவந்து காண, அப்புள் - தண்ணீரில், தோன்றும் - உண்டாகிய, மு ரித்தலை - தாமரையின்மேல், வைகும் - வாசஞ்செய்கின்ற அன்னப்புள் - அன்னப்பக்ஷி, தோன்றிற்று - காணப்பட்டது எ - று. ஏ - அசை.

மாணிறத்தான் - மாட்சியுள்ள மார்புடையவன் என்னுமா உடம்பெல்லாம் வெளுத்து மூக்கும் காலுஞ் சிவந்திருக்கு ராஜஹம்சம் என்பர்.

நீடிய என்பது நிறத்தின் விசேடணம். பெயர, சிவப்ப இவ் விரண்டெச்சங்களும் தோன்றிற்று என்பதில் முடிந்தன அப்பு—வடசொல். (௨௩

24. பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்
பேதிக் குலமேறி மென்கரும்பைக் - கோதிக்

கடித்துத்தான் முத்துமிழும் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து.

24. Nala, who possessed the country through which he Ganges flowed, and in which the herd of buffalows, reaking the tender sugar cane, chewed it so that its earls dropped out (of their mouths), said—"O maid! pproach that beautiful swan gently, and without missing atch it and bring it here.

(இ - ள்.) மேதி குலம் - எருமைக்கூட்டம், ஏறி - (சோலை ற்) பிரவேசித்து, மெல் கரும்பை - மென்மையான கரும் ன்கழிகளை, கடித்து கோதி - கடித்துக்கொழித்து, முத்து - அக்கரும்பினின்றும் வாயில் விழுகின்ற) முத்துக்களை, உமி ழும் - உமிழ்ந்து விடப்பெற்ற, கங்கை நீர் - கங்காசலம் சூழ்ந் த, நாடன் - நாட்டையுடைய நளன், பெயர்ந்து - (அங்கே) போய், பேதை - பெண்ணே, மட அன்னந்தன்னை - அறியா மையுள்ள அன்னப் பறவையை, பிழையாமல் - தப்பாமல், பிடித்து தா என்றான் —, எ-று. தான் - அசை.

கரும்புக்கு மென்மையாவது செழிப்பு. உமிழும் என்னும் பெயரெச்சம் நாடென்னு மிடப்பெயர் கொண்டது. கங்கை ன்றது சிறந்த ஆற்றுக்கும் ஆம்.

பேதை என்பது "அண்மையினியல்பும்" என்னும் [பெய ல் ருகூ-ஆம்] சூத்திரத்தால் விளியில் இயல்பாயிற்று.

மடமை - இளமையாக்கொண்டு பேதைமையாகிய இளவன் னத்தை எனவு முரைக்கலாம். அங்கிருந்த ஒரு பெண்ணை செயப்படுபொருள் வருவித்துக் கொள்க. (உச)

ரு. [illegible]டிமட வன்னத்தை நல்ல மயிற்குழாம்
ஓடி வளைக்கின்ற தோற்றமே - நீடியநல்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

25. Like a number of fair peacocks, the tender maidens with their long fine silk-like hair, went and surrounded the young swan, and having caught it, brought and presented it humbly to their king.

(இ-ள்.) நாடி - (அரசன் பேச்சை) மனதிற் கொண்டு, நல்ல மயில் குழாம் - நல்ல மயில்களின் கூட்டம், ஓடி வளைக்கின்றது - ஓடி வளைத்துக் கொள்வதை, ஒப்ப - ஒத்திருக்க, நீடிய - நீண்ட, நல் பைங் கூந்தல் - நல்ல பசுமையான கூந்தல்களையுடைய, வல்லியர்கள் - கொடிபோன்ற மாதர்கள், மட அன்னத்தை - மடப்பமுள்ள அன்னத்தை, பற்றி கொடு - பிடித்துக் கொண்டு, போந்து - வந்து, தம் கோவின் முன் - தங்கள் அரசனுக்- கெதிரில், தாழ்ந்து - வணங்கி, வைத்தார்—, எ-று. ஏ - அசை.

கொண்டு என்பது கொடு என இடைகுறைந்தது. மடப்பம் - அழகு எனவுமாம்.

அரசன் ஒருத்தியை நோக்கிச் சொன்னாலும் பலரும் நான் முன் நான்முன் என் றோடுவது சேவகரின் இயற்கை யாதலின் அங்ஙனஞ் செய்தாரெனக் கொள்க.

கூந்தலுக்குப் பசுமையாவது வளப்பம், பசுமையையும் கருமையையும் ஒருவகையில் அபேதமாச் சொல்வது முண்டு.

26. அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டு
போய், மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே—
அன்னம், மலங்கிற்றே தன்னுடைய வான்கிளை
யைத் தேடிக், கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

26. As soon as the swan was brought before the pesence of the king by the maidens adorned with choicest jewels, it was much terrified and tremblingly looked round in despair for its numerous relations.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில், அன்னந்தனை பிடித்து - அம்ச பக்ஷியைப்பிடித்து, ஆய் இழையார் - ஆய்ந்த ஆபரணமுள்ள பெண்கள், கொண்டு போய்—, மன்னன் திரு முன்னர் - அரசனுடைய மேன்மையான சந்நிதானத்தில், வைத்தலுமே - வைத்தவுடனே, அன்னம் - அந்த அம்சபக்ஷி, தன்னுடைய— வான் கிளையை - பெரிய சுற்றத்தை, தேடி—, மலங்கிற்று - அலைந்ததாகி, மன்னவனை கண்டு - அரசனைப்பார்த்து, கலங்கிற்று - மனக்கலக்கமுற்றது, எ-று.

ஏ - அசை. அங்கு - அசையுமாம்.

வைத்தலும் — இதோர் வகை வினையெச்சம். உம் - பிற்
பொருட்டு விகுதி, தொழிற்பெயர்மேல் வரும். (௨௬)

[அரசன் அன்னத்தைப்பார்த்துச் சொன்னது.]

27. அஞ்சன் மடவனமே யுன்ற னணிநடையும்
வஞ்சி யனையார் மணிநடையும் - விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

27. The king, who was adorned with garlands of flowers, of which the joyous bees might be proud, said: "Fear not, O young swan! I caught you merely to see which was better, your graceful walk or the elegant gait of the ladies, who are as tender as creepers."

(இ - ள்.) மட அன்னமே - மடமைபொருந்திய அன்னமே, அஞ்சல் - பயப்படாதே; உன்றன் - உன்னுடைய, அணிநடையும் - அலங்காரமான நடையும், வஞ்சி அனையார் - வஞ்சிக் கொடியொத்த பெண்களுடைய, மணி நடையும் - அழகுள்ள நடையும் (ஆகிய இவற்றுள்,) விஞ்சியது காண - அதிகப்பட்டதைக் காணும்பொருட்டு, பிடித்தது - உன்னைப்பிடித்தது, ... - என்று சொன்னான், களி வண்டு - மதர்த்திருக்கும் ...ள், மாண - பெருமை பெறும்படி, பிடித்த - கட்டிய, ... மாலையணிந்த, மன் - அரசன், எ-று. காண் - அசை. ...ன் என்றானெனக் கூட்டுக. பிடித்தது என்னும் எழு... ...கும் ஆம் என்னும் பயனிலை எஞ்சிநின்றது. பிடித்தது— ...ழிற்பெயர்; பிடி - பகுதி, து - விகுதி, த் - இறந்தகால ...னிலை, த் - சந்தி, அ - சாரியை, இத்தத் துவ்விகுதி காலங் ...டு மிடைநிலைகளைப் பெற்றுவரும்; பிடிக்கின்றது, பிடிப் ... எனவுங் காண்க. மை விகுதியும் சிறுபான்மை இவ்வாறு ...ரும்; பிடித்தமை, பிடிக்கின்றமை முதலியவற்றைக் காண்க. ...அஞ்சல் — எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. மாண — ...ாண் என்னும் பண்படியாகப்பிறந்த செயவெனெச்சம். அரசன் முதலில் இங்ஙனம் கூறியது கருணையாலன்றி அப் ...றவை உணர்ந்துகொள்ளுமெனக் கருதியன்று. (௨௭)

28. செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம் - வெய்ய

அடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான்.

28. The matchless swan, which was caught by maiden, who resembled Lakshmi of the red lotus, hearin the words of the king, who entertained no cruel intention did at once recover from its fear and trembling.

(இ - ள்.) செய்ய கமலம் திருவ்வை - சிவந்த தாமரையி வாசஞ்செய்கின்ற இலக்குமியை, நிகரான - ஒத்த, தையல் பெண், பிடித்த—, தனி - ஒப்பில்லாத, அன்னம்—, வெய்ய கொடிதான, அடு மாற்றம் - கொல்லும்படியான பகை, இ லா - இல்லாத, அரசன் சொல் - நளன் பேச்சை, கேட்டு— தடுமாற்றம் - துன்பம், தீர்ந்தது - நீங்கப் பெற்றது, எ ற ஏ - தான் - அசைகள்.

செய்ய—செம்மையென்னும் பண்படியிற் பிறந்த குறிப்பு பெயரெச்சம். வெய்ய—இதுவும் அப்படியே. வெம்மை பெ ப்து பண்படி. அன்னந் தடுமாற்றந் தீர்ந்தது என்பது பொ வியல் உசுஎம் சூத்திரவுரையால் அமைந்தது. உரு-ம் பாட்டி 'சோலை நிறம்பெயர' என்பது மிவ்வாறே.

அடுமாற்றம் — அடுதலுக்கு ஏதுவாகிய - மாற்றம்; வினைத்தொகை, பெயரெச்சத்தின் விகாரமாதலால் பெயர் கொண்டது.

மாற்றம் — மாறு என்பதிற் பிறந்தது; தடுமாற்றம் - மாறு என்னும் பகுதியிற் பிறந்தது; இரண்டுந் தொழிற் பொருளால் பண்பு. (

29. திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யு
இசைமுகந்த தோளுக் கிசைவாள் - வசையில்
தமையந்தி யென்றோதுந் தையலாண் மென்றோ
அமையந்தி யென்றோ ரணங்கு.

29. (The swan, addressing Nala,) said :—"O chariote whose white umbrella spreads through all the region there is a maiden named Damayanti, a goddess-lil damsel, who is of good report, whose rounded shoulde are like soft bamboos, will match well with your nowned shoulders."

(இ - ள்.) திசை முகந்த - திக்குகளைத் தன்னு ளடக்கிய, வண் கவிகை - வெண்குடையுள்ள, தேர் வேந்தே - இரதாதிதியான அரசனே, உன்றன்—, இசை முகந்த - கீர்த்திபெற்ற, தாளுக்கு - புயங்களுக்கு, மெல் தோள் - மென்மையான தாள், அமை - மூங்கிலை, அந்தி - சேர்ந்தது, என்ற - என்று சால்லப்பட்ட, ஓர் அணங்கு - ஒரு தெய்வப்பெண் போன்ற, சை இல் - குற்றம் இல்லாத, தமையந்தி என்று—, ஓதும் - சால்லப்பட, தையலாள் - ஒருமாது, இசைவாள் - பொருந்திருப்பாள் (என்று அன்னஞ் சொல்லிற்று,) எ-று.

அந்தி என்னு முதனிலை, நேர் என்பதுபோல இங்கே வினைற்றாயிற்று; வினையியல் ௩௨-ம் சூத்திரத்தின் உரையைக் ண்க. வெண்கவிகை—இதில் ணகரம் 'இடையுரிவடசொலின்' ன்பதினால் டகரமாத்திரியாது ணகரமாத் திரிந்ததென்க. தயல் - அழகு, அதை யுடையாள் தையலாள். (௨௯)

...ன்ன மொழிந்த மொழிபுகா முன்புக்குத் [மயில் ...ன்னி மனக்கோயில் கைக்கொள்ளச் - சொன்ன ...ூர்மடந்தை யென்று ணங்கன் சிலைவளைப்பப் ...பார்மடந்தை கோமான் பதைத்து.

30. No sooner had the words of the swan reached ...la's ear than the maiden took posssesion of his heart, ...d the king who may be styled the husband of the earth, ...oubled ... Cupid who aimed his bow at him, enquired of ... "Whose daughter is she of whom you spoke?"

... மடந்தை கோமான் - பூமியாகிய பெண்ணுக் ... ரசன், அன்னம் மொழிந்த - அன்னஞ் ... கா முன் - சொல் (காதிற்) பிரவேசிப்பதற்கு ... - தமயந்தியானவள், புக்கு - பிரவேசித்து, ...ன் மனமாகிய கோயிலை, கைக்கொள்ள - ...கொண்டதனால், அநங்கன் - மன்மதன், ...லை வளைக்கவே, பதைத்து - திடுக்கிட்டு, ...சொல்லிய மயிலுக்கொப்பானவள், ஆர் ... மகள், என்றான் - என்று சொன்னான் ... எ-று.

மனதில் தமயந்தியின் சிந்தை உண்டானதனால் காமத்தோ
அவளுடைய செய்தியைக் கேட்கத் தலைப்பட்டான் என்பது
கருத்து.

புகாமுன் என்றது துரிதத்தைக் குறிப்பித்தது ; அதிசய
வணி. கைக்கொள்ள என்னும் செயவெனெச்சம், சிலைவளைப்ப
என்பதில் காரணவகையால் முடிந்தது. வளைப்ப என்பது
ப்தைத்து என்பதில் அவ்வகையே முடிந்தது.

சொன்னமயில் என்பதற்குப் பொன்மயிலெனப் பொருள்
கூறினும் ஒக்கும். சொன்ன—சொல்லின என்பதில் இன் இடை
நிலையின் முதல் குறைய மெய் - புணரியல் உ௪-ஆம் சூத்தி
விதியால் பகுதி லகரம் னகரமாகத்திரிய உண்டாயிற்று. பொல்
னெப் பொருளாகும்போது ஸ்வர்ணம் என்கிற ஆரியமொழி
சிதைவு. (௩௦

31. எழுவடுதோள் மன்ன விலங்கிழையேர் தூண்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை - உழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயு மாவொலிநீர் நாட
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

31. "O king whose shoulders resemble pillars !
maiden is the daughter of the benevolent king of Vidarp
where the kuvalai flowers, which are dug up and throw
aside by the ploughs as they are guided by the peasan
pour forth honey in such abundance as to water the pla
and where the waters make a noise (as they flow).

(இ - ள்.) எழு அடு தோள் - கம்பத்தை
யுடைய, மன்ன - அரசனே, இலங்கு இழை
களையுடைய அந்தப்பெண், உழுநர் - உழவர்,
மாடுகளைத் தூண்டும்பொழுது, கொழு நுதி
னால், சாய்ந்த - பெயர்ந்து வீழ்ந்த, குவ
களினின்றும், மடை - நீர்மடைகளை, மிதி
தேன் பாயும் - தேன் பாயப்பெற்ற, மா
நீர் - ஒலிக்கின்ற நீர்பொருந்திய, நாடன்
னாகிய, கொடை - ஈகைக்குணமுள்ள
ராஜன், பெற்றது - பெற்ற, ஓர் கொ
மைப் போன்றவள், எ-று.

அந்நாட்டின் பெயர் விதர்ப்பம் ; அதனால் விதர்ப்பத்தை
டையவன் விதர்ப்பன் என அரசனுக்கும் பெயர் வந்தது.
லங்கிழை—எழுவாய், கொம்பு—பயனிலை. கொம்பு என்
வும் அஃறிணை நோக்கிப் பெற்றது எனப் பிரயோகிக்கப்பட்
து. பெற்றது - வினையாலணையும் பெயராக்கொண்டு இருபெ
ராக்கொண்டு இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாக்குக.

உழுநர்மிதிப்ப—மிதிக்கையில் தேன்பாயு மென்வு முரைக்க
ாம். முன்னுரையில் மடையை மிதித் தடக்கும்படியாகத்
தன்பாய்கிற தென்பதாம். பின்னதில் மிதிக்கமிதிக்கப் பாய்
ற தென்பதாம்.

தூண்ட, மிதிப்ப,—இரண்டிற்கும் உழுநரே கர்த்தா. உழு
ர்—இதில் நர் - பலர்பால் விகுதி. (௩௧)

[இதுமுதலிய நான்கு பாட்டால் அவளை வருணித்தல்.]

. நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்
சா, . க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படை
யும், வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளு மே பெண்மை யரசு.

32. That maiden rules her female kingdom, under the
brella of her moon-like face having her four disposi-
ns as her four armies, her five senses as her good prime
nisters, her sounding anklets as beautiful drums,
l her eyes as her lance and sword.

நால் குணமும் - (அச்சம் நாணம் மடமை பயிர்ப்பு
ான்கு குணங்களும், நால் படை ஆ - (தேர் யானை
லாள் என்கிற) நால்வகைச் சேனை யாகவும், ஐம்
மெய் வாய் கண் மூக்கு செவி என்கிற) பஞ்சேந்
ும், நல் அமைச்சு ஆ - நல்ல மந்திரிகளாகவும், ஆர்க்
க்கின்ற, சிலம்பே - பாதசரமே, அணி முரசு ஆ -
ான பேரிகையாகவும், கண் - கண்கள், வேல் படை
ாயுதமும், வாளும் - கத்தியும், ஆ - ஆகவும், வதன
சந்திரனாகிய, குடைக்கீழ் - குடையின் - கீழே,
அரசு - பெண்தன்மையான ராச்சியத்தை, ஆளும் -
ஏ - ஏ. ஏகாரங்கள் - அசை, பிரிநிலை என்னவுமாம்.

அச்சம் - பயம், நாணம் - வெட்கம், மடமை - கபடமின்மை, பயிர்ப்பு - அருவருத்தல்; இந்நான்கும் பெண்களுக்கு உரிமையான குணம். ஆ—ஆக என்னும் செயவெனச்சம் ஈறு குறைந்தது.

ஓரரசனுக்குப் படை தன்னைக் காக்கவும் பிறரைவெல்லவும் துணையாவதுபோல நாற்குணமும் பெண்மையைக் காக்கவும் ஆடவர்க்கு ஆசை கொளுத்தி வயப்படுத்தவுந் துணையென்றும், அமைச்சர் அரசன் செய்கைக்கு ஒன்றிநிற்பதுபோல் ஐம்புலன்களும் மீறிப்போகாமல் நல்லொழுக்கத்துக்கு இசைந்தவென்றும், முரசினால் பெருமை வெளிப்படுவதுபோல், நடைக்கேற்பச் சிலம்பொலித்தலினால் நடையழகு காணாதவர்க்கும் தோன்றுமென்றும், கண்பார்வையால் ஆயுதங்களாற் பட்டவர்போல் ஆடவர் சோர்ந்து விழுவரென்றும், சந்திரன் போன்ற குடை செங்கோன் மேன்மைக்குக் குறியாயிருப்பதுபோலச் சந்திரன் போன்ற முகமும் யாவரும் பணியும்படியான மேன்மைக் காரணமாய்ப் பெண்மையைச் சிறப்பிக்கின்றதென்றும் இவ்வாறு உருவகப்படுத்தினா ரென்க. ஆகவே [illegible] எல்லாப்பெண்களுக்கு மேலான அழகும் நற்குணங்களும் அமைந்தவ ளென்பது திரண்ட கருத்து.

கண் முந்தி இந்திரியமாகிய தன்மையால் அமைச்சாகச் சேர்த்தது; பிந்தி உருவமிருக்கும் தன்மையால் ஆயுதத்திற் சேர்த்ததென அறிக. கண்—பால்பகா வஃறிணைப்பெயர். (ந

33. மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தே[illegible]
மாட்டா திடையென்று வாய்விட்டு—நா[illegible]
அலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்[illegible]
புலம்புமா நூபுரங்கள் பூண்டு.

33. The anklets seeing that her waist was n[illegible] support her soft mound-like breasts, having fall[illegible] at the feet of Damayanti adorned with a fresh[illegible] full of honey, caressed them and wept.

(இ - ள்.) இடை - இடுப்பு, மோடு இள கொங்கை[illegible] வாகிய இளமைபொருந்திய முலைகளை, முடிய - மு[illegible] அமந்து ஏறமாட்டாது - சுமந்து நிற்கமாட்டாது,

ink of the maiden (*lit.* swan) of whom you spoke to me, y soul melts within me. What acquaintance does there ist between you and her ?"

(இ - ள்.) [இப்படி அன்னஞ் சொல்லக்கேட்டு அரசன்,] ந்த அன்னத்தை - அந்த அம்சபக்ஷியை, முன்னே - முன்னே ரனே, [இளம்பருவத்திலேயே], நடை வென்றாள் தன்பால் - ன் நடையினால் ஜயித்தவளாகிய தமயந்தியினிடத்தில், நயந்து சைப்பட்டு, அன்னமே—, நீ உரைத்த - நீ சொன்ன, அன் த்தை - அன்னம்போன்றவளை, உன்ன - சிந்திக்க, என் ஆவி - ன் உயிர், சோரும் - தளர்கின்றது; உனக்கு—, அவளோடு—, ன்ன அடைவு - என்ன சம்பந்தம், என்றான்—, எ - று. ஏ - ற்று - அசை.

உரைத்த என்பது செயப்படுபொருளைச் செய்ததுபோ ரைக்கப்பட்டது. "செய்யு நிகழ்பெதிர்வும்" என்றமையின் சாரும் என்பது இங்கு நிகழ்காலத்ததாயிற்று. என்ன — என்வ ன்னுங் குறிப்புமுற்று இடை குறைந்து அகரச்சாரியை ற்றது. (௩௬)

. பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்
மாமனைவாய் வாழு மயிற்குலங்கள் - காமன்
படைகற்பான் வந்தடைந்தான் மைத்தொடியாள் பாத
நடைகற்பான் வந்தடைந்தே நாம். [பா]

37. We, the race of birds that live on flowers, shing to study the gait of her who is adorned with gold celets are (continually near her), like the race of cocks that live in her palace, where Cupid resorts to rn his drill.

(இ-ள்.) பூ மனைவாய் வாழ்கின்ற - தாமரைப்பூவாகிய மாளி கயிலே வாசஞ்செய்கின்ற, புள் குலங்கள் - பறவைக் கூட் ங்களாகிய, யாம்—, அவள் தன் - அவளுடைய, மா மனை ாய் வாழும் - பெரியமாளிகையில் வாசஞ் செய்கின்ற, மயிற் லங்கள் - மயில்களின் கூட்டங்களா யிருக்கின்றோம்; காமன் ன்மதன், படை கற்பான் - ஆயுதவித்தை கற்கும்பொருட்டு, ந்து அடைந்தான் - (அவளிடம்) வந்துசேர்ந்தான்; நாம் ங்கள், மைத்தொடியாள் பாத நடை பயிலும்பொருட்டு இவளை

புணிந்த அவளுடைய கால் நடையை, கற்பான் - கற்பதற்கு வந்து அடைந்தேம் - வந்து சேர்ந்தோம், எ-று.

[தாமரைத் தடாகத்திலும் அவள் மாளிகை மிகவும் விருப்பம்படி யிருப்பதனால் எங்களுக்கு வசதியாயிருக்கின்றது என்பதாம். அவளுக்குப் பருவம் வந்தவுடனே அவளுடைய நோக்கம் பேச்சு முதலியவை ஆடவர் மனத்தை ஆகர்ஷிப்பதனால் அவற்றை மன்மதனுக்கு ஆயுதமாகக் குறித்தார். அவள் நடை மிகவும் அழகிது ஆனதால் அதைக் கற்க நாம் அங்கே வந்தே என்பதுங் கருத்து. இது 'அவளோடு உனக்கென்ன அடை என்பதற்கு உத்தரவு. கற்பான்—பான் ஈற்று வினையெச்சம்.

௩௮. இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்ததுநாண் - மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெ
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து. [காம

38. He whose heart burned like fire, exhausted wit lust, said :—" My heart is broken, great lust has arisen my honor is lost, shame is destroyed, hereafter my lif rests on the words of thy mouth.

(இ - ள்.) [இதுகேட்டு நளன்,] வெம் காமம் தீ உடைய வெப்பமான காமாக்கினி பொருந்தின, நெஞ்சு உடையா மனமுள்ளவனாகி, தேர்ந்து - துணிந்து, (அன்னத்தை நோக் நெஞ்சம் இற்றது - மனம் விண்டுபோயிற்று, இரு காத பெரிய ஆசை, எழுந்தது - உண்டாயிற்று, மானம் - கவுர அற்றது - போய்விட்டது, நாண் - வெட்கம், அழிந்தது - மாயிற்று, மற்று - இதிருக்கட்டும், இனி - இனிமேல், னுடைய வாழ்வு—, உன் வாய் உடையது - உன் வாயின் யிருக்கின்றது, என்றான்—, [நீ அவளிடம்போய்ப் பேசிக் கார் மனுகூலப் படுத்தினல்தான் நான் வாழ்ந்திருப்பே னென் படி,] எ - று.

மற்று என்பது வினைமாற்றில் வந்தது. நெஞ்சுடையா என்னுங் குறிப்புமுற்று ஈண்டு வினையெச்சமாக் கொள்ளப் டது. இனி—எதிர்காலங் காட்டு மிடைச்சொல். இற்றது, அ

து, அழிந்தது, இவை நிச்சயம்பற்றி எதிர்காலம் இறந்தகால
ாயின. (௩௮)

9. வீமன் றிருமகளை மெல்லியலை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன் - சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்
ஒடுங்கிடையாள் றன்பா லுயர்ந்து. [னம்

39. "O good king of the long umbrella that affords
otection, I shall cause Bhima's beautiful daughter to
in your broad shoulders." So saying, the swan flew
vay to her who had a slender waist.

(இ - ள்.) சேமம் - க்ஷேமஞ் செய்கின்ற, நெடு குடையாய் -
பரியகுடையை யுடையவனே, வீமன் திருமகள் ஆம் - வீமன்
களாகிய, மெல்லியலை - மென்மையான தன்மையுள்ள தம
ந்தியை, உன்னுடைய —, வாமம் - அழகான, நெடு புயத்து -
பரிய தோள்களினிடத்திலே, வைகுவிப்பேன் - சேரச்செய்
வன், என்று —, உரைத்து - சொல்லி, அன்னம் —, உயர்ந்து -
மலெழும்பி, ஒடுங்கு இடையாள் தன்பால் - சிறுத்த இடை
யையுடைய தமயந்தியினிடத்து, நீங்கியது - போயிற்று, ஏ, ஆல்
காரங்கள் - அசை.

என்று — இங்கு இடைச்சொல். [இடையியல் ௫ - வது சூ.]
னையொழிந்த அவ்வினையே பொருளாகக் கொண்டது;
தம் என்பது அதன்பொருள். "வீமன் திருமடந்தை மென்
லையை" எனவும் பாடமுண்டு. (௩௯)

. இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்
கொல், இவ்வளவிற் காத லியம்புங்கொல் - இவ்
வளவில், மீளுங்கொ லென்றுரையா விம்மினான்
மும்மதத்தின், மூளுங்கொல் யானை யரசு.

40. The king who possessed killing elephants that
ed their three-fold lusts, sorrowing said:—"Will it
e., the swan) have reached by this time? by this time
l it have seen her? by this time will it have told her
lust? or will it by this time have started back on its
urn?"

[இதுமுதல் ஐந்துபாட்டால் நளனது கைக்கிளை கூறப்படும்.]

(இ - ள்.) மும்மதம் நின்று - மூன்று மதவொழுக்கு நிற்கப் பெற்று, ஆலும் - ஆலுகை செய்யும்படியான, கொல் யானை - கொல்லுகின்ற யானையையுடைய, அரசு - நளமகாராசன், இவ்வளவில் செல்லுங்கொல் - இந்தக்காலத்தில் சென்றிருக்குமோ, இவ்வளவில் காணுங்கொல் - இக்நேரத்தில் பார்த்திருக்குமோ, இவ்வளவில்—, காதல் இயம்புங்கொல் - (நமது) ஆசையைச் சொல்லியிருக்குமோ, இவ்வளவில்—, மீளுங்கொல் - திரும்புமோ (அன்னம்,) என்று உரையா - என்றுசொல்லி, விம்மினன் (துக்கத்தினல்) தேம்பிக்கொண் டிருந்தான், எ-று.

கைக்கிளையாவது ஒருதலைக்காமம்; விரகவேதனை - யெனஅறிக. விரகம் - பிரிந்திருத்தல், வேதனை - துன்பம்.

உரையா—செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். மும்மதங்களாவன, இரண்டு கன்னங்களிலும் வாற்புறத்திலும் ஒழுகுவன. கொல்—ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். [இடையியல் கசு - ம் சூ.] "கொல்யானை யென்னுமிடத்து வினைத்தொகை. 'மும்மதநின்றாலும்' என்றது மதங்களுக்குப் பரவசமா யிருக்கிற தென்பதாம். (௪௦)

41. சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கே
டாவி யுருகி யழிந்திட்டான் - பூவின்
இடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பா னயந்து.

41. Hearing the sweet note of the male pheasant a conversed with its mate, Nala swooned away actuated lust towards Damayanti, whose gait resembled that the swan, who resembled Lakshmi that resides in th lotus, and of whom the red web-footed young swan, ha spoken to him.

(இ - ள்.) பூவின் இடை அன்னம் - பூவில் வாசஞ்செய்கி திருமகளையொத்த, செம் கால் இள அன்னம் - சிவந்த கா யுடைய இளமையான அன்னப்பக்ஷி, சொன்ன—, நடை அ னம் தன்பால் - நடையில் அன்னத்தையொத்த தமயந்தி ளிடத்தில், நயந்து - காதல்கொண்டு, சேவல் - ஆண்குயி

கொடியா ரெனச்செங்கை கூப்பினா னெஞ்சந்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து.

43. Nala, troubled in mind and downcast, heaving sigh, said uplifting his rosy hands:—"Come, O y creepers! for ye are born as emblems of the flexible wais of the maiden, whose breasts are enveloped in a bodice."

(இ-ள்.) [நளன்] நெஞ்சம் துடியா - மனந்துடித்து, நெடி உயிரா - நெடுமையாக மூச்செறிந்து, சோர்ந்து - தளர்ந் கொடியார் - கொடிகளே, வாரணியுங் கொங்கை - கச்சு இட பெற்ற முலைகளையுடைய, மடவாள் - தமயந்தியினுடை நுடங்கு இடைக்கு - துவளுகின்ற இடைக்கு, பேர் உவ ஆக - பெரிய உபமானப்பொருளாக, பிறந்துடையீர் - பிற திருக்கிறீர்கள், (ஆதலால்) வாரிர் - வாருங்கள், என - என்ற செம் கை - சிவந்தகைகளை, கூப்பினான்—, எ - று.

அஃறிணையாகிய கொடிகளை கொடியார் என்று உயர்தி யாகக் கூறியது, "உவப்பினு முயர்வினும்" என்னும் [பொ. வியல் ௨௮ - ம்] சூத்திரத்தின்படி சிறப்பு பற்றி; சிறப் பெண்ணிடைக்கு உவமையா நிற்றல். கொடியார் என்பதற்கு சிலேடையினால் கொடுமையானவர்களே எனவும் பொரு கொள்ளலாம். கூப்பினான்—கூப்பு - பிறவினைப்பகுதி, கூப் தன்வினைப்பகுதி; மெல்லொற்று வல்லொற்றானது பிறவி குதி.

44. கொங்கை யிளநீராற் குளிர்ந்தவிளஞ் சொற்க
பாற், பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின் -
கைநறுந், கொய்தாம வாசக் குழனிழற்கீ ழா
ணை, வெய்தாமக் காம விடாய்.

44. "May I not quench the thirsty longings of burning lust beneath the shade of the sweet-smelling a flower-bedecked hair of Damayanti, whose breasts a like the tender cocoanuts which are pregnant with wat whose soft and pleasant speech is as sweet as the sug cane, and whose beautiful navel is like the lotus beari tank."

(இ-ள்.) கொங்கை இள நீரால் - தனங்களாகிய இளநீ காய்களினாலும், குளிர்ந்த இள சொல் கரும்பால் - குளிர்ச்

ினமெத்தென்ற பேச்சாகிய கருப்பஞ்சாற்றினாலும்; பொங்கு ழி என்னும் பூ தடத்தில் - பொலிவான உந்திச்சுழியாகிய மரைத்தடாகத்தி னிடத்தில், மங்கை - தமயந்தியினது, நறு- சனையுள்ள, கொய் - கொய்து கட்டிய, தாமம் - மாலைகளின், ாசம் - சுகந்தம்பொருந்திய, குழல் - கூந்தலின், நிழற்கீழ் - லிலே, வெய்து ஆம் - வெப்பமான, அ காம விடாய் - அந் காமவருத்தத்தை, ஆறேனோ - ஆறப்பெறேனோ (என்று ச்சன் ஏங்கினான்), எ-று.

அவயவங்களிலுங் கூட்டிக் காள்க. இங்கு ஓகாரம் (ஆசாஸநம்) ... என்கிற பாருளில் வந்தது. இதுவும் புதியன புகுதல்.

இளநீர் — இளமையாகிய நீரையுடைய காய், அன்மொழித் தாகை. (௪௪)

மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற, அன்னம் போய்க் கன்னி யருகணைய - நன்னுதலும், ... னாடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் ததனை, யென்னாடல் சொல்லென்றா ளீங்கு.

45. On the beautiful swan, despatched by Nala, ap- aching the damsel, she who had a beautiful forehead ving her game went to a retired spot and said:—"Tell what is the news you bring?"

(இ-ள்.) மன்னன் விடுத்த - அரசன் அனுப்பிய, வடிவில் கின்ற - ரூபத்தினால் விளங்குகின்ற, அன்னம் போய் — னி அருகு - தமயந்தியின் பக்கத்தை, அணைய - சேர்ந்த , நல் நுதலும் - நல்ல நெற்றியையுடைய தமயந்தியும், ஆடல் விட்டு - தன்விளையாட்டைத் துறந்து, தனி இடஞ் சர்ந்து - தனித்த இடத்திலே வந்து, அதனை - அவ்வன்னத் தநோக்கி, ஈங்கு - இவ்விடத்தில், என் நாடல் - என்ன விரும் பது, சொல்—, என்றாள்—, எ-று. ஈங்கு - அசை.

விடுத்த, திகழ்கின்ற—, இரண்டும் அன்னத்தின் விசே ணம். வடிவில் — ஐந்தனுருபு, ஏதுப்பொருளில் வந்தது, டல்—ஆகுபெயர். (௪௫)

46. செம்மனத்தான் றண்ணளியான் செங்கோலான்
மங்கையர்கள் தம்மனத்தை வாங்குந் தடந்தோ
ளான் - மெய்ம்மை, நளனென்பான் மேனிலத்து
நானிலத்து மிக்கான், உளனென்பான் வேந்
னுனக்கு.

46. The swan in reply said :—"There lives a kin
named Nala, who is possessed of a virtuous heart, benev
lent disposition, a right sceptre, and broad shoulders th
attract the mind of maidens. He is great in heaven and o
earth. In truth he is your king (i. e. husband.)"

(இ - ள்.) [அன்னஞ் சொல்லத் தொடங்கிற்று.] செம் மன
தான் - செம்மையான மனமுள்ளவன்; தண் அளியான்
குளிர்ச்சியான கிருபையுள்ளவன்; செங்கோலான் - செவ்வை
யான் ஆளுகையுள்ளவன்; மங்கையர்கள் தம் - பெண்களுடை
மனத்தை - மனங்களை, வாங்கும் தடம் தோளான் - இழு
கும்படியான பெரிய புசங்களையுடையவன்; மேல் நிலத்தும்
மேலுலகத்திலும், நால் நிலத்தும் - நால் வகைப்பட்ட பூ
மியிலும், மிக்கான் - மேம்பட்டவனாகி, உளனென்பான் - இரு
கிறவனென்று சொல்லப்பட்ட, நளனென்பான் - நளனெ
பவன், உனக்கு—, வேந்தன் - அரசன் [கணவன் என்கிறப
மெய்ம்மை - இது சத்தியம், எ-று.

'உள னென்பால்' எனப் பாடமோதல் நன்று; அப்போது
கான் - மேம்பட்டவனாகிய, நளனென்பான் - நளனெ
சொல்லப்பட்டவன், உனக்கு வேந்தன் - உனக்குத்தலைவ
என்பால் உளன் - என்வசத்தி லிருக்கின்றான், எனப்பொ
அமையும். என்பான் — அசையென்னவுமாம். இப்படிப்பட
வனை உனக்குக் கணவனாக்குகிறேன் என்பது கருத்து.

அன்றியும், நளன் என்பான் உனக்கு வேந்தனுளன் - கண
னாகத் தக்கவனா யிருக்கின்றா னெனவு முரைக்கலாம்.

நான்குநிலங்களாவன,—குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெ
தல் என்பனவைகளில் பாலை நீங்க நன்மக்கள் குடியிருப்ப
குரிய மற்றை நான்குமாம். நானிலம் - நாற்கடல் சூழ்
நிலமென உரைப்பாரு முளர். (ச

47. அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியும் — திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு.

47 If the red-eyed, powerful Vishnu cannot, in this extensive and beautiful world, be compared to Nala in the possession of the most virtuous heart, benevolent eyes and victorious shoulders, who then among the charioteers can be compared to him?

(இ - ள்.) அம் கண் மா ஞாலத்து - அழகிய இடம் பரி ...ான பூமியில், அவற்கு - அந்த நளனுக்கு, அறம் கிடந்த - தரு ...ம் தங்கிய, நெஞ்சும் - மனமும், அருள் ஒழுகு - தயாரசம் பொழிகின்ற, கண்ணும் —, மறம் கிடந்த - வீரம் நிலைத்த, திண் ...தோள் வலியும் - உறுதியான புஜ பலமும், (ஆகிய இவைகளி ...ல்) திறம் கிடந்த - சகல சாமர்த்தியமும் பொருந்திய, செம் ...கண் மால் - சிவந்த கண்களையுடைய விஷ்ணுவே, அல்லனேல் - ஒப்பல்லாமற்போனால், தேர் வேந்தர் - (மற்ற) ரதாதிபதிக ...ாகிய அரசர், ஒப்பரோ - ஒப்பார்களோ [ஒவ்வார்கள்], - று.

திருமாலே யன்றி அவனுக்கு யாரையும் ஒப்பிடக்கூடா ...என்பது கருத்து. பின் ஒப்பர் என்பதனால், அல்லனேல் என ...னேடும் ஒப்பு என்பது கூட்டப்பட்டது. ஏல், எனில், ...றால், ஆனல், இவற்றோடுசேர்ந்த வினைமுற்று வினையெச் ...பொருளைத் தரும். (சன்)

... புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
உள்ளங் கவர வொளியிழந்த - வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன்.

48. Damayanti upon whose soft tresses swarms of bees ...ighted, on hearing the word of the swan, was pierced in ...e heart by the flowered arrows (of Cupid), and looked ...ke the moon that had lost its splendour.

(இ - ள்.) வண்டின் பொதி - வண்டின் கூட்டம், இருந்த —, ...மெல் ஓதி - மெல்லிய கூந்தலையுடைய, பொன் - திருமகள்

போன்ற தமயந்தி, புள்ளின் மொழியினொடு - அன்னப் பறவை யின் பேச்சோடுகூடவே, பூ வாளி - மலரம்பு, தன்னுடைய— உள்ளம் கவர - மனத்தைக் கிரகிக்க, ஒளி இழந்த - காந்தி யற்ற வெள்ளை மதி - வெண்மையாகிய சந்திரன், இருந்தது ஆ என்ன - இருந்ததைப்போல, வாய்ந்து - (வெண்ணிறத்தை பொருந்தி, இருந்தாள்—, எ - று.

புள்ளின் மொழியினொடு என்றது விரைவைக் காட்டுகி றது. முன்னமே நளனைக்கேட்டு ஆசைகொண் டிருந்தவள் துலால் அன்னம் உனக்குப் புருஷனுக்குவே னென்றவுடனே காமமிகுந்து அதனால் உடம்பு வெளுத்திருந்தாள் என்ப கருத்து. பூவாளி-மன்மதனுமாம்.

கவர—காரணப்பொருட்டாய் வந்த செயவெனெச்சம்.

49. மன்னன் மனத்தெழுந்த மையனோ-யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி - முன்னம்
-முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப் பாரா
மயங்கினா ளென்செய்வாள் மற்று.

49. On the swan relating to her the extent to whic lust had arisen in the heart of Nala, Damayanti's hea melted within her, and imagining herself as having alrea embraced him, she gazed upon her breasts and beca quite intoxicated (with lust). What else could she do

(இ-ள்.) மன்னன் மனத்து - நளன் மனதில், எழுந்த - உ ாகிய, மையல் நோய் அத்தனையும் - காமநோயை யெல்ல அன்னம்—, உரைக்க - சொல்ல, அகம் உருகி - மனந் தளர் முன்னம் - முன்னதாக, முயங்கினாள் போல் - தழுவிக்கொ டவள்போல், தன் முலை முகத்தை—, பாரா - பார்த்து, மய கினாள் - மயக்கம்பொருந்தி யிருந்தாள் (தமயந்தி) மற்று எ செய்வாள் - இன்னம் யாது செய்யமாட்டுவாள், எ - று.

டுன்னுக்குத் தன்மேல் அதிக ஆசை இருப்பதைக் கேட் டனே அவனைத் தழுவிக்கொண்ட தாகவே பாவித்துத் த கவிழ்த்து ஒன்றுந் தோன்றாமல் மயங்கியிருந்தாள் என்ப கருத்து. இங்கு மற்று பிறிதென்னும் பொருளில் வந்தத 'முயங்கினாள்' எனவும் பாடமுண்டு, அப்போது அவன் தன்னை

ழுவிக்கொண்டதாக என்று உரைத்துக்கொள்க. பாரா — சய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம், விகுதியே லங்காட்டும்.

வாவி யுறையு மட வனமே யென்னுடைய, ஆவி யுவந்தளித்தா யாதியால் — காவினிடைத், தேர் வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென் றுரைத்தாள், பார்வேந்தன் பாவை பதைத்து. (சக)

50. The daughter of him who ruled the earth (i. e. King Bhima) being troubled in mind, said :—"O thou young swan that livest in tanks! thou hast become the means of causing joy to my soul. Return to the garden, and tell the king who rides in chariots, my state (of mind)."

(இ—ள்.) பார் வேந்தன் பாவை - வீமராஜனுடைய மகளா கிய தமயந்தி, பதைத்து - மனம்பொறாமல், வாவி உறையும் - தடாகத்தில் வாசஞ்செய்கிற, மட அனமே - மடமையைபொருந்திய அன்னமே, என்னுடைய—, ஆவி - உயிரை, உவந்து அளித் தாய் - சந்தோஷித்துக் கொடுத்தவனுக, ஆதி - ஆகிறாய், காவி னிடை - தோட்டத்தில், சென்று - போய், தேர் வேந்தற்கு - மகா ராசனுக்கு, என் நிலைமை - என்னுடைய காதல் விஞ்சி நிற்கும் விதத்தை, உரைத்தி - சொல், என்று—, உரைத் தாள் - சொல்லினுள் (தமயந்தி), எ - று. ஆல் - அசை.

என்னு முதனிலை, முன்னிலை இகர விகுதி தகர எழுத்தப் பேறுபெற்று ஆதி ஆயிற்று. தி - விகுதி என்பதே சேர். வருதி, முதலியவையும் இத்தன்மையவே. இவை நிகழ்கால முன்னிலை யொருமை முற்றாயும் ஏவலொருமை முற்றாயும் ம். (ருo)

மன்னன் புயநின் மலர்க்கைக்குக் கச்சாகும், என் ன முயங்குவிப்பே னென்றன்னம் — பின்னும் பொருந்தவன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய், இருந்தவன்பாற் போன தெழுந்து.

51. "I shall cause the shoulders of the king to become covering to your soft hand," said the swan; and so saying, after a few adapted words about Nala, it rose and flew

away to him who was pierced by the flowered arroy
of cupid.

(இ - ள்.) மன்னன் புயம் - நளனுடைய புஜமானது, நின
உன்னுடைய, மலர் கைக்கு - பூபோன்ற கைத்தலத்துக்
கச்சு ஆகும் - கிஞ்சுகம் ஆகும், என்ன - என்று சொல்லும்ப
முயங்குவிப்பேன் - அணையச்செய்வேன், என்று—, அ
னம்—, பின்னும் - மேலும், பொருந்த - பொருந்தும்படி, அ
பால் - இவ்விடத்தினால், ஓதி - சொல்லி, எழுந்து - அவ்விட
விட்டு எழும்பி, மலர் பூ கணைகள் - மலர்களாகிய அழகா
அம்புகள், பாய இருந்தவன்பால் - பாயும்படி இருந்தவனி
நளனிடத்து, போனது - போயிற்று, எ - று.

நளன் உன்னைக் கலியாணஞ் செய்யும்படி செய்வேனென்
தமயந்திக்குச் சொல்லி அன்னம் காமமுற்றிருந்த நளனிட
சென்றதென்பது கருத்து.

பாணிக்கிரகணத்தில் பெண்கையைப் புருஷன் தன் கையா
பிடிப்பதாகையால், மன்னன்புய நின்மலர்க்கைக்குக் கச்சாகு
என்றது. "வனமுலைக்குக் கச்சாகும்" எனவும்பாடம். (௫

52. கொற்றவன்றன் றேவிக்குக் கோமகடன் றோழி
உற்ற தறியா வுளநடுங்கிப் - பொற்றொடிக்கு [
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனை
கூறினாள் பெற்ற கொடி.

52. The (attendant) maidens of the king's daugh
not knowing what had happend, became afraid and
the king's wife that some thing had taken possessio
Damayanti; and the queen mother mentioned the wh
affair to the king.

(இ - ள்.) கோமகள் தன் - இராஜகுமாரியாகிய தமய
னுடைய, தோழியர்கள் - தோழிமார், உற்றது - (அவளுக்
நேர்ந்ததை, அறியா - அறியாமல், உளம் நடுங்கி—, கொ
வன்றன் தேவிக்கு - வீமராஜனுடைய மனைவியுடன், பொ
தொடிக்கு - பொன்னாலாகிய வளையலையுடைய தமயந்தி
வேறுபாடு - வேற்றுமை (யாதோ,) உண்டு என்றார் - உண்
யிருக்கிறதென்று சொல்லினார்கள்; பெற்ற கொடி - (அவளை

யற்றவளாகிய அரசி, அதனை - அச்செய்தியை, வேந்தனுக்கு
ினாள் - வீமராசனுக்குச் சொன்னாள், எ-று. மற்று - அசை.
'டுங்கி என்னும் செய்தெனெச்சம் உளத்தின் வினையாதலால்
னவினை'' என்கிற சூத்திரவிதிப்படி 'என்றார்' என்னும் பிற
த்தாவின் வினையில் முடிந்தது. வேறுபாடாவது உடம்பு
ளுத்தது முதலியன. வேறுபாடு—வேறு+படு, இரண்டு
ாருசொல்லாய்ப் பகுதியாயிற்று. பாடு - முதனிலை விகாரப்
ட் தொழிற்பெயர். அறியா - அறிந்து என்று பொருள் கூறி
ம் அமையும். கொடி - உவமையாகுபெயர். தேவிக்கு—நான்
ுருபு கொடைப்பொருளில் வந்தது. (௫௨)

கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்
மருங்குலவ வார்முரச மார்ப்ப - நெருங்கு [கால்
புரிவளை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாண் மனை.

53. Surrounded by dark-haired damsels, who with their
r hands fanned him with chowries causing refreshing
eeze on both sides, and amid the beating of drums and
e blowing of the twisted conchs, king Bhima entered
apartment of her, whose hands were ornamented with
ed bangles.

-ள்.) [அதுகேட்டு வீமராசன்,] கரு குழலார் - கருமை
கூந்தலுள்ள பெண்களுடைய, செம் கையினால் - செம்மை
ப கையினால், வெண் கவரி - வெண்சாமரையிலிருந்து, பைங்
- பசுமையான காற்று [இளங்காற்று], மருங்கு - பக்கங்
ல், உலவ - வீச, வார் முரசம் - வாரினால் இறுக்கப்படும் பேரி
அல்லது பெரியபேரிகை, ஆர்ப்ப - சப்திக்க, நெருங்கு -
நங்கியிருக்கிற, புரி - சுருளாயிருக்கிற, வளை - சங்குகள்,
று ஏங்க - நிலைபெற்றுச் சப்திக்க, போய் - சென்று, பெற்ற -
ன் பெற்ற, வரி வளை கை - நல்ல ரேகையுள்ள வளையல்க
ணிந்த கையையுடைய, நல்லாள் - தமயந்தியினது, மனை -
ரிகையில், புக்கான் - பிரவேசித்தான்.

நின்றென்பது அசையும் ஆம். "கருங்குழலார் செங்கையினால்
ண்கவரி பைங்கால்'' என்று ஒன்றோடொன்று மாறுபடா
ாருள் குறித்தமையினால் இது முரண்தொடை.

உலவ—உலவு - பகுதி, இது "குமிய தன்கீழா" என்பதினு
உலா என்பது உல எனக்குறுகி, உகரச்சாரியை ஏற்றது. உல
ஆர்ப்ப, ஏங்க,—இவை வினைச்செவ்வெண். (ரு

54. கோதை சுமந்த கொடிபோ லிடைநுடங்கத் த
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள்-மீதெல்லா
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தார மெல்லோதிப் பொன்.

54. Damayanti, who resembled Lakshmi and who soft hair was decorated with garlands of flowers, ov which, the joyous bees flew humming beautiful airs, like creeper bearing a garland, bending her waist prostrat herself at the sacred feet of her father.

(இ - ள்.) மீதெல்லாம் - மேலெல்லாம், நின்று—, காந் ரம் பாடி - இசையைப்பாடி, களிவண்டு - களிக்கின்ற வண் கள், அரற்றும் - கூவப்பெற்ற, பூ தார் - பூமாலைசூடிய, அ அந்த, மெல் ஓதி - மேன்மையான கூந்தலையுடைய, பொன் திருமகளோடொத்த தமயந்தி, கோதை சுமந்த - மாலைசுமந் கொடி போல் - கொடியைப்போல், இடை—, நுடங்க - அசை தாதை திருவடிமேல் - தந்தையின் அழகிய பாதங்களின்மே வீழ்ந்தாள்—, [தொழுதாளென்றபடி], எ-று. தான் - அசை

கொடிபோல் வீழ்ந்தாளென்று கூட்டுக. பூந்தார எ குறிப்புப்பெயரெச்சமுமாம். அரற்றும் என்கிற பெயரெ பூந்தார் என்கிற இடப்பெயரைக்கொண்டது. கோதைசும கூந்தலைச்சுமந்த என்வு முரைக்கலாம். (ரு

55. பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மே
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப் - பாரரக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளு மணம்.

55. The king of the solar race saw his daughter w stood with her crescent-like forehead, shedding for great beauty and dripping with perspiration, and thoug of that kind of marriage, by which a husband is select by wearing a garland round his neck.

(இ-ள்.) பேர் அழகு - பெரிய அழகு, சோர்கின்றது என்ன வழிகிறது என்னும்படி, பிறை நுதல் மேல் - சந்திரப்பிறை

57. மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான்
டிரைக்குந், தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி - ந
தார், பாவேய்ந்த செந்தமிழா மென்னப் ப
தே, கோவேந்தர் செல்வக் குழாம்.

57. Just as the name of Swarki, who may be comp
to Harichandran, whose white umbrella is adorned
precious pearls, who possesses great war elephants,
who is decked with garlands of flowers upon which
bees sing, is universally known, being made the sub
of sweet Tamil verse, so spread far and wide the illus
ous assemblies of kings of this earth.

(இ - ள்.) மா - பெரிய, முத்தம் - முத்துகளணிந்த, வெ
குடையான்-வெள்ளைக்குடை யுடையவனும், மால் க
பெருமைபொருந்திய யானையுடையவனும், வண்டு—, இ
கும் - கூவப்பெற்ற, தாமத்து - பூமாலையுள்ள, அரிச்சந்திர
அரிச்சந்திரனைப்போலச் சத்தியவானும் ஆகிய, சுவர்க்
சுவர்க்கி என்பவனுடைய, நாமம் தார் - நாமமாலையை,
வேய்ந்த - பாடல்களினு லணியப்பெற்ற, செம் தமிழ்
என்ன - செவ்விய தமிழ்ப் பிரபந்தம்போல், கோ வேந்த
பூமி ஆளும் அரசருடைய, செல்வம் - செல்வம் பொருந்
குழாம் - கூட்டமானது, பரந்தது - வியாபித்தது,
குழாம் வீமநகரம் வரும்பொருட்டு நாற்றிசையும். பரவ
என் - று. ஏ - அசை.

மால்—உரிச்சொல்லாதலின் "இடையுரிவடசொல்" என்
விதியினுல் திரியாது நின்றது. (கு

58. செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வ
மார்பன், கந்தடையும் வேழக் கடைத்தலைவாய
வந்தடைந்த, பூவேந்தர் தங்கள்கிளை பொன்ன
வீண்டிற்றே, கோவேந்தன் மாதைக் குறித்து.

58. The attendants of the earthly sovereigns, who c
veting Damayanti arrived at the court-yard, where th
elephants are tied, of king Bhima, who wears beautif
armour, who is decked with garlands of flowers upo
which the bees sing, and upon whose chest the goddess
courage dwells, came crowding to the golden capital.

(இ - ள்.) செம் தடையும் - நல்ல கவசமும், வண்டு உறை தார் - வண்டுகள் வாசஞ்செய்கின்ற மாலையும், செய்யாள் - ஸ்ரீதரியலக்ஷ்மியும், வளர் - வளர்கின்ற, மார்பன் - மார்பையுடையவனாகிய வீமராஜனது, கந்து - கட்டுத்தறியை, அடையும் - அடைந்திருக்கிற, வேழம் - யானையையுடைத்தாயிருக்கிற, கடைத்தலைவாய் - தலைக்கடையில், கோ வேந்தன் - வீமராஜனுடைய, மாதை குறித்து - மகளாகிய தமயந்தியைக் குறித்து, வந்து அடைந்த - வந்து சேர்ந்த, பூ வேந்தர் தங்கள் - பூபாலர்களுடைய, கிளை - பரிவாரமானது, பொன் நகரில் - அழகான நகரத்தினிடத்தில், ஈண்டிற்று - நெருங்கிற்று, எ - று. ஏ - அசை.

வீமராஜன் அரமனைவாசலில் வந்து அரசருடைய சேனை முதலானவைகள் அந்நகரத்தில் இடம் இன்றி நெருங்கின என்பது கருத்து. தார், செய்யாள், என்னும் இடங்களில் உம்மை தொகாரத்தால் தொக்கன.

செய்யாள் — செம்மை - பகுதி, பண்பு, ஆள் - பெண்பால் விகுதி, மை கெட்டு முன்னின்ற மகரமெய் யகரமாகத் திரிந்து க்குறின் முன்னொற் றுதலால் இரட்டி முடிந்தது. (ருஅ)

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும் உள்ளும் புறமு மினிதுறைந்தார் - தெள்ளரிக்கண், பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன் றன், கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

9. With their minds filled with thoughts of the iaut king of Vidarpa's daughter, whose beauty shone e gold, and whose eyes were as clear as those of kshmi, they, with heartfelt joy, took up their abode the groves where the birds lived, and by the tanks in ich grew the flower of the lotus.

(இ - ள்.) தெள் அரி கண் - தெளிதான ரேகைகளுள்ள ண் கண்ணையுடைய, பூ மகளை - இலக்குமிக்குச் சமானமானவளும், பொன்னை - பொன்போல் விளங்குகிறவளுமான, பொரு வல் - யுத்தஞ் செய்யவல்ல ஆயுதங் (தாித்த), விதர்ப்பன் தன்-

விதர்ப்ப ராஜனுடைய, கோ மகளை - மேன்மையான் மகளாகிய தமயந்தியை, தம் மனத்தே கொண்டு - தங்கள் மனங்களிற் சிந்தித்துப் (பல நாட்டரசரும்), புள் உறையும் - பக்ஷிகளிருக் கின்ற, சோலைகளும் - தோட்டங்களிலும், பூ கமல வாவிகளும் - அழகிய தாமரைத் தடாகங்களிலும், உள்ளும் புறமும் - மன தின் உள்ளும் வெளியிலும், இனிது - சந்தோஷமாக, உறைந் தார் - வாசஞ்செய்தார்கள், எ-று.

வந்த அரசர் ஊரில் இடம்போதாமையால் தோப்புகளிலும் குளக்கரைகளிலும் வசித்தார்க ளென்பது கருத்து.

கோ என்பது இலக்கணையால் மேன்மையை யுணர்த்திற்று அவ்விடங்களின் பொலிவினாலும் தமயந்தியைக் காண்பே மென்கிற எண்ணத்தினாலும் உள்ளும் புறமும் இனிது என் றது. அச்சோலை முதலியவைகளின் உள்ளிடத்திலும் வெ யிடத்திலும் ... பொருந்தும். பூமகளைப்பொன்னைக் ... மகளை என்னுமிடத்தில் "ஒருபொருள்மேல்" என்கிற சூத் விதியை அமைத்துக்கொள்க. பூமகள் என்பதைப் பூதே கும், பொன் என்பதைச் சீதேவிக்கும் கொள்ளினு மமையு

60\. வழிமேல் விழிவைத்து வாணுதலா ளும், பெ
மேற் செவிவைத்து மோகச் - சுழிமேற்றன், ெ
சோட வைத்தயர்வான் கண்டா னெடுவா
மஞ்சோட வன்னம் வர.

60\. With his eye fixed upon the path (of the sw... with his ear on the name of her who possessed a b... forehead, and with his heart tossed about in the whirlp... of his own lustful desires, he who was cast down ... dejected, saw in the heaven the swan returning wi... resplendent beauty.

(இ-ள்.) வழிமேல் - அன்னம் போனவழியில், விழி வைத்... கண்ணைவைத்து, வாள் நுதலாள் - பிரகாசமான நெற்றி... யுடைய தமயந்தியினது, நாம மொழிமேல் - பெயராகிய செ... லின்மேல், செவிவைத்து - காதைவைத்து, மோக சுழிமே... மோகமாகிய நீர்ச்சுழிமேல், தன் நெஞ்சு - தன்மனதை, ... வைத்து - ஓடும்படி வைத்து, அயர்வான் - வருந்துகின்ற நள...

ஆ—ஈறுதொக்க வினையெச்சம். கேளா — செய்யா என்னும் உடன்பாட்டு வினையெச்சம்; கேளாமல் என்றபோது எதிர்மறை வினையெச்சம். பார்த்து முதலிய வினையெச்ச வடுக்குக் காரணகாரியப் பொருத்தத்தால் வந்தது. (சுக)

62. அன்னக் குலத்தி னரசே யழிகின்ற; வென்னுயி
ரை மீள வெனக்களித்தாய் - முன்னுரைத்த; தே
மொழிக்குத் தீதிலவே யென்றான் றிருந்தாரை;
—வெமொழிக்கும் வேலா னெடுத்து.

(62. He whose duty was to damp the joys of his enemies, asked, "O king of the race of the swan! you have restored to life my soul which was well nigh perishing. Is the honey-mouthed maiden, of whom you spoke before, safe from evil?"

(இ-ள்.) திருந்தாரை - சத்துருக்களை, ஏம் ஒழிக்கும்-களிப்பு ஒழியச்செய்கிற, வேலான் - வேலையுடையவனுன நளன், அன்னம் குலத்தின் - அன்னங்களின் கூட்டத்துக்கு, அரசே - அரசனாகிய ஓ பெரிய அன்னமே, அழிகின்ற - நாசமடையும்படியிருந்த, என் உயிரை - என்பிராணனை, மீள - திரும்பவும் எனக்கு—, அளித்தாய் - கொடுத்தாய், முன் உரைத்த - (நீ) முன்சொன்ன, தேமொழிக்கு - தேன்போலும் பேச்சையுடைய தமயந்திக்கு, தீது இலவே - துன்பங்கள் இல்லையே, எ[ன்று] என்றான் - இப்படியாக எடுத்துச் சொன்னான், எ-று.

நளன் தன் காதலினால் அவளுக்குத் தீங்கு ஒன்றும் இல்லாதிருக்கிறதா என்று தமயந்தியின் க்ஷேமத்தை விசாரித்தா[ன்] என்பது கருத்து. தேமொழி — உவமத்தொகைப்புறத்து பிறந்த அன்மொழித்தொகை, தேன் என்பதில் "தேன்மொழி" சூத்திரத்தினால் னகரங்கெட்டது. எடுத்துச்சொல்லுதல் - [வி]தானமாகச் சொல்லுதல், மேன்மைப்படுத்தி-எனவுமாம். ஏம் - ஏமம் இடைகுறைந்தது.

தீதிலவே என்னுமிடத்து தீது தீமை என்பதுபோல் ப[ண்]புப்பெயர்; —து - பண்புப்இபயர் விகுதி; ஒன்றன்பால் விகு[தி]யன்று; ஆதலால் இது பால்பகா அஃறிணைப்பெயர், இங்[கு] பன்மைக்காய் பன்மை வினைகொண்டது. (சு[உ])

63. கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடி
பால், உற்றதுவு மாங்கவடா னுற்றதுவும் - முற்
றும், மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு.

63. The king was bereft of his former reason on hearing the words of the swan, which gave him a full account of its going according to his sovereign command, and its meeting with her who came of a noble race.

(இ-ள்.) அன்னம்—, கொற்றவன் தன் - அரசனுடைய, ஏவலினால் - கட்டளையினால், அ குலக்கொடிபால் - அந்த நற்குலத்திற்பிறந்த கொடிபோன்ற தமயந்தியினிடத்து, போய்—, உற்றதுவும் - சேர்ந்ததும், அவள்—, ஆங்கு - அப்படி, உற்றதுவும் - பொருந்திய கருத்தும், முற்றும் - முழுதும், மொழிந்தது - சொல்லிற்று; மொழி கேட்டு - அச்சொல்லைக்கேட்டு, [கேட்டதனால்,] அரசற்கு - நளனுக்கு, உள்ள அறிவு - முன்னிருந்த அறிவும், அழிந்தது - கெட்டது, எ - று. தான் ஏ அசைகள்.

அன்ன மொழி - அப்படிப்பட்டசொல்லை எனவும் கொள்ளலாம். அப்போது அன்னம் என்பது வருவிக்கவேண்டும். குலக்கொடி என்பதற்குக் குலாசலம் குலமணி என்பதுபோல மேன்மையுள்ள கொடி எனவும் பொருளுரைக்கலாம். அவள் தன்னிடத்தில் மிகுந்த காதல்கொண்டு வருந்துகிறாள் என்பதைக் கேட்ட அரசனுக்கு ஒன்றுந் தோன்றாமல் மோகமாயிற்று என்பது கருத்து.

கேட்க என்பது கேட்டு எனத்திரிந்தது, [வினையியல் உஎ-ம் சூத்திரம்,] ஈண்டு அவ்வெச்சம் காரணப்பொருட்டாய் வந்தது. "உயிர்வரினுக்குறள் ஓடும்" என்றதனால் உகரம் கெடாமல் உற்றதுவும் என உடம்படுமெய் பெற்றது. (௬௩)

64. கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி - மீட்டும்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து.

64. His mind not catching the words of the swan, but parting through his organ of hearing, and supporting

his life with an empty heart, the king, like an entrapped elephant in a pit, dropped down on a side, like a tender leaf in the fire.

(இ-ள்.) கேட்ட செவி வழியே - அச்செய்தி கேட்ட காதின் வழியாக, உணர்வு - அறிவு, கேளாது - கேளாமல், ஓட - ஓடிப் போக, ஓட்டை மனத்தோடு - ஓட்டையான மனத்தினால், உயிர் தாங்கி - பிராணனைத் தாங்கிக்கொண்டு, மீட்டும் - திரும்பவும், கோமான் - அரசன், தழலில் படு தளிர்போல் - நெருப்பில் பட்ட தளிரைப்போல், சாய்ந்து - வாடிவீழ்ந்து, குழியில் படு கரி போல் - படுகுழியிலேவீழ்ந்த யானையைப்போல், கிடந்தான் - (ஓய்ந்து) கிடந்தான், எ - று.

கேளாது ஓட என்பதற்கு எவ்வளவு வலிந்தழின்றுளும் அறிவுமயங்கிற் றென்பது கருத்து.

கோமான்—இதில் மான் விகுதி. (௬௪)

65. கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரை-ப்ப, ஏதமிலாக் காட்சியர்வந் தெய்திஞர்-போதி-பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாட-அடையாத வாயி லகம்.

65. In order to proclaim distinctly to the king, the day of Damayanti's Swayamvaram, accomplished messengers arrived at the ever open (i. e. hospitable) door of him who possessed a country, where the male and female bees sleep together in the same flower, and where the noisy din of the waters is heard.

(இ-ள்.) கோதை சுயம்வர நாள் - தமயந்தியின் சுயம்வரத்துக்கு இட்டநாளை, கொற்றவனுக்கு - அரசனுக்கு, உற்று உரைப்ப - நன்ருய்ச் சொல்லும்பொருட்டு, ஏதம் இலா - குற்றம் இல்லாத, காட்சியர் - அறிவை யுடையவராகிய தூதர், போதில் - பூவில், பெடையோடு - பெண்வண்டுகளுடனே, வண்டு உறங்கும் - ஆண்வண்டுகள் தூங்கப்பெற்ற, பேரொலி நீர் நாடன் - மிகுந்த வொலியுள்ள நீர்வளம் பொருந்தின நாட்டையுடையவனானது, அடையாத - (என்றும்) மூடாத, வாயில் அகம் - வாசலினிடத்து, வந்து எய்திஞர் - வந்து சேர்ந்தார்கள், எ-

வாசல் மூடாதிருத்தல் அச்சம் இல்லாமையாலும் எப்போதும் கொடுப்பதற்கு யாசகரை யெதிர்பார்ப்பதினாலும் என்று அறிக. (௬௫)

66. காவலன்றன் றூதர் கடைக்கா வலர்க்கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலும் - மாவின்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து.

66. When the messengers of king Bhima entered the Court of Nala on his permission, and related the news (of Damayanti's marriage), he whose withered shoulders were pierced by the flowered arrows (of Cupid), ordered his magnificent horse chariot to be made ready.

(இ - ள்.) காவலன் தன் தூதர் - விதர்ப்பராஜனுடைய தூதர்கள், கடை காவலர்க்கு - வாசல் காப்போருக்கு, அறிவித்து—, ஏவலின் - (அரசனுடைய) உத்தரவினால், போய் - உள்ளே போய், ஈதென்று - காரியம் இன்னது என்று, இயம்புதலும் - சொன்னவுடனே, பூ வாளி பாய - மலரம்பு பாய்வதினால், மெலிந்த தோள் - தளர்ந்த புயங்களையுடைய, வேந்தன் - நளராஜன், விரைந்து - துரிதப்பட்டு, மாவின் - குதிரைகளை, பொலிந்த தேர் - அழகியதேரின், பூட்டு என்றான் - (சாரதியை நோக்கி) கட்டு என்று சொன்னான், எ - று.

மாவின் என்னும் ஐந்தாம்வேற்றுமையுருபு செயப்படு பொருளில் மயங்கிவந்தது "யாதனுருபில்" என்கிற [பெயர் - ௬௦] சூத்திர விதிப்படி; அல்லது இன் சாரியை யாகவும், ஐ உருபு தொக்கதாகவும் கொள்ளலாம். (௬௬)

67. கெட்ட சிறுமருங்குற் கேழ்மகளிர் நீள்வரம்பில்
இட்ட பசுங்குவளை யேரடிக்க - கட்டி
கரையத்தே னூறுங் கடனாடனார்க்கு
விரையத்தே ரூரென்றான் வேந்து.

67. The king (Nala) commanded (his charioteer) saying "Drive quickly to the country of Vidarpa which is on the sea-shore, where the lumps of earth dug up by the plough are dissolved in the honey which gushes out of the tender kuvalai flowers, which are cast on the embank-

ments of the fields by the low cast females whose waists are so slender that they are apt to break.

(இ - ள்.) கெட்ட - அழியத்தக்க, சிறு மருங்குல் - சிறிய இடையையுடைய, கீழ் மகளிர் - பள்ளச்சிகள், நீள் வரம்பில் - நீண்ட வரப்புகளிலே, இட்ட - களைந்துபோட்ட, பசு குவளை - பசுமையான நீலோற்பல மலர்கள், ஏர் அடித்த - உழுமாடுகள் பெயர்த்த, கட்டி - மண்கட்டிகள், கரைய - கரையும்படி, தேன் ஊறும் - தேன்சுரந்து ஒழுகப்பெற்ற, கடல் நாடன் - கடற்கரையின் நாடுள்ள விதர்ப்பராஜனுடைய, ஊர்க்கு - நகரத்திற்கு, விரைய - துரிதமாக, தேர் ஊர் - தேரைச்செலுத்து, என்றான் - என்றுசொன்னான், வேந்து - நளமகாராஜன் [சாரதியைநோக்கி,] எ-று.

களை பிடுங்கும்போது பிடுங்கிப் போட்ட குவளைகளினின்றும் ஒழுகுகின்ற தேனால் ஏரடித்த மண்கட்டிகள் கரையத்தக்க வளப்பமுள்ளதுங் கடைசியருஞ் சுந்தரமா யிருக்கப்பெற்றதும் அக் நாடு என்பதாம்.

விரைய என்னும் வினையெச்சம் இங்கு வினையுரி. [சு

68. சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு [illegible]
[illegible]ணுக், கடற்றானை முன்னாகக் கண்டான் - அ[illegible]
கமைந்த, வில்லியரும் பொற்றாம வீமன் திரு[illegible]
ளா, நல்லுயிரும் வாழு நகர்.

68. Nala saw behind him, his country which yie[illegible] clusters of good golden paddy, and before him [illegible] sea-like army of brave and valiant archers, extendin[illegible] the city where lived his sweetheart, Bhima's beaut[illegible] daughter, who was decked with a garland of gold.

(இ - ள்.) சடை செந்நெல் - சடைபற்றிய செந்நெ[illegible]ளது, பொன் விளைக்கும் - பொன்னை விளைவிக்கின்ற, தன் ந[illegible] தன் இராச்சியம், பின் ஆக - பின்புறத்ததாக, கடல் தா[illegible] கடல்போன்ற சேனை, முன் ஆக - முன்புறத்ததாக, அடற்[illegible] வீரத்திற்கு, அமைந்த - பொருந்தின, வில்லியரும் - வில்லுவை[illegible] வீரரும், பொன் தாமம் - பொன்மாலை யணிந்த, வீமன் திரு[illegible] ளாம் - வீமராஜனுடைய அழகுள்ள மகளான தமயந்தியா[illegible]

கண்ணணி—பறவைகளைப் பிடிக்கும்படியான ஓர் கருவியெனினும் தகும். நீங்காத இரவைக்கொடுத்ததே உனக்குக் கண்ணணிந்தது போலும் என்பது கருத்து. எவன் என்பது அஃறிணையிருபாற்கும் பொது வினுவினைக் குறிப்புமுற்று [வினையியல் கக-ஆம்-சூ.] (௧௧௦)

111. தாங்கு நிலவின் றழலபோய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப—ஓங்கு
யிர்ப்பின், தாமங் கரியத் தனியே தளர்கின்
ருள், யாமங் கரியாக வின்று.

111. On the falling-moon-beams striking upon the head of Damayanti, the wings of the bees which swarmed together in her beautiful tresses became singed, and heaving a deep sigh, her hot breath burned to cinders the garland on her breast; and in her solitude, with only the silent watch of midnight to bear witness to her sufferings, she fainted away.

(இ-ள்.) தாங்கும் - சுமக்கின்ற, நிலவின் தழல் - நிலவாகிய நெருப்பு, போய்—, தலைகொள்ள - தலைக்கேறினதினுல் [மிகுதியாக,] தேம் குழல் சேர் - வாசனை பொருந்திய கூந்தலைச் சேர்ந்த, வண்டு—, சிறை வெதும்ப - இறகுவெந்துநிற்க, ஓங்கு உயிர்ப்பின் - மேல் எழுந்த மூச்சினுல், தாமம் கரியா - பூமாலை கரியாகும்படி, இன்று - இந்தநாளில், யாமம் - இரவு, கரி ஆக - சாக்ஷியாக, தனியே தளர்கின்ருள் - ஒன்றியாயிருந்து வாடுகின்ருள் (தமயந்தி,) எ-று.

தழல் தலைக்கொள்வது சிறைவெதும்புதற்குக் காரணம்.

112. மைபிட்ட கண்ணருவி வாரவளை சோரக், கை
யிற் கபோலந் தலம்வைத்து—மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழி
யாள், தானிருந்து செய்வாள் தவம்.

112. When the tears came streaming down from her blakened eyes, and when her bangles had become loose on her wasted wrists, the honey-speeched maiden, resting her cheek upon her hand, while her body suffered, resembled one performing penance, having the honey-charged flowered arrows of Kama for the fire.

(இ-ள்.) தேமொழியாள் - தேன்போலுஞ் சொல்லையுடைய தமயந்தி, மை இட்ட கண் - மை தீட்டிய கண்ணினின்றும், அருவி வார - நீர்வெள்ளம் பெருக, வளை சோர - வளையல் தளர்ந்துவிழ, கையில் —, கபோலதலம் - கன்னத்தை, வைத்து, மெய் வருந்தி - உடம்பு வருத்தப்பட்டு, தேன் இருந்த பூங்கணையே - வண்டுகளிருக்கின்ற பூவாகிய அம்பையே, தீயாக - அக்கினியாகக்கொண்டு, இருந்து —, தவம் செயவாள் - தவஞ் செய்பவளைப்போலிருந்தாள், எ-று. தான் - அசை. ()

113. அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றா
 யக், கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய் - உள்
 ளம், புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்,
 இதயமே போன்ற திரா.

113. The night, whose darkness was so solid, that it could almost be grasped by the hand, and so thick that even fire at the end of a brand could not penetrate its dense obscurity, was as dark as the hearts of harlots, whose attractions impressed every soul.

(இ-ள்.) இரா - இராத்திரியானது, அள்ளிக்கொளல் ஆய் - அள்ளிக் கொள்ளும்படியாகி, அடைய திரண்டு - முற்றுஞ் சேர்ந்து, ஒன்றாய் —, கொள்ளிக்கும் விள்ளாத - கொள்ளிக் கட்டையினாலும் பிரிக்கக்கூடாத, கூர் இருளாய் - நிறைந்த இருளுள்ளதாய், உள்ளம் - (அணைவோருடைய) மனம், புதையவைத்த - நன்றாய்ப் பதியும்படி காட்டிவைத்த, பொதுமகளிர் தங்கள் - வேசிகளுடைய, இதயம் போன்றது - மனத்தை ஒத்திருந்தது, எ-று. ஏ - அசை.

இப்படி யிருக்கையில் சந்திரன் அஸ்தமித்து இருள் சூழ்ந்தது. அவ்வண்ணமாகிய இரவு நீக்கக்கூடாததாய் மயக்கந் தருவதாய்த் தின்பத்திற்கு ஏதுவா யிருப்பதுபற்றி இத்தன்மையுள்ள வேசிமனத்தை உவமித்தார். (௧௧௩)

114. ஊக்கிய சொல்லை ரொலிக்குந் துடிக்குரலா
 னீக்கிய கஞ்சையர் வேல்வாளர் - காக்க
 இடையாமங் காவலர்கள் போந்தாரிருளின்
 புடைவா யிருள்புடைத் தாற் போன்று.

114. The watchmen who were bold of speech, whose voices were as the sounding of the kettle-drum who were girt with belts and armed with lances and swords, entered the city at midnight to see that all was safe, and as they walked their rounds the darkness of their sable-clad forms seemed to be in conflict with the darkness which opposed them.

(இ - ள்.) ஊக்கிய சொல்லர் - மேலோங்கிய சொல்லையுடையவர்களும், ஒலிக்கும் துடி குரலர் - ஒலிக்கின்ற துடியென்னும் வாத்தியம்போன்ற குரலையுடையவர்களும், வீக்கிய கச்சையர் - சல்லடத்தைக் கட்டியவர்களும், [கவசமுள்ளவர்களுமென்றுமாம்,] வேல் வாளர் - வேல் வாள் முதலிய ஆயுதமுள்ளவர்களுமான, காவலர்கள் - காவற்காரர், இருளின் புடைவாய் - இருட்டிலே, இருள்புடைத்தால் போன்று - இருட்டைக் குதித்துத் தள்ளினதுபோலே, இடையாமம் காக்க - நடு ராத்திரியிற் காக்கும்பொருட்டு, மேவார்ந்தார். வந்தார்கள், என்று.

துடியென்பது மலைப்பக்கங்களிலும் பாலை நிலங்களிலும் அடிக்கிற தம்பட்டம், புடை, வாய்,—இரண்டும் ஏழனுருபு. இருள் உள்ள இடத்தில் என்பதும் ஒக்கும். துடியின் குரலையுடையவர்கள் என்றுமாம். (௧௧௪)

115. சேமஞ்சேர் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்றன்
பூவாளி யுட்புகத் துயில்புக்கதே
ஓவாது முந்நீ ருலகு.

115. When the elephants had retired into their stables, when the guitar (செவ்வழியாழ்) whose notes were as sweet (to the ear) as milk (to the taste) had been put into its case, when the flower-frequenting bees had nested themselves in the flowered arrows of Kama, the sea girt earth was wrapt in undisturbed slumber.

(இ - ள்.) களிறு - யானை, சேமம் புக - காவலிடஞ்சேர, தீம் பாலின் - மதுரமான பால்போன்ற, செவ்வழியாழ் - செவ்வழியென்னும் இராகம் பாடுகிற வீணைகள், உள்ளுறை - உறையின் உள்ளே, புகுத - பிரவேசிக்க, தார் வண்டு - பூவில்

மொய்க்கும் வண்டுகள், காமன்தன் - மன்மதனுடைய, பூவாளி னத்தில் புக - ஐவகைப்பட்ட புஷ்பங்களாகிய அம்புகளில் பிரவேசிக்க, முந்நீர் உலகு - சமுத்திரஞ் சூழ்ந்த உலகமானது, ஓவாது - விடாமல், துயில் பயந்தது - தூக்கம் பொருந்தியது, எ - று; தாம் - ஏ - அசை.

யாழ் வாசித்தல் முதலானவை யொழிந்து யாவருந் தூங்கினரென்பது கருத்து. (௧௧௫)

116. ஊனின்றின் றுவகையா லுள்ள வுயிர்ப்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே—தானறன்
னுரைசோரச் சோர வுடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று.

116. The evil spirits which having fed upon human flesh, through joy gave outward went to their inward feelings, went to sleep standing, each one's voice gradually dying away, the body gradually vanishing, the food gradually slipping out from the mouth, and the hands gradually dropping down by the sides.

(இ - ள்.) ஊன் தின்று - மாமிசம் புசித்து, உவகையால் - சந்தோஷத்தினால், உள்ள உயிர் - உள்ளே அடங்கியிருந்த மூச்செல்லாம், புறம்பே தோன்றும் - வெளியில் காணப்படும் படியான, கழுதும் - பேயும், தன் உரை சோரச் சோர - தன் சொல் மிகவுந்தளர, உடல் சோர —, வாயின் இரை சோர - வாயிலிருந்து உணவு விழ, கை சோர நின்று - கையுந் தளரும் படி நின்று, துயின்றது - தூங்கிற்று, எ - று. ஏ - தான் - அசை.

நடு இராத்திரியில் ஒரு முகூர்த்தகாலம் பேயுந் தூங்கும் என்பது வழக்கு. கழுதும் என்கிற உம்மை இழிவு சிறப்பு. (௧௧௬)

117. அன்றி லொருகண் டுயின்றொருகண ணார்வத்
தால், இன்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்
சொல்—இன்று, தவிர்ந்ததே போலரற்றிச்
சாம்புகின்ற போதே, அவிழ்ந்ததே கண்ணீ
ரவட்கு.

117. The old saying, that the Auril bird sleeps with one eye closed, through love watching his sweet consot with other, has this night been proved to be false. So

Damayanti, (missing the watchful eye of Nala) lamented, as she pined (for him), the tear-drops falling from her eyes.

(இ - ள்.) அன்றில் - அன்றிற் பறவை, ஒரு கண் துயின்று - ஒருகண்ணினால் தூங்கி, ஒரு கண் - மற்றொருகண்ணை, ஆர்வத்தால் - அன்பினால், இன் துணைமேல் வைத்து - பிரியமானதன் இணையின்மேல் வைத்து, உறங்கும் - தூங்கும், என்னுஞ் சொல் —, இன்று தவிர்ந்ததே போல் - இன்றைக்கு விட்டது போல், அரற்றி - கூவி, சாம்புகின்றபோது - கூட்டில் அடையும்போது, அவட்கு - தமயந்திக்கு, கண்ணீர் —, அவிழ்ந்தது - ஒழுகிற்று, எ - று. ஏ - அசை.

துணை என்பது ஆணுக்கும் பெண்ணுக்குமாம் ஆதலின் பொதுப்படத் இணையென்றோம். (கக௭)

118. ஏழுலகுஞ் சூழிருள்ர் யென்பொருட்டால் வே
கின்ற, ஆழ்துயர மேதென் றறிகிலேன் — பாழி,
வரையேர் வெனுநெடுந்தோண் மன்னவோ தின்
னும், இரையோ விரவுக் கியான்.

118 "I know not why the seven worlds have been clothed with darkness, or what is the cause of this heavy sorrow, which thus burns on my account. O king, whose broad shoulders are like great mountains, am I to be the prey to this night?"

(இ - ள்.) ஏழ் உலகும் - ஏழு லோகங்களும், சூழ் இருளாய் - சூழ்ந்த இருளுள்ளனவாய், என் பொருட்டு —, வேகின்ற - வேவதினால் உண்டாகிய, ஆழ் துயரம் - ஆழ்ந்த துன்பமானது, ஏது என்று - எக்காரணத்தால் வந்தது என்று, அறிகிலேன் - அறியமாட்டேன்; பாழி வரையோ - பலமுள்ள மலையோ, எனும் - என்று சொல்லப்பட்ட, நெடு தோள் மன்னவோ - நெடுமையான தோளையுடைய மன்மகாராஜனே, ஐ - ஐயோ, யான் - நான், இரவுக்கு - இராத்திரிக்கு, தின்னும் இரையோ - புசிக்கும் புசிப்போ (எனத் தமயந்தி புலம்பினாள்,) எ - று. ஆல் - அசை.

மன்னவோ என்பதில் ஓவைப்பிரியாமல் விளியுருபு எனவுங் கூடும். [பெயரியல் ருசு - ம் சூத்திரத்தின்] "புலம்பினோவை

மாகும்" என்றதைக்காண்க. வேகின்ற என்னும் பெயரெச்சம் அம்புபட்டபுண், சங்குசுட்ட சுண்ணம்பு என்பவைகளிற்போல் துயரம் என்னுங் காரியப்பெயரைக் கொண்டது. இதைக் கருவியில் அடக்குவாரு முண்டு. அறிகிலேன்—அறி - பகுதி, ஏன் - தன்மை யொருமை விகுதி, கு - சாரியை, இல் - எதிர்மறைப் பண்படி இடைநிலையாயிற்று, உகரம் கெட்டது சந்தி. (௧௧௮)

119. கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்குல்
உருவிப் புகுந்ததா லூதை—பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
உண்டுபோ கட்ட வுயிர்க்கு.

119 "Like the flower, which alone is left after the black bees have sucked out the honey, is my life which alone remains after the drowsy evening has imbibed my spirits; and to take away this remaining life has this chill blast of wind come this night, piercing through the black darkness which no instrument can dispel.

(இ - ள்.) கருவிக்கு நீங்காத கார் இருள்வாய் - கருவி கொண்டு நீக்கக்கூடாத கரிய இருட்டிலே, பருகி - (தேனைக்) குடித்து, கார் வண்டு - கரியவண்டு, போகட்ட மலர்போல் - போய்விட்ட பூவைப்போல், மருள் மாலை - மயக்கத்தைச் செய்கின்ற மாலைப் பொழுது, உண்டு போகட்ட - உண்டுபோய் விட்ட, உயிர்க்கு - (என்) உயிர்க்காக, ஊதை - காற்று, கங்குல் உருவி புகுந்தது - இரவை நடுவே பிளந்துகொண்டு வந்தது, எ - று. ஆல் - அசை.

மாலைப் பொழுதிலே வாடி, வண்டு குடித்துப்போன பூவைப்போல் நிசாரமாயிருக்கும் என் உயிரைக் குடிக்க இக் காற்று வந்ததென்று நள்ளிரவில் உண்டாகிய காற்றைத் தமயந்தி வெறுத்தாள் என்பது கருத்து. இக்காலத்துப் போகட்ட என வழங்கியதுபோலும்.

120. எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்—செழுந்
தரளத் தாரோடு சேர்க்குந் துணைதேடுயில்
லாதே, நாரோடு நின்றழிவா ளைந்து.

120. With great anxiety, she rises from her beautiful bed of tender leaves, and then her body again resumes its recumbent posture, and not having any help-mate, she embraces the pillar of shining pearls by her side, till she is overpowered with shame, and becomes quite exhausted.

(இ - ள்.) (அந்தக்கன்னி) அம் மாதவிசின் - அழகிய மாந்தளிர் பரப்பிய ஆசனத்தினின்றும், ஏமாந்து - (நினைப்பின் செழுமையால் நளன் வந்ததாய் நினைத்து) சஞ்சோரவித்து, எழுந்திருக்கும் - எழுந்திருப்பாள்; விழுந்திருக்கும் - (அத்தோற்றம் பொய்யானதால்) விழுந்துகிடப்பாள்; மீள - மறுபடியும், தன் உடம்பு (உடலை), செழு தாள் தூணோடு சேர்க்கும் - செழுமையான முத்துப்பதித்த கம்பத்தோடு சேர்ப்பாள்; துணை ஏதும் இல்லாது - ஒருதுணையும் இல்லாமல், நைந்து நின்று - தளர்ந்திருந்து, நாணோடு - (தன் செய்கையில் தனக்கே யுண்டாகிய) வெட்கத்தினால், அழிவாள் - வருந்துவாள், எ - று. ஏ - அசை.

ஓடு—கருவிப்பொருளில் மயங்கிவந்தது. (௧௨0)

121. விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழ
லைத், தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கும்,
ஏங்குந் துயரோ டிருந்து.

121. She, who supports her wavy tresses that loosened themselves on the soft mattress by her side, like the black darkness which sheds itself on the bright moon-light, faints away from weariness, heaves a deep sigh with fiery breath, gasps, and is overcome with grief.

(இ - ள்.) (அவள் இன்னும்) விரிகின்ற - பரவியிருக்கின்ற, மெல் அமளி - மெல்லிய படுக்கையில், வெள் நிலவின் மீது - வெண்ணிலாவின்மேல், சொரிகின்ற கார் இருள்போல் - பொழிகின்ற கரிய இருளைப்போல, சோரும் - அவிழ்ந்து விழுகின்ற, புரி குழலை - சுருளாயிருக்கின்ற கூந்தலை, தாங்கும் - சுமப்பாள்; தளரும் - தளர்வாள்; தழலே - நெருப்பாகவே, நெடிது உயிர்க்கும் - நீட்சியாக மூச்சு எறிவாள்; துயரோடு இருந்து - துன்பத்தோடிருந்து, ஏங்கும் - இரங்குவாள், எ - று. ஏ - அசை.

துயரோடு — இவ் ஓடு உருபு உடனிகழ்ச்சிப் பொருளைத் தராமல் விசேஷணப்பொருளைத் தரும், துயருள்ளவளாயிருந் தாளென்பது கருத்து.

நெடிது உயிர்க்கும் — நெடிது - நெடுமையென்னும் பண்படியிற் பிறந்தபெயர், இங்கு வினையை விசேடித்தமையால் வினையுரிச்சொல்; இதைக் குறிப்புமுற்று எச்சமாயிற்று என்னு முரைக்கும்; அப்போதும் வினையுரியேயாம். இவ்வாறே சில செயவென்னெச்ச முதலியவையும் வினையை விசேடித்து வரின் வினையுரியேயாம், சொல்வகையிலே அவ்வவ் விதத்தைக்கொள்க. (௧௨௧)

122. உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி,
விடிய மிடுக்கின்மை யாலோ—கொடியன்மேல்,
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னரு
ளோ, வேகாத தென்னோ விரா.

122. "Is it because the night has exhausted all its strength on me that it has not any strength remaining to dawn? Or has it fixed its affections on the cruel king (Nala)? Or is it the king's pleasure (that it should be so)? Why does not the night pass away?"

(இ - ள்.) உடைய மிடுக்கு எல்லாம் - தான் கொண்டிருந்த பலமெல்லாம், என்மேலே—, ஓச்சி - செலுத்தி, விடிய - விடிவதற்கு, மிடுக்கு இன்மையாலோ - பலம் இல்லாமையாலேயோ, கொடியன்மேல் - கொடியவனாகிய நளன்மேலே, மா காதல் வைத்ததோ - பெருங்காதலை வைத்ததனாலோ, மன்னவர்தம் - அந்த நளமகாராஜருடைய, இன் அருளோ - இனிமையான கிருபையினாலோ, என்னோ - எக்காரணத்தினாலோ, இரா—, வேகாதது - வெந்து போகாமலிருப்பது (விடியாமலிருப்பது) எ-று.

என் உடம்பின் வெப்பத்தால் வேகாத தெனினுமமையும். காதல் கொண்டவர் வேண்டியவனை யிழிவாகவும் உயர்வாகவுஞ் சொல்வது இயல்பு. (௧௨௨)

123. மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றயங்கும் வறிதே யுலாவும்—வயங்கிழைபோய்ச்

சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்கண்
நீருங் கடைசோர நின்று.

123. Her mind becomes clouded, and then clears again; her heart trembles through fear till excitement brings on vexation; and she paces up and down abstractedly; with her glittering jewels all gone, she dozes through exhaustion, while tears pour through the sleepless corners of her long black eyes.

(இ - ள்.) (அவள்) மயங்கும் - மயக்கமடைவாள்; தெளியும் - தெளிவு பெறுவாள்; மனம் நடுங்கும் - மனது சஞ்சலிக்கப் பெற்றிருப்பாள்; வெய்து உற்று - தாபம் பொருந்தி, உயங்கும் - வருந்துவாள்; வதிதே - சயனம், உலாவும் - திரிவாள்; வயங்கு - விளங்குகின்ற, இழை போய் - ஆபரணம் விழ, சோரும் - தளர்வாள்; துயிலா - தூங்காத, கரு நெடும் கண் கடை - கரிய நெடுமையான கண்களினுடைய நுனியில், நீர் - கண்ணீர், சோர நின்று - பெருகும்படியிருந்து, துயிலும் - தூங்குவாள்போல் இருப்பாள், என்று; உம்மை அசை.

போய் என்பது செய்தெனெச்சத்தின் திரிபு. வெய்து - வெம்மை - பகுதி, து - பகுதிப்பொருள் விகுதி, மை கெட்டு முன்னின்ற மகரமெய் யகரமாகத் திரிந்தது. வெம்மையுள்ள நோய் என்று பொருள் கொண்டால், து - உடைமைப்பொருளில் வந்த விகுதியென் அறிக. (கஉ௩)

124. விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்
டுக், கழுதும் வழிதேடுங் கங்குல் - பொழுதி
டையே, நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி
வீழ்வார்தம், ஆருயிர்க்கு முண்டோ வரண்.

124. During the night, whose increasing darkness has became (as it were) so solid and condensed that even Devils lose their way in it, is their any protection to the last-fallen beings, whose eyes stream with tears, and whose hearts melt within them?

(இ - ள்.) விழுது படத் - விழுது உண்டாகும்படி, திணிந்து அடைபட்டு, வீங்கு இருள்வாய்ப் படு - வளர்ந்த இருட்டினிடத்தில் திண்ணப்பட்டு, கழுதும் - பிசாசும், வழி தேடும் - வழியைத்

தேடும்படியான, கங்குல்பொழுதிடையே - இராக்காலத்தில், நீர் உயிர்க்கும் கண்ணோடு - நீர்சொரியுங் கண்களோடு நின்று, நெஞ்சு உருகி வீழ்வார்தம் - மனங்கரைந்து நிலைபெறமாட்டாத காமுகருடைய, ஆர் உயிருக்கும் - நிறைந்த உயிர்க்கும், அரண் உண்டோ - காப்பு இருக்கின்றதோ [இல்லை], எ-று. தம் - சாரியை.

ஆருயிர் - அருமையான உயிர் எனினுமாம். (௧௨௪)

125. பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்
பக், காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வா
சம், அலர்ந்ததேங் கோதையா ளாழ்துயர்த்
தோடு, புலர்ந்ததே யற்றைப் பொழுது.

125. When the hands of the Brahmins were clasped together (in morning worship), and the water-lily had closed its petals, when the inhabitants of the earth awoke from their sleep, and the lotus flower opened its eyes, the day dawned; and with the night, departed the deep sorrow of the maiden who was adorned with fragrant honeyed garlands.

(இ - ள்.) பூசுரர்தம் - பிராமணருடைய, கைம்மலரும் - கைகளாகிய மலரும், பூ குமுதமும் - அழகிய ஆம்பல்களும், முகிழ்ப்ப - குவிய, காசினியும் - பூமியிலுள்ளோரும், தாமரையும் - கமலங்களும், கண் விழிப்ப - கண்திறக்க [மலர], வாசம் - பரிமளம், அலர்ந்த - பரவின, தேம் கோதையாள் - வண்டுமொய்த்த கூந்தலையுடைய தமயந்தியின், ஆழ் துயர்த்தோடு - ஆழ்ந்த துன்பத்தோடு, அற்றைப்பொழுது - அன்றைக்காலம், [அவ்விரவு], புலர்ந்தது - நீங்கிற்று, எ-று. ஏ - அசை.

துயரோடு—ஒடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளைத் தராமல் விசேஷணப்பொருளைத் தரும்; துயருள்ளவளா யிருந்தாளென்பது கருத்து.

பொழுது விடிந்தது, தமயந்தி துயரமும் நீங்கிற்று என்பது கருத்து. பிராமணர் கைகூப்பிச் சூரியனைத்தொழுது அநுட்டானஞ் செய்வாராகலின் பூசுரர் கைம்மலரும் முகிழ்ப்ப என்றார். குமுதமும் முகிழ்ப்ப என்னுமிடத்து மகரம் விரித்தல் விகாரம். ஒப்புமைக்கூட்டவணியும் புணர்நிலையணியுங் கலப்பு. (௧௨௫)

126. வில்லி கணையிழப்பவெண் மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான் — வல்லி
மணமாலை வேட்டிருந்த தோள்வா ளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

126. When the God of Love had laid aside his flower-tipped shafts, when the beauty of the pale moon had begun to wane, when the veil of primeval darkness was rent (by the sun's rays,) the golden-rayed sun rose in the east, before the broad-shouldered and sword-girt sovereigns, who anxiously desired the marriage garland of the creeper-like maiden.

(இ - ள்.) வல்லி - கொடிபோன்ற தமயந்தியினது, மணமாலை - கலியாணமாலையை, வேட்டிருந்த - விரும்பியிருக்கின்ற, தோள் - தோள்களையுடைய, வாள் அரசர் முன்னே - வாளாயுதந் தரித்த ராஜாக்களுக்குமுன்னே, செங் கதிரோன் - செம்மையான கிரணங்களையுடைய சூரியன், குணவாயில் - கீழ்த்திசையில், குன்று - மலையில், வில்லி - கரும்புவில் லேந்திய காமன், கணை இழப்ப - அம்புகளை இழக்கவும், வெண் மதியம் - வெள்ளையான சந்திரன், சீர் இழப்ப - சிறப்பை இழக்கவும், தொல்லை இருள் - பழமையாகிய அந்தகாரம், கிழிய - நீங்கிப் போகவும், தோன்றினான் - உதயமானான், எ-று.

மதியம்—அம் - சாரியை. சூரியன் உதையமானபின் காமநுகர்ச்சித் துன்பஞ் சிறிது தணியுமாதலின் 'வில்லிகணையிழப்ப' என்றார். நளன் தோன்றியதுபோல் என்பது இங்குக் குறிப்பு. ஒப்பணி. (கஉ௬)

127. முரசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார் — விரை
மாலை துவள முடிதயங்க வால்வளையும் [ செறிந்த
காலை முரசுங் கலந்து.

127. When the seven days were over which were appointed for the beating of the drums, victorious kings whose shoulders were like mountains, came with sweet-smelling garlands flowing over their bodies, and crowns glittering on their heads, amid the mingled notes of the twisted conchs and the morning drums.

129. தித்திலத்திற் பொற்றோடு நீலமணித் தோடாகி
மைத்தடங்கண் செல்லல் வயவேந்தர் — சித்தம்
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூ ணணங்கு.

129. The dark shade of her jetty eyes changing into, the hue of a sapphire, the pearl set in her golden ear-ring and the affections of the kings accompanying her as beetles, the maiden who resembled a nymph adorned with jewels set with rare-colored gems, came under the Pandal.

(இ - ள்.) தித்திலத்தின் - முத்துக்களையுடைய, பொன் தோடு - பொன்னாலாய காதணிகள், நீலமணித் தோடு ஆக - நீலக்கல்பதித்த காதணியாகும்படி, மை தடம் கண் செல்லல் - மைதீட்டிய விசாலமான கண்கள் செல்லுகையில், வயவேந்தர் சித்தம் - வலிபொருந்திய அரசர்களுடைய மனம், வண்டின் - வண்டைப்போல், மருங்கே வர - பக்கத்தில் வர, அருங்கேழ் மணிப்பூண் - அருமையான நிறமுள்ள ரத்தினபூஷணங்களைத்தரித்த, அணங்கு - தெய்வப்பெண்ணையொத்த தமயந்தி, பந்தர் கீழ் - பந்தலிலே, வந்தாள் —, எ - று.

(பந்தல் - பந்தர் என்பது போலியாய் வந்தது, கண்காந்தி பட்டு முத்துக்கட்டிய பொன்னாபரணம் குவளைபோற் றோன்றியதெனவும், அதனைக்குறித்து மணமாகிய வண்டுகள் ஓடி வந்தனவெனவும், குறிப்பான கருத்து. யாவர் மனமும் அவள்முகத் தின்மேல் விருந்தன என்றபடி. (கஉகூ)

130. பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போல்
கோதை மடமானைக் கொண்டணைந்த — மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மே னிறைந்து.

130. Like the doe-s which surround the simple and elegant peacock, were the damsels who surround the garland bedecked maiden (*ignorant deer*,) while the eyes of the kings increasing in number, one above another, sought to catch a glimpse of her, by peeping through the openings left between the waists (of the maidens.)

(இ - ள்.) பேதை மடமயிலை - பேதையான மடப்பம் பொருந்திய மயிலை, சூழும் பிணைமான் போல் - சூழ்ந்திருக்கும்

இன்று - இருண்மீன்களைப்போல், கோதை மடமானை - மாலை யணிந்த மடப்பமுள்ள மானையொத்த தமயந்தியை, கொண்டு அணைந்த மாதர் - இட்டுக்கொண்டுவந்த பெண்களுடைய, மருங்கின் வெளிவழியே - இடையினிடத்தில் காணப்படும் வெளியின் வழியாக; மன்னவர் கண் புக்கு - அரசர் கண்கள் புகுந்து, மேல் மேல் நிறைந்து - மேலேமேலே நிரம்பி, நெருங்கின - நெருக்கமாயின, எ - று, ஏ - அசை.

அவளைப் பெண்கள் பலர் சூழ்ந்து இருப்பதனால் பார்க்கப் பெறாமல், அப்பெண்களுடைய சிறந்த இடைக்கு இடையிலுள்ள சந்துகளினால் பார்த்தார்கள் என்பது கருத்து. (கங௦)

131. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்-மின்
னிறத்துச், செய்யதாள் வெள்ளைச் சிறையன்
னஞ் செங்கமலப், பொய்கைவாய்ப் போவதே
போன்று.

131. Like the bright-hued, red-footed, white-feathered swan proceeding to the tank where the red lotus grows, (Damayanti), who was as beautiful as a golden idol, proceeded to the marriage pandal where the eyes of the kings blosoomed like the lotus flowers.

(இ - ள்.) மின் நிறத்து - மின்னலைப்போன்ற நிறத்தையுடைய, செய்ய தாள் - சிவந்த கால்களையும், வெள்ளை சிறை அன்னம் - வெண்மையான சிறகுகளையு முடைய, அன்னப் பக்ஷி, செம்கமலம் பொய்கைவாய் - செந்தாமரைத் தடாகத்தில், போவது போன்று - போவதையொத்து, பொன்னின் மடப்பாவை - பொன்னாற்செய்த இளமைபொருந்திய பதுமை போன்ற தமயந்தி, மன்னர் விழி தாமரை பூத்த - அரசர்களுடைய கண்களாகிய தாமரைமலர்கள் பூத்திருந்த, மண்டபத்து - மண்டபத்தில், போய் புக்காள் - போய்ப் புகுந்தாள், எ - று. ஏகாரங்கள் - அசை.

மன்னர் விழித்தாமரை பூத்த என்பதற்கேற்ப மண்டபத்தில் என்பதை மண்டபமாகிய தடாகத்தில் எனக் கொள்ள வேண்டும். இது ஏகதேச வுருவகம். (கங௧)

132. வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடும்,
நெடுங்கட் கடைபார்த்து நின்றான்—இடங்
கண்டு, பூவாளி வேந்தன்றன் பொன்னாவம் பின்
னேயிட், டேவாளி நாணின்மே லிட்டு.

132. The lord of the flowered arrows, hanging his golden quiver at his back, and fastening a row of arrows on his bow-string, chose a convenient spot, and stood there watching the corners of the eyes which glanced at the long tresses of the damsel, whose beautiful breasts were adorned with pearls.

(இ - ள்.) பூவாளி வேந்தன் - மலரம்புகளையுடைய மன்மதன், இடம் கண்டு - இடம்பார்த்து, தன் பொன் ஆவம் - தன்னுடைய அழகிய அம்புக்கூட்டை, பின் இட்டு - பின்னே கட்டி, ஏவாளி - அம்புகளின் வரிசையை, நாணின்மேல் இட்டு - வில்லின் கயிற்றின்மேல் சேர்த்து, வடம் கொள் வன முலையாள் - முத்து மாலைகளையணிந்த அழகுள்ள தனங்களையுடைய தமயந்தியினது, வார் குழைமேல் - நீண்ட காதுகளின்மேல், ஓடு - ஓடியிருக்கிற, நெடும் கண் கடை - நெடுமையான கண்களின் நுனிகளை, பார்த்து நின்றான் - எதிர்பார்த்திருந்தான், எ - று. ஏ - அசை.

குழல் என்கிற பாடம் பொருந்தாதென அறிக. அவள் கடைக்கண்பட்ட இடத்தில் காமன் அதிகமாய்ப் பாதிக்கும்படி யிருந்தான் என்பது கருத்து. (கங௨)

133. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டித்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. [னாள்.

133. A goddess-like maiden of good disposition knowing all the chariot warrior kings, stood forward and pointed out to the matchless daughter of the garland-bedecked king (Bhima) each sovereign, describing at the same time the several characteristics of their respective families, titles, and fertile countries.

(இ - ள்.) இயல் அணங்கு - சிற்குணமுள்ள தெய்வப்பெண் போன்ற ஒருத்தி, தேர் வேந்தர் தம்மை - தேர் ஏறிச்செல்லுகின்ற

செய்யவல்ல) அரசர்களை, தெரிந்து - அறிந்து, மன்னர் குலமும் - அந்த ராஜாக்களுடைய வமிசங்களும், பெயரும் - நாமதேயமும், வளநாடும் - வளப்பமுடைய நாடும், இன்ன பரிசு என்று - இப்படிப்பட்ட தன்மையுள்ளன என்று, தார் வேந்தன் பெற்ற - வெற்றிமாலையையணிந்த வீமராஜன் பெற்ற, தனி கொடிக்கு - ஒப்பற்ற கொடிபோன்ற தமயந்திக்கு, முன் நின்று - எதிரில்நின்று, காட்டினாள் - காண்பித்தாள், எ - று.

காட்டு என்பது காண் என்னுந் தன்வினைமேற் பிறந்த பிறவினைப்பகுதி.

இயலணங்கு என்பதற்குச் சரசுவதியெனவும் பொருள் கொள்ளலாம். அது "காவலரைத் தன்சேடிகாட்ட" என்பதோடு ஒவ்வாமையின் பொருந்தாது. இயலணங்கு - இயற்றமிழுக்குரிய தெய்வப்பெண். (கஙங)

134. பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகி
ன், சென்னி தடவுந் திருநாடன் — பொன்னிறஞ்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றுன்
னார், கணங்கவிழ்ந்த வேலனிவன் காண்.

*The king here introduced is the king of the Chola country.*

134. "O maiden, whose jewelled breast is resplendent with golden-hued spots! In this armed king before you, who destroys his enemies in the thick of the battle, you see the possessor of the sacred country, where the wavelets formed by the waters of the Cauvery, cast their spray to the tops of the Arecanut palm trees.

(இ - ள்.) பொன்னின் - பொன்போல், சுணங்கு - தேமல், அவிழ்ந்த - விரிந்திருக்கப்பெற்ற, பூண் முலையாய் - ஆபரணந் தரித்த முலைகளையுடையவளே! சூழ் அமரில் - சூழ்ந்த யுத்தத்தில், துன்னார் கணம் கவிழ்ந்த - பகைவர் கூட்டம் வீழ்வதற்கு ஏதுவான, வேலன் இவன் - ஆயுதமுடைய இவன், பொன்னி அமுதம் - காவேரி யாற்றினுடைய தெண்ணீரின், புது கொழுந்து - புதிய அலைத்திவலைகள், பூ கமுகின்

நற்புகழ், மாதே வன்கண்டாய் மரனத் தனிக்
கொடியின், மீதே சிலையுயர்த்த வேந்து.

*The king here referre to is Saren*

136 O maiden of inmortal fame! this king whom you see before you, and whose matchless banner is adorned with the insignia of a bow is the sovereign of the country of Coorg, where the rivers flow from the mountains like the white flowing robes on the soft breasts of the warlike goddess of earth.

(இ - ள.) நின்ற புகழ் மாதே - நிலைபெற்ற புகழ்மையுடைய பெண்ணே! இவன் - வென்றி லை மடைந்தை - வெற்றிபொருந்திய பூமிதேவியினுடைய, மெ முலைமேல் - மெல்லியமுலை என்று சொல்லத்தக்க சொல்வி லையின்மேல், வெள் துகில் போல் - வெண்மையான உத்தயம்போல், குன்று அருவி பாயும் - மலையருவி பாயப்பெற்ற, குடநாடன் - குடநாட்டின் அதிபதியாகிய, மரன தனி கொடியின் மீதே - பெருமையுள்ள தனித்த கொடிமரத்தின்மேல, சிலை உயர்த்த - வில்லை ஏற்றிவைத்த, வேந்து - அரசன், எ-று. கண்டாய் அசை.

இவன் சேரராஜ னென்பதாம். (கங்கு)

137. ஆழிவடி யம்பலம்ப நின்றானும் மன்னொருகால்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும் - நீள்விசும்பில்
நன்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
வென்றானுங் கண்டாயிச் சேய்.

137. The king you see here is he who stood and washed his well-formed arrows in the deep, who at another time presided at the assembly of musicians, who acted as an ambassador to the Gods who live in the blue mountains and who came off victorious at the great war of Mahabaratham.

(இ - ள்.) ஆழி வடி அம்பு - கடலில் வடி அம்பை, அலம்ப நின்றானும் - கழுவும்படி நின்றவனும், ஒரு கால் - ஒருகாலத்தில், ஏழ் இசை நூல் சங்கத்து வகைச் சுரங்களை விளக்கும் சங்கீத சாஸ்திர சபையில், னும் - தலைவனாய் இருந்தவனும், நீள் விசும்பில் - பெரிய ல் இருக்கின்ற, நல் தேவர் - நல்ல தேவதைக தூது

138. If you enquire, you will recognize in the monarch you see before you, the king of the Curu country abounding with வள்ளி creepers, where the mother bird rocks to sleep its young ones, which, mistaking the bud of the water-lily for the green head of a serpent, becomes afraid and troubled during the whole night.

(இ - ள்.) தெரியில் - யோசித்தால், இவன்—, செங்கழுநீர் மொட்டை - செங்கழுநீரின் முகிழை, அரவின் பச் தலை என்று - பாம்பின் பசுமையான தலையென்றுநினைத்து, அஞ்சி - பயந்து, பிள்ளை குருகு - சிறவைக் குஞ்சு, இரங்க - துன்பப்பட, பேடை புள் - பெண் பக்ஷியானது, இரவெல்லாம்—, தாலாட்டும் - (அதற்கு அவ்வச்சந்திரும்படி) தாலாட்டுகின்ற, வள்ளி - வள்ளியென்னுங் கொடிகளுள்ள, குருநாட்டு மன் - குருநாட்டாருடைய அரசன், கண்டாய்—, எ-று.

பிள்ளைக்குருகு - அன்றிற்குஞ்சு அல்லது நாரைக்குஞ்சு என்னவுமாம். (கஙஅ)

139. தேமருதார்க் காளை யிவன்கண்டாய் செம்மலர்
மேல் காமருசங் கீன்ற கதிர்முத்தைத்—தாமரை
தன் பத்திரத்தா லேற்கும் புடைகொள் பழனஞ்
சூழ் மத்திரத்தார் கோமான் மகன்.

139. This youth who is decked with sweet smelling garlands is the son of the king of the inhabitants of Muttra which is surrounded by meadows and fields, in which the lotus plant support on its leaf the glittering pearl which the beautiful couch drops on its flower.

(இ - ள்.) தே மரு தார் காளை - வாசனைபொருந்திய மாலைதரித்த யவ்வன புருடனான, இவன்—, செம் மலர்மேல் - சிவந்த பூவின்மேல், காமரு - விரும்பும்படியான, சங்கு—, ஈன்ற - பெற்ற, கதிர் முத்தை - பிரகாசமுள்ள முத்தை, தாமரை - தாமரைக் கொடியானது, தன் பத்திரத்தால் - தனது இலையினால், ஏற்கும் - தாங்கிக்கொள்கின்ற, புடைகொள் - பள்ளங்களையுடைய, பழனம் சூழ் - வயல் சூழ்ந்த, மத்திரத்தார் - மத்திர தேசத்தாருடைய, கோமான் - அரசனுக்கு, மகன் - குமாரன், கண்டாய்—, எ-று. (கஙக)

வண்டுகளே வண்டுகள், எடுத்த பண்ணில் - தொடங்கின பாட்டில், செவி வைத்து - காதைப் புகுத்தி, அடைக்குவளை - அந்தப் பசுமையான குவளைகளை, உண்ணாது - உண்ணாமல், அருகடா - அருமையான எருமைக் கடாக்கள், நிற்கும் - நிற்கின்ற, அவந்தி நாடு - மாளவ நாட்டையும், ஆளும் - ஆளுகின்ற, இருகடா யானை - பெருமையான ஆண்யானை போன்றவன், எ-று.

எருமைக்கடாக்களும் சங்கீதரசம் அறிந்தவையானால் அந்நாட்டார் எவ்வளவு சங்கீதரசிகர் என்பது கருத்து. இவ்வகையாக நாட்டின் வளப்பமும் மேன்மையும் பலவகைக் குறிப்பால் வர்ணிக்கப்பட்டு வருவதை முன்னும் பின்னும் உய்த்துணர்க.

142. விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில்—
மடற்கமுகின், செந்தோடு பீறித்தேன் செந்நெற்
பசுந்தோட்டில், வந்தோடு பாஞ்சாலர் மன்.

142. This youth who is armed with weapons bright and poisonous, is the king of the country of Panjab, where the fish-hook which is cast into the air (so swiftly) as to cause the bait to drop out of it, tearing the tender bark of the Arecanut Palm causes the honey to gush out and flow among the tender blades of beautiful paddy.

பாஞ்சாலம்=Punjab.

(இ-ள்.) விடம் கதிர் வேல் - விஷத்தையொத்த காந்தியுள்ள ஆயுதந்தரித்த, காளை - கட்டிளமை யுடையவனாகிய இவன் —, மீனின் - மச்சங்களினது, தொடக்கு - அசுத்தம், ஒழிய - நீங்கும்படி, போய் —, நிமிர்ந்த - மேலோங்கின, தூண்டில் - தூண்டிலானது, மடல் கமுகின் - மடலோடுகூடிய பாக்குமரத்தின், செம் தோடு பீறி - சிவந்த பூவிதழ்களை கிழிக்க, தேன் - (அவற்றின்) தேனானது, செந்நெல் பசு தோட்டில் - செம்மையான நெற்பயிர்களின் பசுமையான குருத்துகளிலே, வந்து ஓடு - வந்து பாயப்பெற்ற, பாஞ்சாலர் - பாஞ்சால நாட்டாருடைய, மன் - அதிபதி, கண்டாய் —, எ-று.

விடக்கதிர்வேல் — விடக்கு அதிர் வேல் எனப்பிரித்து ஊன் அசைந்துகொண்டிருக்கின்ற வேல் என்றும் பொருள் கொள்ளலாம். (௧௪௨)

watered country of Maghada, where the beautiful lotus flowers blossom with the glow of fire, and the bees fly about over them in swarms like curling smoke.

(இ - ள்.) எண் திசையில் - எட்டுத் திக்குகளிலும், போர் வேந்தர் - சண்டையில் வல்லவராகிய அரசர்கள், கண்டு அறியார் - பார்த்தறியாத, பொன் ஆவம் - பொன்னால் செய்த அம்பறாத்தூணியை, பின் உடைய - பின்புறத்தில் உடையவனாகிய, நேர் வேந்தன் - இரதநிபதியான, இச் சேய் - இந்த ராசகுமாரன், புண்டரிகம் - செந்தாமரைகள், தீ எரிவபோல - அக்கினி சொலிப்பதுபோல, விரிய - மலர, பூம் புகைபோல் - அழகிய புகைபோல, வண்டு — இரியும் - (அவற்றின்மேல்) ஓடிக்கொண்டிருக்கின்ற, இதிள் - நீர் - மிகுந்த நீர்நிறைந்த, மகதர் கோன் - மகத தேசத்தாருடைய அதிபதி, கண்டாய் —, எ - று.

இவன் புறங்காட்டாதவ னென்பது கருத்து. (௧௪௪)

145. கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோட்டிடறித் தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால் — வான்கடல்வந் தந்தோ வெனவெடுக்கு மங்கநா டுடையான் செந்தேன் மொழியாய்ச் சேய்.

145. O maiden, whose speech is as sweet as honey! This prince is the ruler of அங்கநாடு where the expansive sea with its wave-like hands comes with a loud mournful sound, and takes away the young one of the round conchs, which stumbles against the rock of creeping-coral, and falls into the honey-flowing estuary.

(இ-ள்.) செம் தேன் மொழியாய் - செவ்விய தேன்போன்ற சொல்லையுடையவளே, இச் சேய் —, கூன் சங்கின் பிள்ளை - வளைவுள்ள சங்கின் குட்டியானது, கொடி பவளம் கோடு இடறி - கொடியாகிய பவளத்தின் கொம்பில் தடுக்கி, தேன் கழியில் வீழ - தேனுலாகிய கழியிலே விழும்போது, திரை கரத்தால் - அலையாகிய கையினால், வான் கடல் - பெரிய சமுத்திரமானது, வந்து —, அந்தோ என - ஐயோ வென்றிரங்கி, எடுக்கும் - எடுக்கான்ற, அங்க நாடு - அங்கதேசத்தை, உடையான் - ஆள்கின்றவன், எ-று. (௧௪௫)

146. வெள்வாளைக் காளை மீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப் - புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
தண்டெரியற் றேர்வேந்தன் றான்.

146. The chariot-driving king who is adorned with cool garlands is the sovereign of the inhabitants of the pearly-watered Kalinga where the white male வாளை fish arouse the buffaloe herd (in the water,) and these rushing into the jungle of honey-flowing lotus plants, tread upon them, and drive away the birds and bees.

(இ-ள்.) தண் தெரியல் - குளிர்ச்சியான மாலையையணிந்த, தேர் வேந்தன் —, வெள் வாளை காளை மீன் - வெண்மையான வாளைகளென்கிற இவ்வண்ணமுள்ள மீன்கள், மேதி குலம் - எருமைக் கூட்டத்தை, எழுப்ப - (வாலால் அறைந்து) எழும்பியிருக்கச் செய்வதினாலே, (அவை) கள் வார்ந்த - தேன் ஒழுகுகின்ற, தாமரையின் காடு - தாமரை வனத்தை, உழக்கி - கலக்கி, புள்ளோடு - பறவைகளுடனே, வண்டு —, இரிய - ஓடும்படி, செல்லும் - போவதற்கு இடமாகிய, மணி நீர் - முத்தைப்போன்ற நீரையுடைய, கலிங்கர் கோன் - கலிங்க நாட்டாருடைய அதிபதி, எ - று. தான் - அசை.
மேதிக்குலம் எழுப்ப வாளைமீன் இப்படியாக எனவும் பொருள் கொள்ளலாம். "செய்வ தாதி அறுபொருட் பெயரும் எஞ்ச நிற்பது பெயரெச்சம்" என்றமையின் செல்லுமென்பது நீர் என்னும் இடப்பெயரைக் கொண்டது. (௧௪௬)

147. அங்கை வரிவளையா யாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்த் - தங்கை
யிடைச், சேல்குளிக்குங் கேகயர்கோ னொன்னார்
வாட்டற் றடவரைமேல், வேல்குளிக்க நின்றானிவ்
வேந்து.

147. O thou whose beautiful hands are adorned with a row of bangles! This king who buries his lance in the mountain-like shoulders of his powerful adversaries, is the sovereign of the inhabitants of கேகயநாடு, where the sel (fish) touching the red-eyed crocodile, which the

waves of the sea bring ashore, retreats into the waters of the Ganges.

(இ - ள்.) அம் கை வரி வளையாய் - அழகிய கையின்கண் வரிசையான வளையல்களை யுடையவளே, ஆழி திரை - கடலின் அலை, கொணர்ந்த - கொண்டுவந்து விட்ட, செம் கண் மகரத்தின் - சிவந்த கண்ணுள்ள மகரமீனை, [முதலையை,] தீண்டிப் போய் - பரிசித்துச் சென்று, சேல் - கெண்டைமீன்கள், கங்கையிடை - கங்கா நதியிலே, குளிக்கும் - அமிழ்கின்ற, கேகயர் கோன் - கேகயநாட்டாருடைய அரசன், தெவ் - சத்துருக்களுடைய, ஆடல் கை வரைமேல் - போர்வல்லமையுள்ள புசமாகிய மலையின்கண், வேல் - (தன்) ஆயுதம், குளிக்க - அமிழும்படி, நின்றான் - நின்றவனாகிய, இ வேந்து - இவ்வரசன், எ - று.

இவ்வேந்து - எழுவாய்; கோன் - பயனிலை. (கசஎ)

148. மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றில் — போநீள்
கழைக்கோ தையரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன்.

148. O maiden, whose tresses are like the clouds! This king is the sovereign of காந்தாரம் where the swans which walk on the vallei creeper, which grows in the deep large ponds, are like the female rope-dancers, who walk on a single rope, and who are able to play on long poles. (கசஅ)

காந்தாரம்—*Candahar.*

(இ - ள்.) மழை கோதை மானே - மேகம்போன்ற கூந்தலையுடைய பெண்ணே, இம் மன் - இவ்வரசன், மா நீர் நெடு கயத்து - மிகுதியான நீருள்ள பெரிய சசத்திலே, வள்ளை கொடிமீது - வள்ளையென்னுங் கொடியின்மேல், ஏகும் - செல்லுகின்ற, அன்னம் - அன்னங்கள், தனி கயற்றில் - தனிமையான கயிற்றின்மேல், போம் - நடந்து போகின்ற, நீள் கழை கோதையர் - நீண்ட மூங்கிற்கழை கட்டியாடுந் தன்மையுள்ள தொம்பச்சிகளை, ஏய்க்கும் - ஒத்திருக்கும்படியான, காந்தார நாடன் - காந்தாரதேசத்தின் அரசன், எ - று. தான் - அசை. ()

நளன் உருவத்தைக்கொண்டு சென்று இருந்தார் — (சபையில்) போயிருந்தார்கள்; பூ வரைந்த - மலர்சூடப்பெற்ற, மாசு இலா - குற்றமில்லாத, பூ குழலாள் - அழகான கூந்தலையுடைய தமயந்தி, அவரை கண்டு நின்று - அத்தேவர்களைப்பார்த்து, உளம் - மனமானது, ஊசல் ஆடு - ஊசலாடுவதுபோலச் சஞ்சலமாயிருக்குந் தன்மையை, உற்றாள் - பொருந்தினாள், ஏ - று, மற்று - அசை.

தேவர் — முன்கண்டு இந்திரன், அக்கினி, இயமன், வருணன் என்பவர்கள். (கரு௦)

151. பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்
கால், நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர் — நீ
ணிலத்து, மற்றெவர் வாரா தார் வானவரும் வந்
திருந்தார், பொற்றேர் நளனுருவாய்ப் போந்து.

151. when they saw the maiden who was adorned with gold bracelts, and who lent additional beauty to her jewels, the strong minded kings lost all sense of modesty. Is it possible that any of the kings of the great earth should have been absent when even the heavenly beings came in the form of Nala, the possessor of the golden chariot?

(இ - ள்.) பூணுக்கு - ஆபரணத்திற்கு, அழகு அளிக்கும் - அழகைத்தருகின்ற, பொற்றொடியை - தமயந்தியை, கண்டக்கால் - பார்த்தால், நாண் உக்கு - வெட்கங் கெட்டு, நெஞ்சுடைய நல் வேந்தர் - மனவுறுதியுள்ள நல்ல அரசர், நீணிலத்து - பெரியபூமியில், வாராதார் - வராதவர்; மற்று எவர் - மற்றும் யார்; வானவரும் - தேவர்களும், பொன் தேர் நளன் உருவாய் - பொன்னாற்செய்த தேரையுடைய நளமகாராஜன் ரூபமாக, போந்து - ஆகி, வந்திருந்தார் —, எ - று.

வாராத அரசர் யாரெனக் கூட்டிக்[illegible]க. நெஞ்சுக்கு நாண் உடைய - மனதில் வெட்கங்கெட [illegible]ரைக்கலாம். "ஏ இருவழியும்" என்றமையின் ஏவர் என[illegible]து. போந்து என்பது இங்கு ஆசையுமாகலாம். (கருக)

152. மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மை
சேர், கன்னியாளுகிற் கடிமாலை - அன்னந்தான்,

சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதி
யின் மன்னவனைத் தன்மனத்தே வைத்து.

152. With her mind occupied with thoughts of the God of Fate, (Damayanti) said. "If I am a virtuous maiden in the true family of Bhima who is adorned with shining garlands, grant that I may cast this fragrant garland on him, of whom the swan spoke.

(இ - ள்.) [அத்தமயந்தி] சூழ் விதியின் - நேர்ந்த விதிவசத்தால், மன்னவனை தன் மனத்தே வைத்து - நளமகாராஜனை தன் இருதயத்தில் இருத்தி [நினைத்து], மின்னும் தார் வீமன் தன் - பிரகாசிக்கிற மாலையை யணிந்த வீமராஜனுடைய, மெய் மரபில் - சத்தியமுள்ள குலத்தில், யான் —, செம்மை சேர் - நற்குணஞ்சேர்ந்த, கன்னி ஆகில் - (பிறந்த) கன்னியா யிருப்பேனாகில், அன்னம்தான் சொன்னவனை - அன்னப்பக்ஷி சொன்ன அரசனுக்கு, கடி மாலை சூட்ட அருள் என்றாள் - மணமாலை சூட்டும்படி அருளவேண்டும் என்று (தெய்வத்தைப்) பிரார்த்தித்தாள், எ - று.

விதியாவன நன்மை தீமைகள். அவற்றின் மன்னவன் - அப் பயனை யளிக்கின்ற கடவுளை எனப்பொருள் கொள்வதும் பொருந்தும். ஐயுருபு கோடற்பொருளில் வந்தது. (கருஉ)

153. கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்த
லால், வண்ண மலர்மாலை வாடுதலால் - எண்ணி,
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்னாள்
அறிந்தா ணளன்றன்னை யாங்கு.

(153.) The maiden who resembled Lukshmi with the beautiful fore-head, who resides in the fragrant lotus flower, discovered Nala by noticing his winking eyes, his earth-touching feet and his fading garland of beautiful flowers.

(இ - ள்.) நறு தாமரை விரும்பும் - சுகந்தமான, தாமரை மலரை விரும்புகின்ற, நன்னுதலே அன்னாள் - இலக்குமியை யொத்த தமயந்தியானவள், ஆங்கு - அவ்விடத்தில், கண் இமைத்தலால் - கண்கள் இமைகொட்டுதலாலும், அடிகள் காசினியில் தோய்தலால் - பாதங்கள் பூமியில் படிந்திருத்தலாலும்,

கின்னின் முலர் மாலை வாமுதலால் - அழகிய பூமாலையை வதிங்குவதி ஞலும்; எண்ணி - யோசித்து, நளன் தன்னை அறிந்தாள் - நளனைத் தெரிந்துகொண்டாள், என்றவாறு.

தேவதைகளுக்குக் கண்ணிமைத்தல் முதலிய இலக்கணங்கள் இல்லாமையால் அவர்களில் இவனைப்பிரித்து அறிந்தாள். (ï)

154. விண்ணரசரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர் (இ)
வன்மாலை தன்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

154. When the maiden who resembled Lukshmi, cast the golden garland on the powerful king (Nala,) all the heavenly beings became ashamed and humbled in spirit, while the wide world rejoiced, and the minds of the earthly sovereigns became clouded with jealousy.

(இ - ள்.) விண் அரசர் எல்லாரும் - சொர்க்கலோகத்துக்கு அரசராகிய இந்திரன்முதலான தேவர்யாவரும், வெள்கி - வெட்கப்பட்டு, மனம் சுளிக்க - மனஞ் சுருங்கிநிற்க; கண் அகல் ஞாலம் - இடம் விசாலமாகிய பூமியிலுள்ளோர், களி கூர - சந்தோஷ மிகுந்திருக்க, மண் அரசர்—, வன் மாலை - வலிய மயக்கத்தினை, தம் மனத்தே சூட - தம் இதயங்களிலே பொருந்த, வய வேந்தை - பலமுள்ள நளமகாராஜனுக்கு, பொன் மாலை சூட்டினாள் - பொன் மலரானாகிய மாலையை சாத்தினாள், பொன் - இலக்குமிக்குச் சமானமான தமயந்தி, எ - று.

பிற அரசரும் ஓரவயவத்தில் ஓர் மாலைசூட்டினார் என்று கவி புரிகாசுசாதுரியமாக் குறிப்பித்தார். (௧௫௪)

155. திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகமே
பேரய, வெண்டா மரையாய் வெளுத்தவே—
ஒண்டாரைக், கோமாலை வேலான் குலமாலை
வேற்கண்ணாள், பூமாலை பெற்றிருந்த போது.

155. When the king who possessed a lance as bright and sharp as a diamond weapon, received the flowered garland at the hands of the maiden whose eyes were as lances, and who was as the garland of the family (of Bhima), the faces of the broad-shouldered and powerful

kings, which were like the red lotus, became as pale as the white lotus.

(இ - ள்.) ஒள் தாரை - பிரகாசமான கூர்மையை யுடைய, கோ - வச்சிராயுதத்தினது, மாலை - இயல்புள்ள, வேலான் - ஆயுதமுடைய நளன், குல மாலை - குலத்திற்குப் பூமாலை போன்ற, வேல் கண்ணாள் - வேல்போலுங் கண்களையுடைய தமயந்தியினது, பூ மாலைபெற்று இருந்தபோது - பூக்களினாலாகிய மாலையை யடைந்திருந்த வளவில், திண் தோள் வய வேந்தர் - திடமான புஜபலமுள்ள அரசர்களினுடைய, செம் தாமரை முகம்போய் - சிவந்த தாமரைமலரை யொத்திருந்த முகங்கள் மாறி, வெண் தாமரை ஆய் - வெண்மையான தாமரைபோலாகி, வெளுத்த - வெள்ளையாயின, எ - று. ஏ-அசை.

தமயந்தி நளனை வரிக்கவே மற்ற அரசர்முகம் ஒளியிழந்தது என்பது கருத்து. மாலையென்பது மாறிமாறி வந்ததனால் சொற்பின் வருநிலையணி. (கருரு)

156. மல்லன் மறுகின் மடநா குடனாகச், செல்லு
மழவிடைபோற் செம்மாந்து — மெல்லியலாள்,
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்
டான், நன்மாலை வேலா னளன்.

156. Nala who was armed with a well-made lance, departed with his shoulders adorned with the golden garland of the soft maiden and hailed with joy like the young bull which parades the broad street in company with beautiful cows.

(இ - ள்.) நல் மாலை - நல்ல இயல்புடைய, வேலான் - வேலைத் தரித்தவனாகிய, நளன் —, மல்லல் - பெருமையுள்ள, மறுகில் - வீதியில், மடம் நாகு - மடப்பமுள்ள பசுவானது, உடன் ஆக - கூடச் செல்வதாயிருக்க, செல்லும் - நடக்கின்ற, மழ விடைபோல் - இளமையான விருஷபம்போல், செம்மாந்து - களிப்படைந்து, மெல் இயலாள் - மென்மையான சுபாவமுள்ள தமயந்தியினது, பொன் மாலை பெற்ற - பொன் மலர்மாலை யணிந்த, தோளோடு - புஜத்தோடு, புறப்பட்டான் —, எ - று. உம் - அசை.

ஓடு உருபு இங்கு உபலக்ஷணம், அதாவது ஓர் விசேஷக்குறி யான பொருளில் வந்தது, ஆகவே அப்படிப்பட்ட தேர்ள் ஒரு விசேஷமாய்க் காண என்பதாம். சாகு—இங்குத் தகுதியால் பசுவுக்குக் கொள்ளப்பட்டது.

செம்மாந்து—செம்மா - பகுதி. இதன் செயவெனெச்சம் செம்மாப்ப; செயினெச்சம் செம்மாப்பின், செம்மாந்தால். இப்படியே ஏமாந்து, இறுமாந்து முதலியவைகளுக்குங் கொள்க. இப்பகுதிகள் பிறவினையாம்போது தவ்விகுதிபெற்று ஏமாத்த, இறுமாத்த, செம்மாத்த என்றாய், ஏமாத்தினன், இறுமாத்தினன், செம்மாத்தினன் என்றிப்படி புடைபெயரும் என அறிக. (௧௫௬)

157. வேலை பெருவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்
கும், இருங்கலியைக் கண்டா ரெதிர்.

157. The divinities, who were disappointed in not obtaining the garland from Bhima's pure daughter, who was like the ambrosia which could not be yielded by the sea, as they retired, saw before them the great Kali, who leads into wicked ways the inhabitants of this earth which is washed by the clear waters of the sea.

(இ - ள்.) வேலை பெரு அமுதம் - கடல் ஈனுத அமுதமென் னும்படியான், வீமன் திருமடந்தை - வீமன்மகளுடைய, மாலை பெறுது - மணமாலையைப் பெறாமல், அகலும் - நீங்கிப் போகின்ற, வானாடர் - தேவதைகள், வேலை பொரும் - கரையை மோதுகின்ற, கலி நீர் ஞாலத்தை - ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த பூமியிலுள்ளோரை, புல் நெறியில் ஆக்கும் - இழிவானவழியில் செலுத்துகின்ற, இரு கலியை - பெருமையான கலிபுருஷனை, எதிர் - எதிரிலே, கண்டார் —, எ - று.

கலிக்குப் பெருமையாவது இழிவில், எதிர்மறை யிலக்கணை யால் தாழ்மையுமாம். (௧௫௭)

158. ஈங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வின வத், தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்,

விருப்பான வீமன் றிருமடந்தை யோடும்,
இருப்பான் வருகின்றேன் யான்.

158. On the king of the Celestials asking him the cause of his coming there, Kali, the great propagator of evil, answered: "I have come to unite myself (in marriage) to the daughter of Bhima whom you have all desired."

(இ - ள்.) ஈங்கு வரவு என் என்று - இங்கே வருதல் ஏன் காரணமென்று, இமையவர்தம் கோன் - தேவேந்திரன் வினவ, தீங்கு தரு கலியும் - தீமை விளைக்கின்ற கலிபுருடனும்; நீங்கள் விருப்பான - நீங்களும் விரும்பும்படியான, வீமன் திருமடந்தையோடு - தமயந்தியோடு, இருப்பான் - மருவியிருப்பதற்காக, வருகின்றேன் யான் - நான் வருகின்றேன் (என்று) செப்பினான் - சொன்னான், எ - று.

உங்களைப்போல நானும் தமயந்தியைக் கலியாணஞ் செய்ய வந்தேனென்றான் என்பது கருத்து. உம் - அசை; பிரித்து யான் என்பதோடு கூட்டவுமாம்.

விருப்பு என்பது "குறியதன் கீழாக் குறுகலும்" என்கிற [உயிர் புணரியல் ஐ சூத்திரம்] விதியினால் விகுதி குன்றி அதனோடு உகரமேற்றது என்னவுமாம்.

159. மன்னவரில் வைவேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான் — உன்னு
டைய, உள்ளக் கருத்தை யொழித்தேகு கென்றா
ன், வெள்ளைத் தனியானை வேந்து.

159. The king who possessed the matchless white elephant, said (to Kali), "Nala, who possesses the sharpest lance among the earthly kings, has obtained the marriage garland from the moon-faced virgin; your intentions therefore being frustrated, you had better return."

(இ - ள்.) [அக்கலியைநோக்கி] வெள்ளைத் தனியானை வேந்து - வெண்மையான ஒப்பற்ற ஐராவதத்தை உடைய, விண்ணுலகுக்கு அதிபதியாகிய இந்திரன், மன்னவரில் - அரசர்களுள், வைவேல் நளனே - கூர்மையான வேலையுடைய நளனே

ராஜனே, மதி வதனை கன்னி - சந்திரன்போன்ற முகமுள்ள தமயந்தியினுடைய, மணம் மாலை—, கைக்கொண்டான் - பெற்ருன் (ஆதலின்,) உன்னுடைய—, உள்ளக்கருத்தை - மனதின் எண்ணத்தை, ஒழித்து - யோக்கி, ஏகுதி - போ, என்ருன்—, எ - று.

ஏகுதி—இதில் தி - ஏவலொருமை விகுதி எனக்கொள்ளுதல் நன்று. (கருக)

160. விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்
கொடுக்கின்றே னென்ருன் கொதித்து. [மை

160. (Hearing this, Kali) being displeased, said: "I shall destroy the intentions of the simple maiden who when there were celestial kings present, bestowed the fragrant and honey-filled marriage garland upon an earthly king:—and moreover, I shall lower the pride of her husband."

(இ - ள்.) [அதுகேட்டுக்கலி] கொதித்து - மனஸ்தாபம் அடைந்து, விண் அரசர் நிற்க - தேவர்கள் இருக்க, வெறி தேன் மணம் மாலை - வாசனையுள்ள தேன் நிறைந்த மணமாலையை, மண் அரசர்க்கு ஈந்த - பூமி ராஜாக்களுக்குக் கொடுத்த, மட மாதின் - மடமையையுடைய தமயந்தியினது, எண்ணம் கெடுக்கின்றேன் - இஷ்டத்தை யழிக்கின்றேன், மற்று - மேலும், அவள் தன் கேள்வனுக்கும் - அவளுடைய கணவனுக்கும், கீழ்மை கொடுக்கின்றேன் - தாழ்மைவரும்படி செய்கிறேன், என்ருன்—, எ - று.

இங்கு மடமாதென்றது, நாரதமியக் தெரியாதென இகழ்ந்தபடி. "வெறிதே" எனப்பாடமாயின், விண்ணரசர் வெறிதே நிற்க - பிரயோசன மில்லாமலிருக்க என்று பொருள் கொள்க.

கேள்வன் — கேண்மை என்னும் பண்படியாகிய கேள் - பகுதி, அன் - விகுதி, வ் - சந்தி. "எகர விறுமுச்சுட்டின் முன்னர்" என்னுஞ் சூத்திரத்தில் "நெறியே" என்பதனுல் அமைந்தது. கேண்மை - நேசம். (கசO)

161. வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கண்
தூய்மையு மற்றவன் றோள்வலியும் — பூமா
நெடுங்கற்பு மற்றவற்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ற வச்சிரத்தா னாங்கு.

161. Indra, the possessor of the deadly diamond war weapon, then related to Kali the veracity, the justice, the purity of mind, and the strength of the shouldres of Nala, as well as the great chastity of the maiden who resembled Lukshmi residing in the lotus, and then departed.

(இ-ள்.) அடும் கொற்ற வச்சிரத்தான் - கொல்கின்ற வெற்றிபொருந்திய வச்சிராயுதமுடைய இந்திரன், அவன் - அந்த நளனுடைய, வாய்மையும் - சத்தியத்தையும், செங்கோல் வளனும் - துரைத்தனச் சீரையும், மனத்தின்கண் - மனதிலுள்ள, தூய்மையும் - பரிசுத்தத்தையும், தோள் வலியும் - புஜபலத்தையும், பூமா - பூவிலிருக்குந் திருமகள்போன்ற தமயந்தியினது, நெடு கற்பும் - பதிவிரதா நிலைமையையும், ஆங்கு - அவ்விடத்தில், அவற்கு - அந்தக் கலிபுருடனுக்கு, நின்று உரைத்து - நிலைபெறச் சொல்லி, போனான் - (தன்னிடம்) சென்றான், நி - று, மற்று இரண்டும் - அசை.

அவ்விடத்தில் உன் மிடுக்குச் செல்லாதென்று சொன்னானென்பது கருத்து. பூமான் என்றும் பாடமுண்டு. பூமான் - பூமியென்றுரைப்பாருமுளர். (கசக)

162. செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன்
இருக்கத் தரியே னிவரைப் — பிரிக்க [விடை
உடனாக வென்றா னுடனே பிறந்த
விடநாக மன்னான் வெகுண்டு.

162. (Hearing this) Kali, who resembled a serpant venomous from its birth, becoming enraged, said: "I cannot bear to see this chariot-driving king united to the maiden whose eyes are like bright war-lances, you must allow me to separate these two.

(இ-ள்.) [இப்பேச்சைக்கேட்டு] உடனே பிறந்த - கூடப் பிறந்த, விடம் - விஷம்பொருந்திய, நாகம் அன்னான் - சர்ப்பத்தையொத்த கலிபுருடன், வெகுண்டு - கோபித்து, செரு -

less pair entered the apartment of burnished gold, while the obsequeous domestics performed little acts of service for them (as they passed.)

(இ - ள்.) கணி மொழிந்த நாளில் - சோதிடசாஸ்திரி சொல்லிய நன்னாளில், அணிமொழிக்கும் - அழகான சொல்லையுடைய தமயந்திக்கும், அண்ணலவற்கும் - பெருமையையுடைய நளமகாராஜனுக்கும், கடி மணமும் செய்தார் - புதிய கலியாணமுஞ் செய்தார், (விதர்ப்பராஜன் முதலினோர்,) மற்று எவரும் ஒவ்வார் - (தங்களோடு தாங்களே யல்லது) பிறர்யாரும் உவமான மாகமாட்டாத சிறப்புடைய அவ்விருவரும், பணிமொழியார் - வணக்கமான சொல்லையுடைய சேடிமார், குறுவேவல் செய்ய - சிறிய ஏவற் றொழில்களைச் செய்துவர, மகிழ்ந்து - களித்து, கொழும் பொன் அறை - நிறஞ்சிறந்த பொன்னாற்செய்த அறையை, புக்கார் - அடைந்தார்கள், எ-று.

கலியாண மானவுடனே தன்னிடஞ்சென்று சில சடங்கு செய்யும்படி சாஸ்திர மிருத்தலால் அறைபுக்கார் என்றார். கணி - கணிப்பவன், கணித்தல் - கிரகவோட்டத்தைக்கொண்டு காலத்தை யேற்படுத்தல். கடிமணம் - சிறப்பாகிய கலியாண மெனினுந்தகும். [உரியியல் - கசு - ஆம் - சூ.]

அண்ணலவற்கு—அண்ணல் (பெருமை) பகுதி, அன்-விகுதி, அ - சாரியை, வ் - உடம்படுமெய்; அண்ணலவன் என்றாகிக் குவ்வுருபேற்றது. அண்ணலாகிய அவற்கு எனப் பண்புத்தொகையாகவும் கொள்ளலாம். (கசுரு)

166. செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்
துஞ், வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—
வெந்தீயும், நஞ்சுந் தொடுத்தனைய நாம மலர்
வாளி, அஞ்சுந் தொடுத்தா னவன்.

166. In order that they might pierce the heart of the maiden who resembled the accomplished Lakshmi, and the chest of the chariot-driving king, Cupid bending his bow, let fly his five flowered arrows which were as deadly as if they were charged with burning fire and poison.

இதுமுதல் காண்ட முடிவுவரையில் புணர்ச்சி
வகை கூறப்படுகின்றது. இது மகாகாப்பியத்திற்,

கூறவேண்டியதோர் பொருளிதலின், தண்டி
யலங்காரம் அ - ம் சூத்திரம், மற்றவைகளையும்
ஆங்காங்கு வர்ணித்திருப்பதை யறிந்துகொள்க.

(இ - ள்.) செம் திருவின் கொங்கையினும் - செம்மையான திருமகளையொத்த தமயந்தியின் தனங்களிலும், தேர் வேந்தன் ஆகத்தும் - நளமகா ராஜனுடைய மார்பிலும், வந்து உருவ - பிரவேசித்து உருவும்படி, வார் சிலையை - நீண்ட வில்லை, கால் வளைத்து - நுனிகளோடு வளைத்து, வெம் தீயும் - வெப்பமான நெருப்பையும், நஞ்சம் - விஷத்தையும், தொடுத்தனைய - தொடுத்தாற்போலிருக்கிற, நாமம் - அச்சந்தருகிற, மலர் வாளி அஞ்சும் - ஐந்து புஷ்பபாணங்களையும், அவன் - அவ்வம்புகளை யுடைய மன்மதன், தொடுத்தான் - எய்தான், எ - று.

மன்மதன் அம்புகள் ஐந்தாவன—தாமரை, அசோகு, மா, சாதிமல்லிகை, கருநெய்தல் இவ்வைந்து பூவுமாம். பூவெல்லாம் அம்பாயினும் இவை சிறந்தவை என்றபடி. (௧௬௬)

167. ஒருவ ருடலி லொருவரொ துங்கி
இருவரெனுந் தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று.

167. He (Nala) whose war lance may be compared to burning fire and the maiden (Damayanti) each pressing so close to the other's body as not to appear two bodies, became united like water mixed with water.

(இ - ள்.) பொரு - யுத்தஞ்செய்யத்தக்க, வெம் கனற்கு - வெவ்விய நெருப்புக்கு, ஏயும் - ஒத்திருக்கிற, வேலானும் - ஆயுதமுடைய நளனும், காரிகையும் - தமயந்தியும், ஒருவர் உடலில் - ஒருவருடைய தேகத்தில், ஒருவர் ஒதுங்கி - ஒருவ லயப்பட்டு, இருவர் எனும் தோற்றம் இன்றி - இருவ அறிவு இல்லாதிருக்கும்படி, புனற்கு - தண்ணீரில், தால் போன்று - தண்ணீர் கலந்ததையொத்து, எ - று.

168. குழைமேலுங் கோமா னுயிர்
மழைமேலும் வாளோடி மீ

அல்லேரடும் வேலா னகலந் தொடும்மொரு
தாள், வல்லோடுங் கொங்கை மடுத்து.

168. As her lance-like eyes wandered from her ear-ornaments to the life of her husband and thence to her tresses which were like dark clouds, she with her breasts which excelled the chessmen of conical shape, waged war against the breast of him, the bright rays of whose weapon could dispise even darkness, as her (lustful) desire increased.

(இ - ள்.) குழைமேலும் - காதுகளின் மேலும் அல்லது காதணிகள் மேலும், கோமான் உயிர்மேலும் - நளமகாராஜனுடைய பிராணன்மேலும், கூந்தல் மழைமேலும் - கூந்தலாகிய மேகத்தின மேலும், வாள் ஓடி மீள - கண்ணாகிய வாளானது ஓடித் திரும்பும்படியாக, விழைமேல் - ஆசைப் பெருக்கத்தினால், அல் ஓடும் வேலான் - இருள் ஓடிப்போகத் தக்க காந்தியுள்ள ஆயுத முடைய அரசனது அகலத்தோடு - மார்புடனே, வல் ஓடும் கொங்கை - சொக்கட்டான் காய் தோற்று ஓடும்படியான தனங்களை, மடுத்து - நெருக்கி, ஒரு தாள் - யுத்தஞ்செய்தாள் (தமயந்தி), எ-று.

ஒருவீரன் வாள்வீசி யானையைமுட்ட நெருக்கிப் போர் செய்தாற்போ லென்பது குறிப்பு. இது பெண்புணர்ச்சி. முன்புறந் தொங்கி யலையுமிளகத்தை மழையென்றது. (௧௬௮)

169. வீரனகலச் செருவின் மீதோடிக் குங்குமத்தின்
ஈர விளவண்ட லிட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனும்
ஓராறு பாய வுடைந்து.

169. The river of lust which flowed from the virgin with soft raven tresses who was engaged in this conflict, king its confines overflowed on the field-like breast of (Nala) and there drying left a fragrance like sandal-mixture.

நேர் பொருத - நேரே புணர்ச்சிசெய்த, காராரும்
மிறைந்த மென்மையான கூந்தலையுடைய,
தியின், காதல் எனும் ஓர் ஆறு - ஆசை
ஒரு நதி, பாய உடைந்து - வாய்வழி

றெல் மண்டிலிடைப்பக்து, வீரன் அகலம் செறுவின்மீது - வீரனாகிய அவனுடைய மார்பாகிய கழனியில், ஓடி - வெள்ளம் பரந்து, குங்குமத்தின் ஈர இள வண்டல் - குங்குமச்சாந்தின் குளிர்ந்த இளவண்டலை, இட்டது - உண்டாக்கிற்று, இவ - ஏ, ஏ - அசை.

குங்குமச்சாந்து அவன்மார்பில் வியர்வையால் நனைந்தது. (

170. கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ — அங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து.

170. The king who possessed the elephants which inflicted death in the raging battle, joined himself with that maiden, while her breasts assumed a faded appearance, her cloud-like tresses were dishevelled, her red fish-like eyes sought her ears, and the bracelets on her beautiful hands rattled against each other.

(இ - ள்.) பூசல் விளை - சண்டையை விளைக்கின்ற, கொல் - கொல்லும்படியான, யானை - யானைச்சேனையையுடைய, வேந்து - சளுக்கிராஜன், கொங்கை முகம் குழைய - தனங்களின் முகங்கள் அடங்கவும், கூந்தல் மழை குலைய - மேகத்தோ டொத்த அளகபாரம் அவிழ்ந்து விழவும், செம் கயல் கண் - சிவந்த மீன்போன்ற கண்கள், ஓடி —, செவி தடவ - காதுகளை யளாவவும், அம் கை வளை - அழகிய கையின்கணுள்ள வளையல்கள், பூசல் ஆட - ஒன்றோடொன்று தாக்கி யொலிக்கவும், மடந்தையுடன் - தமயந்தியுடனே, சேர்ந்தான் —, எ - று.

இஃது ஆண்புணர்ச்சி, (௧௭௦)

171. தையனளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
வையமுழுது மகிழ்தூங்கத் — துய்ய
மணந்தான் முடிந்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தா னெடுங்காலம் புக்கு.

171. After their marriage ceremony had been concluded by his grasping the tender hands of his bride in his broad palm, while joy reigned over the whole earth, the maiden with the bright forehead and himself enjoyed together for a long time.

(இ-ள்.) கையில் தளிர் கரங்களை - தமயந்தியின் தளிர் போன்ற கைகளை, தன் தடம் கையால் பற்றி - தன்னுடைய விசாலமான கையிற்பிடித்து, வையம் முழுதும் - பூமியிலுள்ளோரெல்லாம், மகிழ்ந்து ஓங்க - சந்தோஷம் மிகுந்திருக்க, துய்ய மணம் முடித்ததன்பின் - சுத்தமான கலியாணத்தை நிறைவேற்றியபின்பு, வாணுதலும் தானும் - தமயந்தியுந் தானும், புக்கு - தன்னிடஞ்சென்று, நெடு காலம் புணர்ந்தான் - நெடுங்காலஞ் சேர்ந்திருந்தான் (நளன்), எ-று.

காண்டமுடிவாதலால் தொகுத்துக் கூறினார். இங்கு நளன், தமயந்தியும் தானும் புணர்ந்தான் என்பது "தானுந் தேரும் பாகனும் வந்தென்னலனுண்டான்" என்பதுபோல "திணைபால் பொருள்பல" என்கிற சூத்திரத்தினால் ஆண்பாலும் பெண்பாலும் விரவி ஒரு முடிபேற்றதெனக் கொள்க. [பொதுவியல் ௨௭-வது சூத்திரம்.] தன்னிடமாவது தானிருக்கும் விடுதி யிடம்.

துய்ய — தூய்மை என்னும் பண்படி, துய் - பகுதி, அ - பெயரெச்ச விகுதி; யகர மிரட்டியது சந்தி, குறிப்புப் பெயரெச்சம்; தூய்மை குறுகிற்றெனவும் கொள்ளலாம். (௧௭௧)

சுயம்வரகாண்டம் முற்றிற்று.

---

## இரண்டாவது.

# கலிதொடர் காண்டம்.

---

கலிபுருடன் நளமகாராஜனைத் தொடர்ந்ததனாலாகிய சரித்திரம் கூறப்படுதலின் இக் காண்டத்துக்கு அப்பெயர் வந்தது.

### காப்பு.

மூர்க்கை மறைநூன் முடியெலாந் தண்குருகூர்ச்
சேர்ந்தமிழ் வேத சிரமெல்லாம் — ஏந்தும்
புனைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் லடி.

The feet of Vishnu, which went to help before being invoked by the grieved elephant and the lovely shephered matrons, may be called the crown of the Vedas, and the head of the Tamil Vedas (திருவாய்மொழி.)

(இ-ள்.) நந்தும் - துன்பப்பட்டுக் கொண்டிருந்த, புழைக்கைக்கும் - யானைக்கும், நேயம் - நேசமுள்ள, பொதுவர் மகளிர்க்கும் - இடையருடைய பெண்களுக்கும், அழைக்கைக்கு முன் - அழைப்பதற்கு முன்னாகவே, செல் அடி - சென்றபாதம், முந்தை - ஆதியிலுண்டான, மறை நூல் முடி எனலாம் - வேதத்தின் கிரீடமென்று சொல்லத்தகும்; தண் குருகூர் - குளிர்ச்சியான திருக்குருகூரில் உண்டாகிய, செம் தமிழ் - செவ்வையான தமிழ்ப்பாஷையின் வடிவான, வேதம் - வேதத்தினது, சிரம் - சிரசு, எனலாம் - என்று சொல்லத்தகும், எ-று.

அது எமக்குக் காப்பென்பது இசையெச்சம். இவ்விசேடணங்களால் திருமாலின் திருவடி என்பது பெறப்படும். குருகூரிலுண்டாகிய வேதம், சடகோபமுனிவரால் அருளிச்செய்யப்பட்ட திருவாய்மொழி முதலிய பிரபந்தங்கள். அடி—எழுவாய்; எனலாம் இரண்டும்—பயனிலை. எனலுக்கும் ஆம் என்றுரைத்துக்கொள்க. அடி - அடியை என இரண்டாம் வேற்றுமையிற் கொண்டு, எனல் - என்று சொல்லுதல், ஆம் என்றுயிலுங் கூட்டிக்கொள்க. அப்போது எனல் - எழுவாய், ஆம் - பயனிலை.

செக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்துளும்பி
உக்கதெனச் சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்பர்
உள்ளத்தா னெங்கட் குளன்.

He is to us a protection, upon whose tresses the water of the Ganges overflows like the moon-beams which shed themselves all over the red heavens, who resides on the silvery mountains (Kailasam) and who dwells in the hearts of true lovers.

(இ-ள்.) செக்கர் - சிவப்பான, நெடு வானில் - பெரிய ஆகாயத்தில், திங்கள் - சந்திரனுடைய, நிலா - காந்தி வெள்ளமானது, துளும்பி - தளும்பி, [ததும்பி,] உக்கது என - பெருகியது

போல், சடைமேல்—, உம்பர் நீர் - கங்கை, மிக்கு ஒழுகும் - மிகுந்து ஓடிவருகின்ற, வெள்ளத்தான் - பிரவாகத்தையுடையவனும், வெள்ளி நெடு கிரியான் - வெள்ளியினுலமைக்கப்பட்ட பெரிய கைலாசமலையை யுடையவனும், மெய் அன்பர் உள்ளத்தான் - மெய்யான பக்தியுள்ளவர்களுடைய மனதில் எழுந்தருளி இருப்பவனும் (ஆகிய சிவபெருமான்,) எங்கட்கு—, உளன் - (இரக்ஷகனுக) இருக்கின்றான், எ - று.

செந்நிறச்சடையின்மேல் வெண்ணிறக்கங்கை யொழுகுவது செவ்வானிடத்து நிலாவொழுகியது போலுமென்றாயினும், அந்தியில் நடனஞ்செய்யுங்காற் செவ்வானிற் றோன்றிய நிலவில் முடிதாக்க, ஒழுகிய அந்நிலவின் சாரமெனக் கங்கையொழுக்கு குறிக்கப்பட்டதென்றாயினும், அக்காலத்துச் செவ்வானளவிய முடியின்கணுள்ள நிலாத்துடைத்த நீரே ததும்பியொழுகியதுபோலும் அக் கங்கை வெள்ளமெனக் குறிக்கப்பட்டதென்றாயினுங் கருத்துக்கொள்க. இது ஐயக்கலவையணி.

172. தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல், குவளைக் கருநிழலுங் கொள்ளப்—பவளக் கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன் செழுந்தேரி லேறினன் சென்று.

172. The king of the country, where the tender coral creeping upon the ears of beautiful paddy bear them down (with their weight), ascended his splendid chariot, while the bright shade of his matchless white umbrella, and the dark shade of the Kuvalai-like eyes of the maiden, cast themselves upon him.

(இ - ள்.) பவள கொழுந்து - பவளக்கொடியின் கொழுந்துகள், ஏறி—, செந்நெல் குலை - செல்விய நெற்கதிர்களை, சாய்க்கும் - சாய்ந்துபோகச்செய்கிற, நாடன் - நிடதநாட்டையுடைய நளன், தவள தனி குடையின் - வெண்மையான ஒப்பற்ற குடையினது, வெள் நிழலும் - வெளுப்பான நிழலும், தையல் - தமயந்தியினது, குவளை கரு நிழலும் - (கண்களாகிய) நீலோற்பலங்களுடைய கருமையான நிழலும், கொள்ள - தன்னைக்கொண்டிருக்க, சென்று—, செழு தேரில் - வேலைப்பாட்டு வளமுள்ள இரதத்தின்மீது, ஏறினன்—, எ - று.

தவளத் தனிக்குடையாவது முத்துக்குடை யென்பதாம், ஆகவே சந்திரனொளிபாயக் குவளைவாய்திறந்து ஒளியெறிப்பதுபோலே என்னும் உவமை குறிப்பிக்கப்பட்டது. குடைமலர்த்திப் புறப்படவே தமயந்தி உடன்செல்லும் வேட்கைப்பெருக்கத்தால் கண்மலர்ந்து காதலனை நோக்கினள் என்பது கருத்து. இதனால் பிறந்தகத்துச் சிறிதும் பற்றிலேனெனக் குறிப்பித்தாள் போலும். பவளக் கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்குமென்பது நாட்டின் வளப்ப முணர்த்தியதனோடு, வீரத்தினன் மேற்சென்று வணங்காமுடி மன்னரையும் வணக்குமவ்வரசன்போலவே விளங்கியது அப்பவளக்கொடி யென்பதையுங் குறிப்பிக்கின்றது. இக்குறிப்பெல்லாம் பொருளாற்றலடியாக வுண்டான தொனிகள். இவற்றி னிலக்கண முதலியவைகளை யாமியற்றிய தண்டியலங்கார சாரத்திற் காணலாம்.

சாய்க்கும்—செய்யுமென் வாய்பாட்டுப் பிறவினைப்பெயரெச்சம்; சாய் - பகுதி, இதுவே தன்வினைக்கும் பகுதி, புடைபெயர்ச்சியில் முக்காலத்திலு முறையே மெல்லொற்று மிகுவதும் மிகாமையும், வகர இடைநிலை பெறுதலும், தன்வினைக்குறி.

(உ - ம்.) சாய்ந்தான், சாய்கின்றான், சாய்வான்.

வல்லொற்று மிகுதலும் பகர இடைநிலை பெறுதலும் பிறவினைக்குறி.

(உ-ம்.) சாய்த்தான், சாய்க்கின்றான், சாய்ப்பான்.

மாய், தோய், தேய், மேய், மீள், சேர், விரி, மறை, ஒழி, வழி, முடி, உடை, கரை, உறை, அவி முதலியவைகளு மிவ்வாறே.

ஏறினன் — இது பிறவினையாங்காலத்து ஒவ்வொற்றுமிகுந்து ஏற்று, ஏற்றினன், ஏற்றுவான் முதலாக வரும். உருகு, விஞ்சு, ஆடு, பாடு முதலியவைகளு மிவ்வாறே யாம். (சு)

173. மங்கையர்கள் வாசு மலர்கொய்வான் வந்தடை
யப், பொங்கி யெழுந்த பொறிவண்டு—கொங்
கோ, டெதிர்கொண்ட ணைவனபோ லேங்கு
வன முத்தின், கதிர்கொண்ட பூண்முலையாய்
காண்.

173. Look, O thou whose beautiful breasts glitter with the sheen of pearls! when those maidens approach the fragrant flowers to pluck them, the spotted bees which rise up buzzing, fly agaiust them, laden with honey as if wishing to embrace them, singing the while.

[இப்பாட்டுமுதற் பதினொன்கு பாட்டுகளால் தன்னுடன் வருபவர் வழியில் பூக்கொய்ததும் நீர்விளையாடியதும் நளமகாராஜன் தமயந்திக்குக் காட்டியதாகச் சொல்லுகிறார்.]

(இ-ள்.) முத்தின் கதிர் கொண்ட - முத்துமாலையின் காந்திகளை ஏற்றிருக்கிற, பூண் முலையாய் - அணிகளைத்தரித்த தனங்களை யுடையவளே! மங்கையர்கள் - பெண்கள், வாச மலர் கொய்வான் - சுகந்தமான புஷ்பங்களை பறிக்கும்பொருட்டு, வந்து அடைய - வந்துசேர, பொங்கி எழுந்த - உயர்ந்து எழுந்திருந்த, பொறி வண்டு - புள்ளிகளையுடைய வண்டுகள், கொங்கோடு - தேனோடு, எதிர்கொண்டு—, அணைவன போல் - சேர்கின்றவைபோல், ஏங்குவன - ஒலிக்கின்றன, காண் - பார், எ-று.

மேலானவர் வருங்கால் அங்குற்றோர் காணிக்கை கொண்டு எதிர்வந்து பிரார்த்தித்தல் போலுமெனக் கருத்துக்கொள்க.

174. பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே,
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு—மேவி
யவர், பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழ
லாய் காணென்றான், மின்னெடுவேற் கையான்
விரைந்து.

174 "See quick, O thou fair haired one!" exclaimed he who holds in his haud a long glittering lance—"Who is there who will not bow in submission at a female touch? Even the flowered stalk, at the touch of a woman, bends and falls down at her beautiful feet."

(இ-ள்.) மின் நெடு வேல் கையான்-ஒளிபொருந்திய பெரிய வேலேந்திய கையையுடைய நளன், பாவையர் கை தீண்ட - பெண்கள் கையினாற் பரிசிக்க, பணியாதார் யாவரே - வணங்காதவர்கள் யார், பூவையர் கை தீண்டலும் - நாகணவாய்ப் புட்களுக்குச் சமானமாகிய ஸ்திரீகள் கையினால் தீண்

டின வுடனே, அப் பூ கொம்பு - அந்தப் பூவுள்ள கிளைகள், மேவி - பொருந்தி [விரும்பி,] அவர் பொன் அடியில் - அப் பெண்களினுடைய அழகான பாதங்களில், தாழ்ந்தனவே - வணங்கி யிருக்கின்றனவே, விரைந்து - துரிதப்பட்டு, காண் - பார், பூ குழலாய் - மலர் சூடிய கூந்தலை யுடையவளே! என்றான் -, எ-று.

மலர்கொய்தவுடன் அக்கொம்பு நிமிர்ந்துபோ மாதலால் விரைந்து காண் என்றான். ஏகாரம் தேற்றப் பொருட்டாய்க் காரியநிறைவேறி யிருக்கின்ற தென்னுங் கருத்தைக் காட்டுகின்றது. முற்பாட்டிலும் இங்ஙனமே கொள்க. கையான் என்பதை மூன்றாம்வேற்றுமையாக் கொண்டு கையினாற் காட்டினான் எனவுங் கொள்ளலாம். (௩)

175. மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்
தைப், பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்-
செங்கையால், காத்தாளக் கைம்மலரைக் காந்த
ளென்று பாய்தலுமே, வேர்த்தாளைக் காணென்
றான் வேந்து.

175. "Look at that terrified maiden" said the king "the bee mistaking the bright countenance of that flower-gathering damsel for a lotus, comes to alight on it; and when she raises her rosy hand as a protection, mistaking that flower-like hand for a kantal blossom, it flies against it."

(இ-ள்.) மங்கை ஒருத்தி - ஒருபெண், மலர் கொய்வாள் - பூப்பறிப்பவளாகி, வாள் முகத்தை - (நீரில்தோன்றும்) பிரகாசமுள்ள தன்முகத்தை, பங்கயம் என்று எண்ணி - தாமரை மலரென்று நினைத்து, படி வண்டை - (அம்முகத்தின்கண்) படியும்வண்டை, செம் கையால் - சிவப்பான கையினால், காத்தாள் - படியவொட்டாமல் தடுத்தாள்; அ கை மலரை - அந்த மலரொத்த கையை, காந்தள் என்று - காந்தட்பூவென்று நினைத்து, பாய்தலுமே - (அவ்வண்டு) பாய்ந்தவுடனே, வேர்த்தாளை - (அச்சத்தினால்) வியர்வை கொண்டிருக்கிற பெண்ணை, காண் என்றான் - பார் என்றான், வேந்து - நளமகாராஜன், எ-று.

கைம்மலர் முதபங்கயம் முதலிய விடுத்து, மலர்முதலிய உவமானப்பொருள்பின் சிறப்பினும் பொருளேனைக்கத்தால் உவமைத் தொகையாக்க் கொள்க. இப்படிப்பட்ட தொகைகளைத் தொட்டரை "உபமா னோத்தரபத கர்ம தார்ய சமாசம்" என்பர் வட நூலார். தமிழருக்கு இது இலக்கணப் போலியாம். கையாகிய மலர் எனவேண்டுமிடத்துப் பண்புத்தொகையாக்க் கொள்க.

எண்ணி—இந்தவினையெச்சம் படி என்னும் வினைத்தொகை யைக்கொண்டது. பாய்தலும்—இவ்வினையெச்சம் வேர்த்தாள் என்கிற வினையாலணையும் பெயரைக் கொண்டது. (ரு)

176. புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போல்
(௬) செல்லு மடந்தை சிலம்பவித்து — மெல்லப்
போய், அழமலரைக் கொய்யா தருந்தளிரைக்
கொய்வாளைச், செம்மலரிற் றேனே தெளி.

176. "O thou that art as sweet as the honey in the beautiful flower! Look at the maiden whose gait is like that of the wild peacock, who seeing the copulating striped bees, silencing her ankle ornaments, approaches slowly and without plucking that flower, breaks off the tender stalk by its side."

(இ-ள்.) செம் மலரில் தேனே - செவ்விய பூவினிடத்துள்ள தேனபோன்ற பெண்ணே, புல்லும் வரி வண்டை கண்டு - புணர்கின்ற ரேகைகளுள்ளவண்டைப் பார்த்து, புன மயில் போல் - காட்டிலுள்ள மயில்போல், செல்லும் மடந்தை - நடக்கின்ற தன்மையுள்ள பெண், சிலம்பு அவித்து-சிலம்போசையை நிறுத்தி, மெல்ல போய் - மிருதுவாகப் போய், அம்மலரை கொய்யாது - அப்பூவைப் பறியாமல், அரு தளிரை கொய்வாளை - அருமையான துளிர்களைப் பறிக்கின்ற பெண்ணை, தெளி - அறி, எ-று.

செம்மலரிற்றேன் இலக்குமி என்னவுமாம். புல்லுங்கால் இடையூறு நேரிடின் உண்டாம் வருத்தமறிந்தவளாதலாற் சிலம்பவித்து மெல்லச் சென்றாள்.

தெளி—இப்பகுதி அறிவு சித்தம் முதலிய பொருளையுணர்த்துங்கால் தன்வினையில் கரை முதலானவை போலவும், சிந்

நுதல் முதல்வன் பொருளை யுணர்த்துங்கால் பிறவினையில் அவைபோலவு வரும். (உ-ம்.) தெளிந்தான், தெளித்தான், பிறவினையானபோது முன்னது தெளிவித்தானென விவ்விகுதி சேர்ந்தும், பின்னது தெளிப்பித்தானென பிவ்விகுதி சேர்ந்தும் வரும். தொழிற்பெயரிலும் தெளிவு, தெளிதல், தெளிப்பு, தெளித்தல் இவ்வாறுவரும். துணி முதலியவு மிப்படியே. (ரு)

177. கொய்த மலரைக் கொடுங்கையி னாலணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து — தைய
-லாள், பாதார விந்தத்தே சூட்டினான் பார்வையி
-டைக், காதார மில்லா தறிந்து.

177. He who collects together in his folded arms the plucked flowers, and comes before her with the intention of entwining them in her thick tresses, knowing that the waist of the maiden possesses no support in itself, casts them at the lotus-like feet of that maiden.

(இ-ள்.) கொய்த மலரை - பறித்தபூவை, கொடுங்கையினால் - உட்புறம் வளைந்த கையினால்; அணைத்து - சேர்த்து, மொய்குழல் - நெருங்கிய கூந்தன்முடியில், சூட்டுவான் - சூட்டுதற்கு, முன் வந்து - எதிரில்வந்து, பாவை இடைக்கு - பெண்ணினுடைய இடுப்புக்கு, ஆதாரம் இல்லாது அறிந்து - (தாங்கும்) ஆதாரம் இல்லாமையைத் தெரிந்துகொண்டு, தையலாள் - அப்பெண்ணினுடைய, பாதாரவிந்தத்தே - தாமரைபோன்ற பாதங்களிலே, சூட்டினான் - வைத்தான், எ-று.

இங்கு மொய்குழல் என்பதை முன்புறம் வளைத்து முடிந்திருக்கும் ஒருவகை மயிர்முடியெனக் கொள்க. எதிரில் வந்து தன்பாரங் காண்கையால் இப்பூச் சுமையுஞ் சேரின் இடைக்கு அபாயம் நேரிடுமெனக் கருதிப் பாதத்திற் சூட்டினன் என்பது கருத்து. அம்மலர்கள் அவள் பாதாரவிந்தத்து விழுந்து கிடக்கற்பாலனவெனக் கருதினனெனவுங் கொள்க. (சா)

178. ஏற்றமுலையார்க் கிளைஞரிடைப் புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமால் — காற்ற
-ஞ்சைப்பய், உக்க மலரோ டுகுத்தவளை முத்தமே
-க்கர் பண்ணின்மே லிசைந்து.

178. "The mound of sand upon which the flowers shaken by the trees by the blowing of the wind fall, mixed with the pearls produced by the shells, is like the bed &c."

(இ-ள்.) காற்று அசைப்ப - காற்று அசையச் செய்வதினால், உக்க - உதிர்ந்த, மலரோடு—, வளை உகுத்த முத்தம் - சங்குகள் ஈன்ற முத்துக்கள், மேல் இசைந்து - மேலேசேர்ந்து (இருத்தலின்), எக்கர் - எக்கலாகிய, மணல் - மணற்பரப்பு, ஏற்ற முலையார்க்கு - பெண்களுக்கு, இளைஞர் - பருவமுள்ள ஆண்மக்கள், இடும் - செய்த, புலவி - ஊடலின், தோற்றம் - உண்டாதலையுடைய, அமளி என - படுக்கைபோல், தோற்றும் - காணப்படும், எ-று. ஆல் - அசை.

தடாகதீரங்களில் மணற்பரப்பின்மேல் பூவும் முத்துஞ் சேர்ந்திருப்பதைப் பார்க்கக் கூடியிருக்கையில் ஆண்மக்கள் செய்யாதொரு தவறுகண்டு பிணங்கின பெண்கள் பூக்களையும் முத்துக்களையுங் கழற்றி யெறிந்துபோன படுக்கைபோ லிருந்த தென்பது கருத்து. ஏற்றமுலையார் என்பதற்குத் தகுதியான தனங்களை யுடையார் எனவும், முலைகளைத் தாங்கினவர்கள் எனவும் பொருள் கொள்ளலாம். எக்கலாவது வெள்ளம் ஏறிய போது படிந்தமணல்.

தோற்றும்—தோன்று - பகுதி, இது தோன்றும் என இயல்பாய் வருவதுமன்றித் தோற்றும் என வலித்தும் வரும். இப்படியே நினை, ஒளிமுதலிய சிலபகுதிகளும் யாதொரு பொருள் வேற்றுமையு மின்றி, நினைந்தான் நினைத்தான், ஒளிந்தான் ஒளித்தான் என வல்லொற்றும் மெல்லொற்றுமாய் வரும். ஒளித்தான் என்பது பிறவினையுமாம். இப்படி வினைகள் பல வகை யிருப்பதைக் காண்க. (எ)

179. அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
(௯) புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக் — கலந்
தொசிந்த, புல்லென்ற கோலத்துப் பூவைய
ரைப் போன்றதே, அல்லென்ற சோலை யழகு.

179. "The beauty of the dark grove in which the dried branches wave over the full-blown flowers, which

fall from the trees, is like the faded beauty of the exhausted maiden as she lies .................... on her bed of flowers."

(இ - ள்.) அலர்ந்த மலர் சிந்தி - மலர்ந்தபூக்கள் உதிர்ந்து கிடக்க, அம் மலர்மேல் - அந்த புட்பங்களின்மேல், கொம்பு - இளங்கிளை, புலர்ந்து - வாடி, அசைந்து - அசைந்து கொண்டிருப்பதினால், அல் என்ற சோலை அழகு - இருள் என்று சொல்லத்தக்க தோப்பின் அழகானது, பூ அணைமேல் - புஷ்ப சயனத்தின்மேல், புல்லி கலந்து - தழுவிப்புணர்ந்து, ஒசிந்த - வாடியசைந்த, புல் என்ற - ஒளிமழுங்கின, கோலத்து - அழகுடைய, பூவையரை போன்றது - பெண்களை ஒத்திருந்தது, எ - று. ஏ - அசை.

சிந்தி, அசைந்து, என்பன சிந்த, அசைய, என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு; அல்லது சிந்தி என்பது சினைவினையாதலின் அசைந்து என்பதைக் கொண்டது எனவும், அசைந்து என்பது [இருத்தலால்] என்னும் வருவிக்கப்பட்ட தொழிற்பெயரைக் கொண்டதெனவும் அறிக. (அ)

180\. கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கை
யால், அங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூ—
கொங்கவிழ்தேன், வார்க்கின்ற கூந்தல் முகத்
தை மதியென்று, பார்க்கின்ற தென்னலாம் பார்.

180\. "Look" said the king "we may say that the full-blown water lilies, which that maiden gathers together in her folded arms, and presses against her breasts, mistake the face of the maiden, whose tresses drip with fragrant honey, for the moon (and therefore blossom.)

(இ-ள்.) கொங்கை முகத்து - தனங்களின் முன்புறத்திலே, அணைய - சேரும்படி, கூட்டி - சேர்த்து, கொடு கையால் - முன்வளைந்த கையினால், அணைக்க - கட்டிக்கொள்ள, வாய் நெகிழ்ந்த - மலர்ந்த, ஆம்பல் பூ—, கொங்கு அவிழ் - வாசனை வீசப்பெற்ற, தேன் வார்க்கின்ற - தேனை ஊற்றுகின்ற, கூந்தல் - தலைமயிருள்ள பெண்ணின், முகத்தை—, மதி என்று - சந்திரனென்று, பார்க்கின்றது - நினைக்கின்றது, என்னலாம் - என்று சொல்லலாம், பார்—, எ - று. அங்கு - அசை. (கூ)

181. கொய்த குவளை கிழித்துக் குறுந்தன்மேல்
எய்தத் தனிவைத்த வேந்திழையாள்—வையத்
தார், உண்ணுக் கடுவிடத்தை யுண்ட வொரு
மூன்று, கண்ணனைப் போன்றனளே காண்.

181. "She, the maiden adorned with pendent jewels, who breaks off the plucked kuvalai, and places it all by itself in her small forehead, resembles the three-eyed Siva who swallowed the rank poison, which no earthly being could swallow."

(இ - ள்.) கொய்த குவளை - பறித்த கருநெய்தற்பூவை, கிழித்து—, குறு நுதல்மேல் - சிறிய நெற்றியின்மேல், எய்த - சேரும்படி, தனி வைத்த - தனியாகவைத்த, ஏந்திழையாள் - பெண், வையத்தார் - உலகத்திலுள்ளோர், உண்ணு - உண்ணுத, கடு விடத்தை - கடுமையான விஷத்தை, உண்ட - பக்ஷித்த, ஒரு மூன்று கண்ணனை - மூன்றுகண்களையுடைய சிவனை, போன்றனள் - ஒத்திருக்கின்றனள், காண்—, எ-று. ஏ-அசை.

ஒரு என்பது மூன்றை விசேஷித்து நின்றது, பாஷையின் இயல்பு. வையம்—ஒழிந்தவுலகங்களையும் கொண்டது [பொது வியல். எ - ஆம் - சூத்திரம்.] இப்பாட்டிலும் மூற்பாட்டிலும் நீர்ப்பூக்கொய்தல் சொல்லியதனால் நீர்விளையாட்டுச் சொல்லிய தாயிற்று. இது மேற்பாடல்களில் விளங்கும். (கo)

182. கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்—
கெழுமியவக், கோமகற்குத் தானினைந்த குற்
றங்க ளத்தனையும், பூமகட்குச் சொல்லுவாள்
போல்.

182. She who places her blooming face close beside the lotus flower, being ticked by the water which her husband throws at her from the cool stream, appears as if she were confessing to the goddess who resides in that flower, all the evil intentions she meditated against that excellent husband.

(இ - ள்.) கொழுநன் - கணவன், கொழு தாரை நீர் - கொழுமையான வொழுக்குள்ள தண்ணீரை, வீச - (மேலே)

னறிய், சூசி - சூச்சம் அடைந்து, செழுமிய - பொருந்திய, அகோ மகற்கு - அந்த மேன்மையான் புருடனிடத்தில், தான் நினைந்த - தான் எண்ணின, குற்றங்கள் அத்தனையும் - குற்றங்களை யெல்லாம், பூமடட்கு - இலக்குமிக்கு, சொல்லுவாள் போல் - அறிவிப்பாள்போலே, செழுமுகத்தை - பொலிவுள்ள முகத்தை, தாமரைக்கே - தாமரையினிடத்தே, சேர்த்தாள்—, எ - று.

போல்—குறிப்புப் பொருளில் வந்தது. (கக)

183. பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதி
ரண்டிற், பெய்து முகமூன்று பெற்றாள்போல்—
எய்த, வருவாளைப் பாரென்றான் மாற்றாரை
வென்று, செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய்.

183. The king who destroyed his enemies, and joyfully regarded the victorious weapon in his hand, exclaimed "Look at that maiden who is coming before us, and who in play has placed two lotus flowers on both her ears, looking as if she had three faces."

(இ - ள்.) மாற்றாரை வென்று - பகைவரைச் செயித்து, செரு வாளை பார்த்து - சண்டைசெய்யும் வாளாயுதத்தைப் பார்த்து, உவக்கும் - மகிழ்கின்ற, சேய் - ராஜகுமாரன், [நளன்,] பொய்தல் - விளையாட்டில், கமலத்தின் போதிரண்டை - இரண்டு தாமரை மலர்களை, காது இரண்டில் - இரண்டு காதுகளின்மேல், பெய்து - தரித்து, மூன்று முகம் பெற்றாள்போல் - மூன்று முகங்களை யடைந்தவளைப் போலே, எய்த - (நம்மைச்) சேர, வருவாளை - வருகின்ற பெண்ணை பார் என்றான்—, எ - று.

உவக்கும்—உவ - பகுதி, இப்பொருள்கொண்ட உக என்கி பகுதியுமுண்டு; உகந்தான் முதலிய உதாரணம். (கஉ

184. பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த மின்
னைப் பூணழகுமுகத்தைப் புண்டரிக மெ
றுயிர்த்துக் காணுந் துயர்வாரைக் காண.

184. Look at that man who, bathing with his wife, so as to agitate the flowers filled with golden-hued filaments and fragrant seeds, on seeing the pure face of her, adorned with bright jewels, who rose first (out of the water) and mistaking it for a lotus flower, is quite perplexed.

(இ - ள்.) பொன் உடைய - பொன்போன்ற மகரந்தப் பொடிகளைச் (சுற்றிலும்) உடைய, வாசம் - வாசனையுள்ள, பொகுட்டு - கொட்டையையுடைய, மலர் - தாமரைமலர்கள், அலைய - அலையும்படி, தன்னுடனே மூழ்கி - தன்னோடு கூடவே நீரில் அமிழ்ந்து, தனித்து - தனியாக, எழுந்த - (நீரினின்றும்) எழுந்த, மின்னுடைய - காந்தியுள்ள, பூணாள் - ஆபரண மணிந்த பெண்ணின், திரு முகத்தை - அழகுள்ள முகத்தை, புண்டரிகம் என்று - தாமரைப்பூ வென்று, அயிர்த்து - சந்தேகித்து, காணாது - அவளைக்காணாமல், அயர்வானை - வருந்துகின்றவனை, காண் - பார், எ - று.

பொன் இலக்குமி யெனவுங் கொள்ளலாம். (கஅ)

185. சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கை
யான், முறுக்குநெடு மூரிக் குழலும் - குறிக்கின்,
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட
காட்சி, அரும்பாம் பணைமுலையா யாம்.

185. O thou whose full-developed breasts are like buds! If we compare that small bright face, and those long beautiful tresses, which are twisted with those hands which resemble red kuvali-flowers they are like the pale moon which is seized by the sable-hued serpant (Raghu.)

(இ - ள்.) அரும்பு ஆம் - அரும்புகின்றனவாகிய, பணை முலையாய் - பருத்த முலையையுடையவளே, சிறுக்கின்ற - சுருங்கிவருகின்ற, வாள் முகமும் - ஒளிபொருந்திய முகத்தையும், செம் காந்தள் கையால் - சிவந்த காந்தட்பூப்போன்ற கையினால், முறுக்கும் - முறுக்கப்பட்ட, நெடு - நீட்சியான, மூரி - பெருமை பொருந்தின, குழலும் - கூந்தலையும், குறிக்கின் - குறித்தால், கரு பாம்பு - இராகுவென்னுங் கருமையான பாம்பு, வெள் மதியை - வெளுமையான சந்திரனை, கைக்கொண்ட காட்சி - இரகித்த தோற்றம், ஆம் —, எ - று.

மூரி - வளைவு என்றும் பொருள் கொள்ளலாம். குறித்தலாவது ஒருபொருளை மற்றொருபொருளின் தன்மை மிகுதியற்றி இது அப்பொருளாயிருக்கலாமென்று ஊகித்தல். (௧௬)

186. சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்
மேல், வார்குழலை நீக்கி வருந்தோற்றம்-பாராய்,
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே,
புரைகின்ற தென்னலாம் பொற்பு.

186. "Look! we may say that the appearance of the maiden, who having bathed in the running streamlet, rises up, and brushes aside the long tresses which fall over her bright forehead, is like the beauty of the crescent moon, which, suddenly bursting forth, makes its appearance from among the clouds.

(இ - ள்.) சோர் புனலில் மூழ்கி - ஓடுகின்ற தண்ணீரில் அமிழ்ந்து, எழுவாள் - எழுகின்ற ஒருபெண், சுடர் நுதல்மேல் - விளக்கமான நெற்றியின்மேல், வார் குழலை - நீட்சியான அளகங்களை, நீக்கி வரும் தோற்றம் - நீக்கி வருகிற சொரூபம், விரை கொண்டு எழுந்த - பிரகாசத்தோடு உதித்த, பிறை - சந்திரப் பிறையே, மேகத்து இடை - மேகத்தின் நடுவிலே, புரைகின்றது என்னல் ஆம் - தோன்றுகின்றதென்று சொல்லும்படியான, பொற்பு - அழகுடைமையை, பாராய் - பார், எ - று. ஏ - அசை.

187. செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்
வாள், முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழு
நீரைக், கொய்யாது போவாளைக் கோல்வளைக்
குக் காட்டினன், வையாரும் வேற்றடக்கை மன்.

187. The king, who held in his hand a long sharp lance, pointed out to her, who was adorned with beautiful bangles, the maiden the shade of whose bright blue eyes falling on the red Kuvali which she was about to pluck, and who, thinking the flower before her was wholly blue went away without touching it.

(இ - ள்.) வை ஆரும் வேல் - கூர்மைபொருந்தியவேலை, தடம் கை மன் - பெரிய கையிற்கொண்ட அரசன், செழு நீலம் - செழிப்பான நீலநிறத்தை, நோக்கு - பார்வையானது,

எறிப்ப - எறிகிறதினால், செங்குவளை கொய்வாள் - செங்கழுநீர்ப்பூவைப் பறிக்கவந்தவள், முழுநீலம் என்று - முழுதும் நீலமாகிய கருங் குவளைப்பூ என்று, அயிர்த்து - சந்தேகித்து, முன்னர் - எதிரில், கழுநீரை - செங்கழுநீர்ப்பூவை, கொய்யாது போவாளை - கொய்யாமற் போகின்றவளை, கோல்வளைக்கு - தமயந்திக்கு, காட்டினான் - காண்பித்தான், எ - று.

கொய்யுங்கால் தன் கண்ணின் காந்திபட்டுக் கறுத்துத் தோன்றுகிற செங்குவளையைக் கருங்குவளையென்று மயங்கிக் கொய்யாமற் போனாளென்பது கருத்து.

எறிப்ப—எறி - பகுதி, இது ஆயுதமுதலானவைகளை வீசுகிற தென்னும் பொருள்படவந்தால் எறிய என்றாகும். இதுவும் தெளி என்பதைப்போலவே எறிர்தான், எறித்தான் முதலாக வரும். (கசு)

188. காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்—தேவின்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
ஒழியா துறைந்தா ருவந்து.

188. The wife, whose long eyes resembled water lilies and her husband, having bathed in all the tanks and rivers, and having also in accordance with the unchangeable supplication to the Almighty bathed in the river Ganges, lived a joyful and inseparable life.

(இ - ள்.) காவி பொரு நெடு கண் காதலியும் - நீலோற்பலத்தையொத்த நெடுமையான கண்களையுடைய நாயகியும், காதலனும் - நாயகனும், [தமயந்தியும் நளனு மென்றபடி,] வாவியும் ஆறும் - குளங்களையும் நதிகளையும், குடைந்து ஆடி - அலைத்து நீராடி, தேவின் - கடவுளின், கழியாத சிந்தையுடன் - நீங்காத தியானத்தோடு, கங்கை நதி ஆடி - கங்கையாற்றில் ஸ்நானஞ்செய்து, உவந்து - சந்தோஷித்து, ஒழியாது - பிரியாமல், உறைந்தார் - இருந்தார், எ - று.

வாவியும் ஆறும் என்பன வழியிலுள்ளன, கங்கைநதி மாவிரதத்தின் அருகில் உள்ளது. 'தேவின் கழியாத சிந்தையுடன்' என்றமையின் மற்றநதி முதலியவற்றுள் நீராடியது விளையாட்

டென்றும், கங்கையி லாடியது தெய்வபத்தியினு லென்றும் விளங்கும். இதனால் நளனும் தமயந்தியும் பூக்கொய்தலும் நீர் விளையாட்டுஞ் செய்தாரென்பது விளக்கப்பட்டது. (கஎ)

189. நறையொழுக வண்டுறையு நன்னகர்வாய் நாங்கள், உறையு மிளமரக்கா வொக்கும்—இறை வளைக்கைச், சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற், பொற்றொடியாய் மற் றிப் பொழில்.

189. "O thou adorned with striped bangles, thou slender waisted one, whose words are as honey! thou softly smiling being, adorned with golden bracelts! This grove before us, resembles the groves of tender trees which we frequently resort to in our good country which is frequented by honey-making bees.

(இ - ள்.) இறை வளை கை - பெருமையான சங்குவளைகள் அணிந்த கைகளுள்ள, சிறு இடையாய்-சிறிய இடையையுடைய வளே! பேர் அல்குல் - பரந்த அல்குலுடைய, தே மொழியாய் - மதுரமான வசனமுள்ளவளே! மெல் முறுவல்-இளமையான சிரிப்புள்ள, பொன் தொடியாய் - பொன் வளையல்களுடையவ ளே! இப்பொழில் - இந்தத்தோட்டம், நறை ஒழுக - தேன் ஒழுகுதலால், வண்டு உறையும் - வண்டுகள் குடியிருக்கப்பெற் றிருக்கிற, நல் நகர்வாய் - நல்லபட்டணத்தில், நாங்கள் உறை யும் - நானும் என்னுடையவரும் வசிக்கிற, இள மரம் கா - இள மரங்களை யுடைத்தாயிருக்கிற தோட்டத்தை, ஒக்கும் - ஒத் திருக்கின்றது, எ-று. மற்று - அசை.

இறைவளையென்று எடுத்து வருத்திச் செய்யப்பட்ட வளை கள் எனப்பொருள் கொள்வதும் ஒன்றும். 'நன்னகர்வாய்' என் பது நன்னகரைப் பொருந்திய என்று உரைக்கவுமாம். வண் டுறையும் நாங்கள் உறையும் என்பவற்றை இளமரக்கா என்ப தோடு முடிக்க, வாய் என்பதை வினைத்தொகையாக் கொள் ளின் அதையும் அப்பெயரோடே முடிக்க; ஏழனுருபாகக் கொள்ளின் இடைப்பிற வரத்தாகக் கொள்க. [பொதுவியல் ரு - வது சூத்திரம்.] (கஅ)

190. கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற—மன்னவனே
இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
ஒக்குமதோ வென்று ளுயிர்த்து.

190. Her gladdening words stammering in her beautiful mouth like the restrained desire of a virgin, Damayanti heaving a sigh, said "O king! is this fragrant grove really like the groves of tender trees in which you reside?"

(இ - ள்.) கன்னியர்தம் - பெண்பிள்ளைகளிடத்துண்டாகிய, வேட்கையே போலும் - ஆசையேபோல் காணப்படுகின்றது, (இவ்வாறு கூறியதற்குக் காரணம் என நினைத்து), களி மழலை - களிக்கத்தக்க மழலைச்சொற்கள், தன் மணி வாயுள்ளே - தனது மாணிக்கம்போன்ற வாயினுள்ளேயே, தடுமாற - தடுமாறிக்கொண்டிருக்க, உயிர்த்து - பெருமூச்செறிந்து, மன்னவனே - அரசனே, இக் கடி கா - இந்த வாசனையுள்ள தோட்டம், நீங்கள் உறையும் - நீயும் உனக்குப் பிரியமானவர்களும் வசிக்கின்ற, இள மரக்கா ஒக்குமதோ - இளமரத்தோப்பை ஒத்ததோ, என்றாள் - என்றுசொன்னாள் (தமயந்தி), எ - று.

இப்பாட்டில் இசையெச்சமே வேண்டாது 'கன்னியர்தம் வேட்கையே போலும்' என்பதற்கு கன்னிமாருடைய ஆசையைப்போல் வெளிப்படாமல் உள்ளே நிற்கத்தக்க என்று மழலைக்கு விசேடணமாக்கிப் பொருளுரைப்பது நேர். முற்பாட்டில் அரசன் இப்பொழில் நாங்கள் உறையும் இளமரக்கா ஒக்கும் என்று சொன்னதினால் அரசனுக்குப் பிரியமாய்ப் பொழில் விளையாட்டுக்கு உரியமாதர் பலர் உளர்போலும் என்று நினைத்துத் தமயந்தி மனம் வருந்தி இவ்வாறு குறிப்பாய் உரைத்தனள் என்பது கருத்து. இது மேற்பாட்டில் வெளியாம். (கசு)

191. தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்
மேல், வெண்டரள மென்ன வியர்வரும்பக்—
கெண்டைக், கடைசிவப்ப நின்றாள் கழன்மன்
னர் வெள்ளைக், குடைசிவப்ப நின்றான் கொடி.

191. With her lips, as red as the தொவ்வை fruit, quivering with the perspiration dropping like white pearls

from her bright forehead, and with her fish-like eyes inflamed at the corners, stood the daughter of the king Bhima, who reddened (*i.e.* dyed with their blood) the white umbrellas of the monarchs, adorned with ankle ornaments.

(இ - ள்.) கழல் மன்னர் - வீரக்கழலணிந்த அரசர்களுடைய, வெள்ளை குடை—, சிவப்ப - (உதிர வெள்ளத்தினால்) சிவந்து போகும்படி, நின்றான் - நின்றவனாகிய வீமராஜனுடைய, கொடி - மகளாகிய தமயந்தி, தொண்டை கனி வாய் துடிப்ப - கொவ்வைப்பழம்போன்ற உதடுகள் துடிக்கவும், சுடர் நுதல்மேல் - பிரகாசமான நெற்றியில், வெண் தரளம் என்ன - வெண்மையான முத்தைப்போல், வியர்வு அரும்ப - வேர்வை துளிக்கவும், கெண்டை கடை சிவப்ப-கெண்டைபோன்ற கண்களின் கடைகள் சிவந்துபோகும்படியும், நின்றாள்—, எ - று.

சிவப்ப — சிவ - பகுதி, செம்மையின் விகாரமென்னலாம்; இது குச்சாரியைசேர்ந்து சிவக்க எனவும், பகுதி விகாரப்பட்டுச் செய்ய எனவும் வரும். - (உ०)

192. தங்கள் புலவித் தலையிற் றனித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்
னுங், கொடியாடக் கண்டானோர் கூத்து.

192. He (Nala) saw the brows on the face of the maiden who had stood apart on account of the recent quarrel, dance over her beautiful eyes, like the legs of the dancing girl crossing the curved lance in the brilliant assembly.

(இ - ள்.) தங்கள் புலவித்தலையில் - தங்களுக்கு நேரிட்ட ஊடலில், தனித்து இருந்த-ஒன்றியாயிருந்த, மங்கை - தமயந்தியின், வதனம் - முகமாகிய, மணி அரங்கில் - இரத்தின சபையில், அம் கண் வடிவாள் மேல் - அழகிய கண்ணாகிய வடித்த கத்திகளின்மேல், கால் வளைத்து - நுனியைவளைத்து [காலை வளைத்து,] வார் புருவம் என்னும் கொடி - நீண்ட புருவமென்று சொல்லப்பட்ட கொடி [பெண்,] ஓர் கூத்து - ஒருகூத்தை, ஆடக்கண்டான்—, [நளன்,] எ - று.

தமயந்திக்குக் கோபத்தினல் புருவம் வளைந்து துடித்துக் கொண்டிருந்த தென்பது கருத்து. தமயந்தியின் முகத்தை நாட்டிய சாலையாகவும், கண்களைக் கூத்திகளாகவும், புருவம் வளைந்து துடிப்பதை அக்கூத்திகளின்மேல் கால்களை வளைத்து வைத்துப் பெண்கள் நாட்டியஞ் செய்வதாகவும் (சிலேடை யுதவியாக்கொண்டு உருவகப்படுத்தினர். காஸ் - கொடி என்ப வற்றுட் சிலேடையைக் காண்க. (உக)

193. சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடி யைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினன்— வல்லை, முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த செழுநீல மாருச் சிவப்பு.

193. He placed upon his old gem-studded crown the small tender lotus-like feet (of Damayanti) which were adorned with ankle rings of noisy rattles; and immediately the inflamed eyes which blossomed upon her face, surrounded by dark blue tresses, lost their red hue.

(இ - ள்.) சில் அரி கிண்கிணி - ஒலியையுடைய பருக்கைக ளுள்ள சதங்கைகளை யணிந்த, மெல் தெய்வ மலர் - மெல்லிய தாமரைப்பூப்போன்ற, சீறடியை - சிறிய (அவளுடைய) பாதங் களை, தொல்லை மணி முடிமேல் - பழமையான தன் ரத்தின கிரீடத்தின்மேல், சூட்டினன் - அணிந்தான் (நளன்,) (அதனல்) முழு நீல கோதை - முழுதுங் கறுப்பான தலைமயிரையுடைய தமயந்தியின், முகத்தே - முகத்திலே, செழு நீலம் - செழிப் பான குவளைகள் [கண்களென்றபடி;] வல்லை - சீக்கிரத்தில், சிவப்பு - (கோபத்தினுலுண்டான) சிவந்தநிறம், மாரு - மாறி, மலர்ந்த - மலர்ந்தன, எ - று. (உஉ)

194. அங்கைவேல் மன்னன் அகலமெனுஞ் செறுவில் கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீர் - அங்கடைத்துக், காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர் விளைத்தாள், கோதையரின் மேலான கொம்பு.

194. Damayanti, who excelled all other women in beauty, ploughing with her breasts the field-like chest of the king who possessed beautiful weapons, and watering it with drops of perspiration enclosed by ridges of lust cultivated on it a harvest of concupicence.

(இ - ள்.) கோதையரின் மேலான கொம்பு - பெண்களுக்கெல்லாம் சிறந்தவளான பூங்கிளைக்கு ஒப்பாகிய தமயந்தி, அம் கை வேல் மன்னன் - அங்கையில் வேலேந்திய நளமகாராஜனுடைய, அகலம் எனும் செறுவில் - மார்பு என்கிற கழனியில், கொங்கை ஏர் பூட்டி - தனங்களாகிய ஏரை நடத்தி, குறு வியர் நீர் - சிறிய வியர்வை நீரை, அங்கு அடைத்து - அவ்விடத்துப்பாய்ச்சி, காதல் வரம்பு - ஆசையாகிய வரம்பை, ஒழுக்கி - சேர்ப்படுத்தி, காமம் பயிர் - காமமாகிய பயிரை, விளைத்தாள் - விளையச்செய்தாள், எ-று.

ஊடல் தீரவே தழுவினாள் என்பது கருத்து. (௧௯௪)

195. வேரி மழைத்துளிக்கு மேகக் கருங்கூந்தல
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான் — மூரித்,
(கூ) திரையேற மென்கிடங்கிற் சேலேற
வாளை, கரையேறுங் கங்கைக் கரை.

195. The maiden whose tresses of cloud-like blackness rained honey-drops, together with himself (*i. e.* Nala) went and saw the banks of the Ganges where the rise of the powerful waves impels the shell-fish into the soft hollows, and forces the valai to ascend to the shore.

(இ - ள்.) மூரி திரை - பெருமையான அலைகள், மெல் கிடங்கில் ஏற - மென்மையான அகழியில் ஏறும்போது, சேல் ஏற - கெண்டைமீன்கள் ஏற, வாளை - வாளைமீன்கள் கரை ஏறும் - கரையில் ஏறத்தக்க, கங்கை கரை - கங்கையாற்றங் கரையை (நளன்,) வேரி மழை - தேன்மழையை, துளிக்கும் - சொட்டும்படி செய்கின்ற, மேகம் கரு கூந்தல் - மேகம்போன்ற கரிய கூந்தலையுடைய, காரிகையும் - தமயந்தியும், தானும் —, போய் —, கண்ணுற்றான் - கண்டான், எ-று.

இருமன் கங்கை நீராடிய என்றது கங்கையின் அக்கரையில் கங்கையின் இக்கரை நகர்த்தி னருகிலுள்ளது. (௧௯௫)

196. சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி னறவேற்குங் குப்பியென — மாதரார் [ங்
ஐயுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினு
னையுற்ற வேற்றானை மன்.

196. The king who possessed armies with bright lances, arrived at the extensive groves where the maidens gaze doubtfully at the tender roll of the plantain leaf into which the juice of the Mango drops, mistaking it for a decanter of honey.

(இ - ள்.) வை உற்ற - கூர்மை பொருந்திய, வேல் தானை - ஆயுதமுள்ள சேனையையுடைய, மன் - நளன், சூதக்கனி ஊறல் ஏற்ற - மாம்பழங்களின் ரசத்தை ஏந்திக்கொண்டிருக்கிற, சுருள் வாழை - சுருளாயிருக்கிற வாழைக்குருத்துகளை, கோது இல் நறவு ஏற்கும் - குற்றமற்ற மதுவை ஏந்திக்கொண்டிருக்கிற, குப்பி என - குப்பிகளென்று, மாதரார் - ஸ்திரீகள், ஐயுற்று நோக்கும் - சந்தேகப்பட்டுப் பார்க்கின்ற, அகல் பொழில் - பெரியசோலையை, சென்று எய்தினன் - போய்ப் பொருந்தினன், எ - று.

குப்பியாவது ஓர்வகைக் கிண்ணம். (௧௬)

197. வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்
றோன்றி, வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா
டாளுடையான், நல்விளக்கே யெங்க ணகர்.

197. "O bright looking daughter of the king of Vidarpa, the glittering lights of which cast their rays up to the heavens! the extensive city before us, in which you see the flags waving on the terrace which reach as high up as the sky, is our capital."

(இ - ள்.) வான் தோன்றி - வானத்தில் காணப்பட்டு, வில் விளக்கே பூக்கும் - இரத்தின காந்திகளாகிய விளக்குகளே பூத்திருக்கப்பெற்ற, விதர்ப்ப நாடு - விதர்ப்ப தேசத்தை, ஆளுடையான் - ஆளுகின்றவனாகிய பீமராஜாவிடத் துண்டாகிய, நல் விளக்கே - நல்ல விளக்குப்போன்ற பெண்ணே, வான் தோய - வானத்திற் படியும்படி, நீண்டு - நீட்சியாகி, உயர்ந்த - மேலோங்கியிருக்கிற, மாடம் கொடி - மாளிகைகளின் கொடிச் சீலைகள், நுடங்க - அசைந்தாடும்படி, தோன்றும் - காணப்படுகின்ற, இத் தடம் பதிதான் - இந்தப் பெரிய இடந்தான், எங்கள் நகர் - எங்களுடைய பட்டணம் (என்று தமயந்திக்கு அரசன் உரைத்தான்.) எ - று. தான் - மற்று - அசைகள்.

வில் - இந்திரவில்லெனக்கொண்டு அதுபோல் பலநிறமான விளக்கென்னவுமாம். விளக்கு கூட்டின் காந்தியாலேனும் சுவர்களின் காந்திகளாலேனும் பலவண்ணமாம். வில் உமிழும் விளக்கெனல் சிறப்பின்லை. மாடங்கள் மிகவுயர்ந்திருப்பதுபற்றி வான்றோன்றி யென்றது; பூத்திருப்பவை நக்ஷத்திரங்களென மயங்கவேண்டாம், விளக்குகள்தாம் என ஏகாரங் கூறுகின்றது, (உசு)

198. பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுடன்,
ஆறிரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்,
கூறிரண்டாக் கொல்யானைக் கோ.

198. The king who possessed the killing elephants which ripped up into two parts the bodies of his enemies spent twelve years with his wife in rambling about among the large tanks, the fragrant groves, the beautiful water falls, and the artificial hills.

(இ - ள்.) அடையலரை - சத்துருக்களை, கூறு இரண்டு இரண்டு துண்டாக, கொல் - கொல்லுகின்ற, யானை - யானையையுடைய, கோ - நளமகாராஜன், தையலுடன் - தமயந்தியுடனே, பொய்கையும் - தடாகங்களும், வாசம் பொழிலும் - பரிமளமுள்ள தோட்டங்களும், எழில் அருவி - அழகுள்ள அருவிகள் பொருந்தின, செய் குன்றும் - கற்பித்த மலைகளும், ஆறும் - நதிகளும், திரிந்து - சஞ்சரித்து, ஆடி - நீராடி அல்லது விளையாடி, ஆறு இரண்டு - பன்னிரண்டாகிய, ஆண்டு எல்லை வருஷகாலத்தை, கழித்தான் - போக்கினான், எ - று.

கூறிரண்டாக் கொல் என்றது வீரத்தின் மேன்மையைக் குறிக்கின்றது. (உஎ)

199. கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப—நூலென்னத்
தோன்றாத நுண்மருங்கு றோன்றச் சுரிகுழலாள்;
ஈன்றாள் குழவி யிரண்டு.

199. The beautiful color of her body turning pale, the surface of her breasts assuming a dark hue, the roots of

her hair shining with a bluish gloss upon her head, and her slender waists which before were as invisible as thread, now swelling on the sight, she who possessed curly ringlets was delivered of twins.

(இ - ள்.) [இவ்வளவு காலத்துக்குப்பின்] கோல நிறம் விளர்ப்ப - அழகியநிறமானது வெளுத்துப்போகவும், கொங்கை முகம் கருக - முலைக்காம்புகள் கறுத்துப்போகவும், மயிர் கால் - மயிரின் ஒழுங்கு, நீல நிறம் எறிப்ப - நீலவர்ணத்தை வீசவும், நூல் என்ன - பஞ்சுநூல்போல், தோன்றாத - காணப் படாத, நுண் மருங்குல் - நுட்பமான இடையானது, தோன்ற - வெளிப்படக் காணும்படியாகவும் (கருவாய்த்திருந்து,) சுரி குழலாள் - வளைந்த அளகபாரத்தை யுடைய தமயந்தி, இரண்டு குழவி - இரண்டு குழந்தைகளை, ஈன்றாள் - பெற்றாள், எ - று. நின்று - அசை.

நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக மயிர்க்கால் நீலநிற மெறிப்ப நூலென்னத் தோன்றாத நுண்மருங்குல் தோன்ற, நின்று - இருந்து, எனவுங்கூட்டுக. இதனால் கருவாய்த்திருந்து என்பது அமையும், இவ்வெயெல்லாம் கருக்குறியாதலின். (௧௯௯)

200. ஆண்டிரண்டா றெல்லை, யளவுந் திரிந்தேயும்,
காண்டகைய வெங்கலியுங் காண்கிலான் — நீண்
டபுகழ்ச், செந்நெறியாற் பார்காத்த செங்கோ
னிலவேந்தன், தன்னெறியால் வேறோர் தவறு.

200. The cruel Kali, having closely pursued Nala in all his ways even for a space of twelve years, was unable to find a fault in the renowned and unstraying paths of the king, who ruled the earth with an upright sceptre.

(இ - ள்.) காண் தகைய - காணுந்திறனுள்ள, வெம் கலியும் - உக்கிரனை கலிபுருடனும், இரண்டு ஆறு ஆண்டு எல்லை அளவும் - பன்னிரண்டு வருஷமாகிய அளவையுடைய காலமெல் லாம், திரிந்தேயும் - (அவன் சென்றவிடத்தி லெல்லாம்) திரிந்து கொண்டிருந்தும், நீண்ட புகழ் செம் நெறியால் - வளர்ந்த புகழ்பெற்ற செவ்வையான ஒழுக்கத்தினால், பார் காத்த - பூமி யைக் காப்பாற்றின, செங்கோல் - செங்கோலையுடைய, நில வேந்தன் - நளமகாராஜனுடைய, நெறியால் - கிரமத்தினால்,

[வேறு ஓர் தவறு - நன்மைக்கு வேறாகிய ஓர் குற்றத்தையும், காண்கிலான் - காணமாட்டாமற்போனான், எ-று. தன் - அசை.

எல்லையளவும் என்னுமிடத்து உம்மை அக்காலத்தின் ஒவ்வொருகணமும் விடாமல் என்னும் பொருளைத் தருதலால் முற்றும்மை. மற்றிரண்டும் சிறப்பும்மை. செங்கோல் நிலவேந்தன் - செங்கோலுக்கு நிலமாகிய வேந்தன் எனவும் பொருள்படும். திரிந்தே என்னுமிடத்து ஏகாரம் - அசை, தேற்றம் என்னவுமாம். வேறோர் தவறு—இனிக்காட்டப்படும் தவறு தவிர மற்றொன்று என்று பொருள் கொள்ளவுந்தகும். தவறு—முதனிலைத் தொழிற்பெயர். (உகூ)

201. சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்
கண்டு, புந்தி மகிழப் புகுந்துகலி — சிந்தை
யெல்லாம், தன்வயமே யாக்கித் தமைய னுட
னிருந்தான், பொன்னசல மார்பற் புகைந்து.

201. When Nala was performing his evening ablutions of washing his feet-Kali seeing a dry spot, where the water had not touched the filth, became angry with Nala, whose breast resembled the golden mountain (Meru), and entering into him, with an exulting mind, became master of his dispositions, and then joined himself to his friend Putcaran.

(இ-ள்.) [இப்படி இருக்கையில் ஒருகால்] சந்தி செய - சந்தியாவந்தனஞ் செய்யும்பொருட்டு, தாள் விளக்க - பாதத்தைச் சுத்திசெய்யும்போது, தாளில் - பாதத்தில், மறு - அழுக்கை, கண்டு—, புந்தி மகிழ - மனங்களிக்க, புகுந்து - (அரசனிடத்தில்) பிரவேசித்து, கலி - கலியானவன், சிந்தையெல்லாம் - (அரசனுடைய) புத்தியையெல்லாம், தன் வயமே ஆக்கி - தன் சுவாதீனத்தி லிருக்கச்செய்து, பொன் அசலம் மார்பன் - பொன்மலையோடு ஒத்த மார்பையுடைய நளனை, புகைந்து - கோபித்து, தமையனுடன் - நளனுக்குத் தமையன் முறை கொண்டவனாய் ஓர் சிற்றரசுள்ளவனா யிருந்த புஷ்கரன் என்பவனோடு, இருந்தான் - அவனுக்குச் சகாயஞ் செய்யும்படி இருந்தான், எ-று. தான் - அசை.

"இயல்பின் விகாரமும்" என்கிற [உருபுபுணரியல் கசு-ம்] சூத்திரத்தினால் மார்பன் என்னும் உயர்திணைப்பெயர் ஈறு திரிந்தது. பொன்னசலம் - மேருமலை. செய—இது பயனைக் குறித்தமையால் எதிர்காலத்தது. விளக்க—இது பின்வினைக்குக் காலக்குறியானதினால். நிகழ்காலத்தது. (நூo)

202. நாராய ணாய நமவென் றவனடியிற், சேராரை
வெந்துயரஞ் சேர்ந்தாற்போல் — பாராளும்,
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்
மைநெறி, கற்றவனைச் சேர்ந்தான் கலி.

202. Just as great evil will happen to those who do not approach Vishnu in adoration, so Kali entered into Nala who ruled the earth, who resembled Vishnu the husband of the goddess of the earth, and who was a follower of truth.

(இ - ள்.) நாராயணாய நம என்று - நாராயணனுக்கு நமஸ்காரம் என்கிற பொருளுள்ள மந்திரத்தைச்சொல்லி, அவன் அடியில் சேராரை - அந்தக்கடவுளின் பாதங்களிற் சேராதவர்களை, வெம் துயரம் சேர்ந்தால்போல் - உக்கிரமான சம்சார துக்கஞ் சேர்வதுபோல், பார் ஆளும் கொற்றவனை - பூமியை ஆளும்படியான வல்லமையுள்ளவனும், பார் மடந்தை கோமானை - பூதேவியின் கணவனாகிய திருமால்போன்றவனும், வாய்மைநெறி கற்றவனை - சத்தியமாகிய தருமவழிகளைக் கற்றவனுமாகிய நளனை, கலி - கலிபுருடன், சேர்ந்தான் —, எ-று.

பார்மடந்தை - உரோகிணி நட்சத்திரமாகிய பெண் என்று கொண்டு சந்திரனைப்போன்றவன் என்றும் உரைக்கலாம். பார் மடந்தை கோமான்—உவமையாகுபெயர். நாராயணாய நம என்பதின் விசேடப்பொருள்களை வைஷ்ணவநூல்களிற் பரக்கக்காணலாம். கொற்றவனை, கோமானை, கற்றவனை, என்பவை ஒருபொருளை நாடிவந்த பெயர்களாதலின் "ஒருபொருண்மேற் பல" என்ற [பொதுவியலின் சுக-ம்] சூத்திரத்தினால் ஒரு வினைகொண்டு முடிந்தன. (நூக)

[புட்கரனென்கிறவனோடு கலி இவ்வாறு சொல்லினான்.]

203. நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றாத்,
தன்னரசுவாங்கித் தருகின்றேன் - மன்னவனே

போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

203. Kali, who was a fit person for the depths of Hell, addressing Putcaran, said :—"O king, come with me, and gamble at dice with Nala, and by deceitful means I shall cause you to win his kingdom."

(இ-ள்.) புலை நரகுக்கு - நீசமாகிய நரகத்துக்கு, ஏதுவாய் நின்றான் - காரணமாக நின்ற கலி, நல் நெறி இல் - நல்வழியில்லாத, சூதால் - சூதாட்டத்தினால், களவை —, களவு இயற்றி - வஞ்சனைசெய்து, அன்னோன் அரசு - அவனுடைய இராச்சியத்தை, வாங்கி தருகின்றேன் - பறித்துக் கொடுக்கின்றேன், மன்னவனே - அரசனே, என்னுடனே போதுவாய் - என்னோடுவா, என்றான் எடுத்து - என்று எடுத்துச் சொன்னான், எ-று.

இல் சூது — (மெய்யீறு - ௩௦) சூத்திரத்தினால் இயல்பாயிற்று. தருகின்றேன் — தெளிவுபற்றி எதிர்காலம் நிகழ்காலமாயிற்று (பொது - ௩௩). (௩௪)

204. புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்கும்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு — பொன்னு
ரைத்த கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயி
னான் கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு.

204. Putcaran, who ruled the kingdom where the hoofs of the young buffaloes, as they tread on the pollen which falls from the beautiful flowers of the Punnai tree, resemble the stone on which gold is tested, mounted a furious bull and went to play at dice (with Nala).

(இ-ள்.) புன்னை நறு மலரின் - புன்னைமரத்தின் வாசனை பொருந்திய புட்பங்களினுடைய, பூந்தாது இடை - அழகிய மகரந்தப் பொடிகளினடுவே, ஒதுங்கும் - ஒதுங்கிப்போகின்ற, கன்னி - அழகான, இள மேதி - இளமையான எருமைகளின், கால் குளம்பு - பாதங்களின் குளம்புகள், பொன் உரைத்த - பொன்னை உரைக்கப்பெற்ற, கல் ஏய்க்கும் - உரைகல்லை ஒத்திருக்கின்ற, நாடன் - நாட்டையுடையவனாகிய புட்கரன், கொல் ஏற்றின் மேல் - கொல்லுந்திறமுள்ள எருதின்மேல்,

சூதிக்கொண்டு — ஏவுறு ஆடல் சூதாடப்போனவனுடு பேயியினன்- போனான், எ - று.

பாரதக்கதையில் இவன் ஒரு சிற்றரசனாகையால் புன்னாடன் என்றார். கலியே யெருதாக வந்தானென்று பாரதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. கன்னி இளை என்பவைகளை ஒருபொருட் பன்மொழியாக்கொண்டு முரைக்கலாம்.

கன்னி — இளமை அழகுகளை யுணர்த்துமாயின் உரிச்சொல். இளம்பெண் முதலியவைகளை யுணர்த்தும்போது பெயர்ச்சொல். ()

205. வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையேறிச் — செங்கதிர்ப்
பைம்பொன் னொழியப் போதும் புறம்பணை
சூழ் நன்னாடு, பின்னொழியப் போந்தான் பெயர்ந்து.

205. Putcaran, mounted on the fiery-eyed bull, left behind him his beautiful country which is surrounded by fields covered over with the bright gold cast upon them by the overflowing of the sluices, which are filled with the waters of the Ganges.

(இ - ள்.) வெம் கண் - உக்கிரமான கண்களையும், சினம் - கோபத்தையுமுடைய, விடையின்மேல் ஏறி - எருதின்மேலே ஏறி, கங்கை திரை நீர் - கங்காநதியின் அலைகளின் தண்ணீரானது, கால் ஏறி - வாய்க்கால்களில் ஏறி, கரை ஏறி - கரை புரண்டு, செம் கதிர் - சிவந்த காந்தியுள்ள, பைம்பொன் ஒழிய - பசும் பொன் தவிர, போதும் - ஓடுகின்ற, புறம்பணை சூழ் நல் நாடு - புறத்து வயல்கள் சூழ்ந்த நல்ல தேசமானது, பின் ஒழிய - பின்புறமா நீங்கியிருக்கும்படி, பெயர்ந்து - புறப்பட்டு, போந்தான் - போனான், எ - று.

காலேறி - காற்றுவீசுவதினால் என்றுமாம். செங்கதிர்ப் பைம்பொன் - பசும்பொன்போன்ற செவ்விய நெற்கதிர்கள்; அல்லது - செவ்விய நெற்கதிர்களாகிய பசும்பொன், நெற்கதிர்கள் தவிர மிஞ்சியவைகளைத் திரட்டிக்கொண்டு செல்லுகின்ற வெள்ளமென்பது கருத்து.

207. Nala, who possessed the good country in which the valai fish leaping into the toddy on the high Cocoa-nut trees, so as to make it fill over; and then after bathing in it falls down again, disturbing the fields, addressing Putcaran, said: "If you are willing to play at dice, let us play."

(இ-ள்.) வான் தோய் - வானத்திற் படிந்திருக்கின்ற, மடல் தெங்கின் - மடல்களையுடைய தென்னைமரங்களினது, வான் தேறல் - அதிகமான கள்ளை, தேக்கி - தேங்கச்செய்து, மீது ஆடி - அதன்மேல் வீழ்ந்து குளித்து, வயல் வீழ்ந்து—, வாளை - வாளைமீன்கள், உழக்கும் - (பயிரை) அலைக்கின்ற, நல் நாடன் - நல்ல நாட்டையுடைய நளன், துணிந்து - நிச்சயித்து, இது மெய்ம்மையே ஆயின் - நீ இப்படிச்சொல்வது மெய்யேயானால், ஏன்றோம் - ஏற்றுக்கொண்டோம் [அங்கீகரித்தோம் என்றபடி], எம்மோடு சூது ஆட - நம்மோடு சூதினை ஆடக்கடவாய், என்றான்—, எ - று.

ஆடுக என்றது ஆய [illegible] கு; அல்லது அகரவிகுதியும் வியங்கோளுக்கு வ [illegible] ள்க. தான் - அசை. ஏன்றோம்—ஏல் - பகுதி, இ [illegible] றகரமாகி ஏற்றோம், என வருவதுமன்றி மெலிந்து இப்படியும் வரும். (ருசு)

208. காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழி-
தல், ஈதன் மறுத்த லிவைகண்டாய்—போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

208. "O king of the beautiful country, in which the pregnant turtles abide in flowers! The characteristics of the unvirtuous are, excessive lust, gambling, drinking, lying, and preventing of the exercise of charity.

(இ-ள்.) [அப்போது மந்திரி *முதலானோர் சொல்லுகின்றனர்.] போதில் - தாமரை முதலிய பூவில், சினை ஆமை வைகும் - கருவுற்ற ஆமைகள் வாசஞ்செய்கிற, திரு நாடா - சிறப்பான நாட்டையுடையவனே, காதல் - (பெண்மேல் விசேஷ) மோகம், கவறு ஆடல் - சூதாடுதல், கள் உண்டல் - மதுபானஞ் செய்தல், பொய் மொழிதல் - பொய் சொல்லுதல், ஈதல் மறுத்தல் - (பிறர்) கொடுப்பதைத் தடுத்தல், இவை - ஆகிய இக்காரி

மைகள், செம்மைசினையாமை - தருமத்தைச்சிந்தியாமையை, பூண்டார் - அடைந்தவர்களுடைய, நெறி - ஒழுக்கமாம், கண்டாய்—, எ - று.

இங்கு செவ்வெண்ணின்தொகை விகாரத்தால் தொக்கது. சினையாமை - ஆமைக்குட்டிகள் என்னலுமாம். (௯௭)

209. அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—
மறத்தையே, பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்
சூதை மிக்கோர்கள், தீண்டுவரோ வென்றார்
தெரிந்து.

209. As gambling (at dice) uproots virtue, sends people to the worst of Hells, begets a hard heart, prevents mercy, and causes anger to beget enmity, will the great indulge themselves in deceitful dice?" Thus spake the prince's ministers after deliberation.

(இ - ள்.) [சூது] அறத்தை - தருமத்தை, வேர் - வேரிலே, கல்லும் - பெயர்க்கும், அரு நரகில் - அருமையான நரகத்தில், சேர்க்கும் - சேரச்செய்யும், திறத்தையே கொண்டு - வலிமையையே பிரதானமாகவைத்துக்கொண்டு, அருளை - இரக்கத்தை, தேய்க்கும் - நாசப்படுத்தும், மறத்தையே - கோபத்தையே, பூண்டு - அடைந்து, விரோதம் செய்யும் - பகையை யுண்டாக்கும், பொய் சூதை - (இப்படிப்பட்ட) வீணானசூதை, மிக்கோர்கள் - மேலானவர், தெரிந்து - அறிந்து, தீண்டுவரோ - தொடுவார்களோ, என்றார் - என்று சொன்னார்கள், எ - று.

கல்லும் என்பது முதலியவற்றைப் பெயரெச்சமாகக் கொண்டு சூதுக்கு விசேடணமாக்கி ஒரு முடிபா யுரைக்கலாமெனினும் கருதியதின் அப்பிரதானம் ஆகும் என்பது பற்றி இங்ஙனம் உரைத்தனென அறிக. (௯௮)

210. உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

210. Gambling destroys brightness, overthrows the greatness arising from truth, wastes the wealth that may

be given in charity, destroys every noble quality and prevents the love of friends. The evils arising from gambling are not a few. Will the great therefore, gamble at dice?

(இ - ள்.) [சூது] உரு அழிக்கும் - பொலிவைக் கெடுக்கும், உண்மை உயர்வு அழிக்கும் - சத்தியத்தின் மேன்மையைப் போக்கும், வண்மை திரு - ஈகைச்செல்வத்தை, அழிக்கும்—, நாளும் சிதைக்கும் - கவுரவத்தை அழிக்கும், மருவும் ஒருவரோடு - சிநேகிக்கும் ஒருவருடனே, அன்பு - பிரியத்தை, அழிக்கும்—, ஒன்று அல்ல - (சூதால் வருங்கேடு) ஒன்றேயன்று, (இப்படிப்பட்ட பலவுமாம் ஆதலால்,) தக்கோர் - யோக்கியர், சூது - சூதை, புரிந்து - விரும்பி, பொருவரோ - ஆடுவார்களோ [ஆடமாட்டார்கள்,] எ - று.

பொருதல் - யுத்தஞ்செய்தல். சூதாட்டமும் அப்படிப்பட்டதாதலால் பொருவரோ என்றார். திருவழிக்கும் என்பதில் வழிக்கும் எனப்பிரித்து வழித்துப்போடும் என்றும் உரைக்கலாம். (௩௯)

211. ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
நேயம்பிடித்தாரு நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
வடித்தாரின் னூலோர் வழக்கு.

211. What do those say who are learned in the Shastras written by studious and clear rishis? Do they not say that gamblers at dice and those who place their affections in ruinous harlots, are those only who have deceitful in their minds?

(இ - ள்.) ஆயம் பிடித்தாரும் - பாச்சிகையைக் கைக்கொண்டவர்களும், அல்லல் - துன்பமுள்ள, பொதுமகளிர் நேயம் - வேசிகளுடைய சிநேகத்தை, பிடித்தாரும்—, நெஞ்சிடை - மனதில், மாயம் - வஞ்சனையை, பிடித்தாரின் - கொண்டவர்களைக் காட்டிலும், வேறு அல்லர் - வேறாகமாட்டார், என்று உரைப்பது அன்றே - என்று சொல்லுகிறதல்லவா, வடித்தார் - தீமைநீக்கி நன்மையெடுத்த முனிவர்களுடைய, (இன் - இன்னியையான்) நூலோர் - சாஸ்திரங்களைக் கற்றவர்க

213. Putcaran, addressing Nala, said:—"O Nala, who possesse'st the country in which the ploughmen drive, with broken pieces of sugarcane, the buffaloes on the river bank, on which lie scattered priceless brilliant pearls! If you have agreed to play at this wicked game of dice what is to be your wager?

(இ - ள்.) [இப்படி நளன் துணிந்திருக்கையில் அவனைநோக்கிப் புட்கரன்,] நிறை இல் - விலையில்லாத, கதிர் முத்தம் - ஒளியுள்ள முத்துக்களை, சிந்தும் - உதிர்க்கிற, துறையில் - நீர்த் துறைகளில், கரும்பு ஒடியா - கரும்பங்கழியை யொடித்து, மள்ளர் - திண்ணியர், கடா - எருமைக்கடாக்களை, அடிக்கும் - அடித்து ஓட்டுகிற, நாடா - நாடுடையவனே, நிறையில் - சற்குணமில்லாத, கவறு ஆடல் - சொக்கட்டானாட்டத்தை, நீ—, நினைந்தாயாகில் - மனங்கொண்டிருந்தால், இப்போது—, பொரும்படி - சூது ஆடும்படியான, (பணயம்) யாது என்றான் - எது என்று வினவினான், எ-று.

இங்கு படியென்பது விதத்துக்கு வராமல் அதனையுடையதற்கு வந்ததெனக் கொள்க. (சஉ)

214. விட்டொளிர்வில் வீசி விளங்குமணிப் பூணா
ரம்; ஒட்டினே னுன்பணைய மோதென்ன — மட்
டவிழ்தார், மல்லேற்ற தோளானும் வான்ப
ணைய மாகத்தன், கொல்லேற்றை வைத்தான்
குறித்து.

214. Nala replied. "I have staked my necklace of jewelled rubies which emit bright and twinkling rays; what is your wager? To which Putcaran whose shoulders strong in wrestling, were adorned with fragrant garlands, stated as his great wager, his murderous bull.

(இ - ள்.) [புட்கரனை நோக்கி நளன் கூறியது,] விட்டு - விலகி, ஒளிர் வில் வீசி - பிரகாசிக்குங் காந்தியை வியாபிக்கச் செய்து, விளங்கும் - சொலிக்கின்ற, மணி - இரத்தினங்களாலாகிய, பூண் ஆரம் - பூணத்தக்க மணிமாலையை, ஒட்டினேன் - பணயமாகவைத்தேன், உன் பணயம் ஓது என்ன - நீ வைக்கும் பந்தயப்பொருளைச் சொல் என்றுவினவ, மட்டு அவிழ் - வாசனை வீசப்பெற்ற, தார் - மாலையணிந்த, மல்

216. வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்தபணைய முரையென்ன—வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறுநூ றாயிரமும்
வேறாகத் தோற்றானவ் வேந்து.

216. Putcaran addressing Nala said, "I have won from you your necklace of jewelled rubies. What will you stake for the next game? And Nala thus lost to him innumerable treasure.

(இ-ள்.) வைத்த - (பந்தயமாக) வைத்த, மணியாரம் - இரத்தின மாலையை, வென்றேன் - ஜயித்துக்கொண்டேன், மறுபலகைக்கு - மற்றொரு ஆட்டத்திற்கு, ஒத்த - பொருந்தின, பணையம் -, உரை - சொல்லு, என்ன - (புட்கரன்) சொல்ல, அவ் வேந்து - அந்த நளமகாராஜன், வேறாக - வேறு வேறாக, வைத்த - (பணயமாக) நிறுத்தின, நிதி - திரவியமாகிய, நூறாயிரத்து - நூறாயிரத்தையும், இரட்டிநூறு நூறாயிரமும் - இரட்டித்த அனேக லக்ஷங்களையும், தோற்றான் - தோற்றுப் போனான், எ - று.

பலகை - சொக்கட்டான்பலகை, ஆட்டத்துக்கு ஆகுபெயராயிற்று. இரட்டி - இரட்டுதலையுடையது அல்லது வினைத்தொகையாகிய இரட்டித்த என்பதுமாம். (சரு)

217. பல்லா யிரம்பரியும் பத்துநூ றாயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்—வில்லா
ளாட்கள், முன்றோற்று வானின் முகிறோற்கு
மால்யானை, பின்றோற்றுத் தோற்றான் பிடி.

217. After losing many thousands of horses, and a million of jewelled chariots of fame; Nala lost his army of archers; then his male - elephants superior even to the clouds in the heavens and lastly his female elephants.

(இ-ள்.) பல்லாயிரம் - அநேக ஆயிரம், பரியும் - குதிரைகளும், பத்து நூறாயிரத்து - பத்து லக்ஷம், சொல் ஆர் - புகழ் நிறைந்த, மணி தேரும் - இரத்தின ரதங்களும், தோற்றதன்பின் -, வில் ஆட்கள் - வில்வீரராகிய காலாட்களை, முன்

219. கற்பின் மகளிர்பா னின்றுந் தன்மைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல் — நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தா டிரு.

219. Lakshmi left the virtuous and upright Nala and joined the base Putcaran, as if one deserted the chaste damsels and joined the harlots who sold themselves by deceit.

(இ - ள்.) கற்பின் - பதிவிரதாகுணமுள்ள, மகளிர்பால் நின்றும் - பெண்களிடத்திலிருந்து [அவர்களை விட்டென்கிற படி,] தமை - தம்மை, கவட்டின் - கபடத்தினால், விற்கும் - பணங்கொடுப்பவர்க்கு விற்றதுபோல் காட்டுகின்ற, மகளிர் பால் .- வேசிப்பெண்களிடத்தில், மீண்டாற்போல் - திரும்பி யதுபோலே, நிற்கும் நெறியானை - நிலைபெற்ற நல்லொழுக்க முள்ளவனும், மெய்ம்மைவாய் நின்றானை - சத்தியத்திலிருந் தவனுமாகிய நளனை, நீங்கி - விட்டு, திரு - இலக்குமி, சிறி யானை - குணங்களில் தாழ்ந்தவனாகிய புட்கரனை, சேர்ந்தாள் - அடைந்தாள், எ - று.

இலக்குமி என்பது ஈண்டு செல்வத்தை; அது கற்புடையா ரிடத்திருப்பது நீதி. கலை யல்குல் விற்கு மகளிர் எனவும் பாட முண்டு; அப்போது மேகலாபரணந்தரித்த அல்குலை விற்கு மகளிர் எனப்பொருள் கொள்க. (சஅ)

220. மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனால் — நனைக்
கும் குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர்
நாடா, இவளைப் பணையந்தா வின்று.

220. Putcaran said: "O Nala, who possessest the fertile country, in which the heads of the pregnant conchs become moistened in the honey which falls from the blue lotus, whose thick green stalk springs up from the depths of the water! should not a wife relieve the troubles of her husband? Therefore, stake Damayanti as your next wager."

(இ - ள்.) [இப்படி யெல்லாந் தோற்றபின் புட்கரன் சொல் லியது,] சினை சங்கின் - கருவுற்றிருக்கிற சங்குப் பூச்சிகளின்,

222. மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென் மலரைப், புன்காகங் கொள்ளத்தான் போனாற் போல்—தன்கால், பொடியாடத் தேவியொடும் போயினு னன்றே, கொடியானுக் கப்பார் கொடுத்து.

222. Just as the soft-footed and downy-feathered swan resigns to the mean crow, the soft lotus flower on which she sat with pride, so Nala gave up to the cruel Putcaran, his kingdom; and in company with Damayanti walked away, the dust cleaving to his feet.

(இ-ள்.) மெல் கால் - மென்மையான பாதங்களையும், சிறை - சிறகுகளையு முடைத்தான, அன்னம் - அம்சபக்ஷியானது, வீற்றிருந்த - (தான்) பெருமையோடு உட்கார்ந்திருந்த, மெல் மலரை - மெல்லிய தாமரைப்பூவை, புன் காகம் - அற்பத் தன்மையுள்ள காக்கை, கொள்ள - கைப்பற்றிக்கொள்ள, தான் - அது, போனால் போல் - போய்விட்டதைப்போல், அப்பார் - அந்த இராச்சியத்தை, கொடியானுக்கு - கொடியவனான புட்கரனுக்கு, கொடுத்து—, தன் கால் - தன் பாதம், பொடி ஆட - தூளிலேபடியும்படி, தேவியொடு - மனைவியோடுகூட, அன்றே போயினன் - அன்றைக்கே போனான் (நளன்), எ-று.

உம்—அசை. இப்படியே பிறவிடத்தும் பொருளில்லாத உம்மையை அசையெனக் கொள்க. (௫௬)

223. கடப்பா ரெவரே கடுவினையை வீமன், மடப் பாவை தன்னுடனே மன்னன் — நடப்பான் வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த தனைத்தே விதியின் வலி.

223. The powers of Fate, having caused Nala to go to the wilderness in company with Damayanti, the daughter of Bhima, seemed to surround them with deceit. Therefore, no one can escape the evil caused by cruel Fate.

(இ-ள்.) கடு வினையை - கடுமையான விதியை, கடப்பார் எவர் - தாண்டிச்செல்ல வல்லவர் யாவர்? விதியின் வலி - (தீவினையின்) வல்லமையானது, வீமன் மட பாவை தன்

னுடனே - தமயந்தியுடனே, மன்னன் - நளமகாராஜன், கூட்டுநன் - நடப்பவனாகி, வனத்தே செல பணித்து - காட்டிற் போம்படி செய்து, மாயத்தால் - வஞ்சனையினால், சூழ்ந்தது அனைத்தே - சுற்றிக்கொண்டதுபோ லிருந்தது, எ-று.

விதி வேண்டுமென்று நளனை இப்படிச்செய்ய வஞ்சனையால் ஆலோசித்ததே யல்லது, நளன் அப்படியாகுந் தன்மையனல்லன் என்று குறித்து விதியைக் கடக்க யார் திறம் என்று ஸ்தாபித்தார். ஏ - அசை. (௫௨)

224. ஆருயிரின் றாயே யறத்தின் பெருந்தவமே,
பேரருளின் கண்ணே பெருமானே - பாரி
டத்தைத், யார்காக்கப் போவதுநீ யரசென்றார்
தங்கண்ணின், நீர்வார்த்துக் காலகழுவாநின் றூர்.

224. The inhabitants of the town of Mahavindum, washing the dust of their feet with tears, addressing Nala, said:— "O thou, that art a mother to our precious lives, that resemblest the great penance done by virtue, that art like the eye of tender mercy, O king; Whom have you appointed to protect this town that you leave it and go away?"

(இ - ள்.) [அப்பொழுது அந்நகரத்தார் அரசனை நோக்கி] தம் கண்ணின் நீர் வார்த்து - தம் கண்ணீர்களை உகுத்து, கால் கழுவாநின்று - பாதங்களை யலம்பிக்கொண்டு, ஆர் உயிரின் தாயே - அருமையான உயிர்களினுடைய தாய்போன்றவனே, அறத்தின் பெரு தவமே - தருமத்தினது பெரிய தவத்தோடொத்தவனே, பேர் அருளின் கண்ணே - பெரிய இரக்கத்தினது கண்ணுக்குச் சமானமானவனே, பெருமானே - அதிபதியே, பார் இடத்தை - (இந்தப்) பூமியின் இடத்தை, [தேசத்தை யென்கிறபடி,] யார் காக்க - எவன் இரக்ஷிக்கவிட்டு, நீ அரசு ஆங்கு - அவ்விடத்தில், போவது - போகிறது, என்றார் - என்று சொன்னார், எ-று.

போவது தொழிற்பெயர் எழுவாய்; ஐயன் முதலானது என்பது தோன்றும்பயனிலை.

துக்கத்தினால் தலையிறங்கி நின்றதனால் காலின்மேல் கண்ணீர் ஒழுகிற்று. (௫௩)

225. வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.

225. "Though the sea should overflow its bank, and the Vedas depart from their own rules, though all the inhabitants of the earth should depart from justice, will the sceptered monarch swerve from the right path? Will they violate the truth in any one instance?"

(இ-ள்.) [அவர்கள் தங்களுக்குள் சொல்லிக்கொள்வது] வேலை கரை இழந்தால் - சமுத்திரம் கரையைக் கடந்தாலும், வேதம் நெறி பிறழ்ந்தால் - வேதமானது சத்தியகதியினின்றும் மாறினாலும், ஞாலம் முழுதும் நடு இழந்தால் - பூமியெல்லாம் நடுநிலைமையை விட்டாலும், செங்கோலவர் - செவ்வையான துரைத்தனமுடையவர், சீலம் ஒழிவரோ - நல்லொழுக்கத்தினின்றும் நீங்குவார்களோ, செம்மை உரை - செவ்வையாகிய சொற்கள், திறம்பா செய்கை - மாறாத செய்கை, அழிவரோ - அழியப்பெறுவார்களோ, (சத்தியந் தப்புவார்களோ என்பதாம்), எ - று.

வினையெச்சங்கள் செவ்வெண். (௫௪)

226. வடியேறு கூரிலைவேன் மன்னவோ வன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை யெழுந்தருள்க வென்றுரைத்
தார் வென்றிருந்த தோளான்றாள் வீழ்ந்து.

226. Worshiping at the feet of Nala, who possessed victorious shoulders, they said—"O king, who passessest a leaf-like lance, sharp and powerful as a thunder bolt! to oblige us, your servants, remain in this town, adorned with flags, and go on the morrow"

(இ-ள்.) [மேலும் அவர்கள்] வென்றிருந்த-ஜயம்வீற்றிருந்த, தோளான் - புஜமுள்ள நளனுடைய, தாள் வீழ்ந்து - பாதத்தில் வீழ்ந்து, வடி - வடித்த, ஏறு - இடிபோன்ற, கூர் -

சூழ்மழையானை, இலை - இலையொத்த, வேல் - வேலாயுதமுடைய, [மன்னவோ - மன்னனே,] உன்றன் அடியேங்கட்கு - உன் அடியார்களாகிய எங்களுக்கு, ஆதரவு தீர - ஆசை தீரும்படி, கொடிநகரில் - கொடிகள் விளங்கும் இப்பட்டணத்தில், இன்று இருந்து - இன்றைக் கிருந்து, நாளை எழுந்தருள்க - நாளைக்குப் போகவேண்டும், என்று உரைத்தார் - என்று பிரார்த்தித்துச் சொன்னார்கள், எ - று.

மன்னவோ — புலம்பலில் ஓகாரம் விளியுருபாய் வந்தது. வென்றி - வெற்றி, ஈறுதொக்கது; வென்று வினையெச்சமாகக் கொண்டு ஜயித்திருந்த என்று பொருள்கூறின் பிற்காலத்து அத்திறமையில்லையெனத் தோன்றிச் சிறப்பில்லதாம். வென்று என்வே ஒருபெயராச் சிலர் கூறுகின்றனர். கொடு இந்கரில் என்று பிரித்து, கொடுமையான இந்தப்பட்டணத்தில் என்றும் உரைக்கலாம். (ருரு)

227\. மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணி னீர்நோக்கி—இன்றிங்
கிருத்துமோ வென்ரு னிளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனதில் வைத்து.

227\. Addressing the fragrant and soft-tressed Damayanti, Nala asked:—"Shall we remain here to-day?"—Was this because he saw the tears of the people who wept in the great town? Or was it because he contemplated the suffering of his wife whose speech was like the prattling of an infant?

(இ - ள்.) மா நகர்வாய் நின்று - பெரிய பட்டணத்தின்கண் இருந்து, உருகுவார் - மனந்தளர்ந்து வருந்துகிறவர்களுடைய, கண்ணின் நீர் நோக்கியோ - கண்ணீரைப்பார்த்தோ, இளம் குதலை வாயாள் - இளமையான மழலைச்சொல்லை வாயிலுடைய மனைவியினது, வருத்தம் - வருத்தத்தை, தன் மனத்தில் வைத்தோ - தன் இருதயத்தில் எண்ணியோ (நளன்), மன்றல் - கலியாணஞ்செய்துகொண்ட, இளம் கோதை - இளம்பெண்ணான தமயந்தியின், முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, இன்று - இன்றைக்கு, இங்கு - இந்நகரத்திலே, இருத்துமோ - இருப்போமா, என்றான்—, எ - று.

இருத்தும் — தன்மைப்பன்மை யுளப்பாட்டு வினைமுற்று; தும் விகுதி எதிர்காலங் காட்டியது [பதவியல் ௬அ - ம் சூ.] ஓகாரம் வினா, 'வருத்தமோ' என்னும் ஓகாரத்தை நோக்கி, வைத்த எண்ணும்மைகளிற் கூட்டினோம்; இது ஐயப்பொருள்.

228. வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனும்,
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று —
தண்டா, முரசறைவா யாங்கென்றான் முன்னே
முனிந்தாங், கரசறியா வேந்த னழன்று.

228. Putcaran, who knew not how to sway the sceptre, becoming enraged as before, addressing one of his followers said :— "Let it be proclaimed by continued beating of the drums that those shall be put to death who shew attention to Nala, who is adorned with a garland on which the bees swarm.

(இ - ள்.) [இப்படி யிருக்கையில்] அரசு அறியா வேந்தன்- அரைசதனத்தை அறியாத புட்கரராசன், முன்னே முனிந்தாங்கு அழன்று - முன்பு கோபித்ததுபோலக் கோபித்து, மா நகரில் - இந்தப் பெருநகரத்தில், வண்டு ஆடும் தார்-வண்டுகள் களிப்போடு அசைந்தாடிக்கொண் டிருக்கப்பெற்ற பூமாலை தரித்த, நளனை —, யாரேனும் கொண்டாடினார் தம்மை - யாராகிலும் உபசரித்து ஆதரித்தவர்களை, கொல் என்று - நீ கொன்றுபோடு என்று (ஒருவனுக்குக் கட்டளையிட்டு,) தண்டா முரசு அறைவாய் - ஓயாத பேரிகையை அடித்து ஓசைப்படுத்து, என்றான் —, எ - று.

ஆங்கு - அசை. முன்னே என்றது சூதாடும்போது; ஆட்டத்தில் ஆவேசங்கொண்டு கோபித்தல் இயல்பு. கொண்டாடினா லவரைக் கொல்லென்று பாடமோதின் மிகநேர். வண்டாடுந் தார்முதலிய விசேஷணங்கள் முன்பிருந்த நிலைநோக்கி.

229. அறையும் பறையரவங் கேட்டழிந்து நைந்து
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி — முறு
வலியா, இந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த
தென வுரைத்தான், மன்னகற்றுங் கூரிலைவேன்
மன்.

229. Nala, who possessed a sharp leaf-like lance with which he destroyed his royal foes, becoming depressed, as he listened with sorrow to the beating of the drums, gazed at Damayanti, whose forehead resembled the crescent moon, and smiling at her simplicity, said:—"It is on my account that troubles have come upon this city."

(இ - ள்.) மின் அகற்றும் - பகைமன்னர் நீக்கும்படியான, கூர் இலை வேல் நளன் - கூர்மையான இலைபோன்ற வேலைத் தரித்த நளமகாராசன், அறையும் பறை அரவம் - அடிக்கின்ற வாத்தியத்தின் ஓசையை, கேட்டு,—அழிந்து - மனநொந்து, நைந்து - சோர்ந்து, பிறைநுதலாள் - தமயந்தியின், பேதைமையை - நுட்பம் அறியாததன்மையை, நோக்கி,— முறுவலியா - நகைத்து, இந்நகர்க்கு - இப்பட்டணத்துக்கு, ஈது - இந்தத்துன்பம், என் பொருட்டு ஆ - என் நிமித்தமாக, வந்தது என - உண்டாயிற்றென்று, உரைத்தான் - சொல்லினன், எ - று. (௬௯)

230. தன்வாயின் மென்மொழியே தாங்கினனோ னோங்கு
நகர்ப், பொன்வாயில் பின்னாகப் போயினான்—
முன்னாளில், பூமகளைப் பாரினொடும் புல்வி
னான் றன்மகனைக், கோமகளைத் தேவியொடுங்
கொண்டு.

230. Nala, who once possessed riches and a kingdom, taking his son and his danghter with his wife, and speaking in gentle tone, left behind him the golden gate of that fertile city.

(இ - ள்.) முன் நாளில்-இதற்கு முந்தியகாலத்தில், பூமகளை - இலக்குமியை, பாரினொடும் புல்வினான் - பூமிதேவியோடு அணைந்தவனாகிய நளமகாராஜன், [செல்வமும் இராச்சியமும் பெற்றவனென்றபடி,] தன் மகனை - தன் குமாரனையும், கோமகளை - தன் புத்திரியாகிய ராஜ கன்னிகையையும், தேவியொடு - மனைவியான தமயந்தியோடு, கொண்டு - இட்டுக்கொண்டு, தன் வாயில் - தன்னுடைய வாக்கிலே, மென் மொழியே - மெதுவான சொல்லையே, தாங்கினான் - உடையவனாகி, ஓங்கும் நகர் - உயர்ந்த பட்டணத்தின், பொன் வாயில் -

பொன்றும்செய்தி வாசலானது, மின் ஆக - பின்புறத்தது ஆகும்படி, போயினன், — எ - று.

பூமகளைப் பாரினோடும் புல்லினன்-திருமால் என்றுகொண்டு அவன் முன்னாளில் அதாவது ராமாவதாரத்தில் சென்றதுபோ லென்பது குறிப்பு.

மனைவியையும் மக்களையும் இட்டுக்கொண்டு யாரிடத்தும் கடின மான சொல்லில்லாமல் நற்பேச்சையே பேசிக்கொண்டு நகரை விட்டுத் திரும்பிநோக்காது சென்றானென்பது கருத்து. (ருக)

231. கொற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான
முரசறைந்து, வெற்றியொடு புட்கரனும் வீற்றி
ருப்ப—முற்றும், இழவு படுமாறுபோ லில்லங்க
டோறும், குழவிபா லுண்டிலவே கொண்டு.

231. While Putcaran being elated with victory, commanded the drums to be beaten, and a proclamation issued, that all should be put to death who followed Nala, every house in the city was in mourning, as if there were a death in it, and even the infants ceased to drink their mothers' milk.

(இ - ள்.) கொற்றவன்பால் செல்வாரை - நளமகாராசனிடத்திற் போகின்றவர்களை, கொல்வான் - கொல்லுதற்கு, முரசு அறைந்து - பேரிகை அடிப்பித்து, வெற்றியொடு - ஜயத்தோடு, புட்கரனும் —, வீற்று இருப்ப - பெருமையா யிருக்குமளவில், முற்றும் - அப்பட்டணமுழுதும், இழவுபடும் ஆறு போல் - இழவுபட்ட விதத்தைப்போல், இல்லங்கள் தோறும் - வீடுகள் தோறும், குழவி - குழந்தைகளும், பால் - பாலை, கொண்டு - விருப்பங்கொண்டு, உண்டிலவே - உண்ணவே யில்லை, எ-று.

ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. குழவி என்னுமிடத்துச் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உண்டில—உடன்பாட்டெதிர்மறை வினைமுற்று. (சுO)

232. சந்தக் கழற்றா மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரு நோவப் பதைத்துருகி—எந்தாய்
நடக்கோ தோயக் களிற்றுய் வழியானோ தெல்லாம்
கடந்தோ மென்றூர் கலுழ்ந்து.

தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்
புரிவான் றுயராற் புலர்ந்து. [மை

233. The virtuous Nala, regarding the sorrow of his innocent children and contemplating the destructive power of Fate which surrounded them, became insensible through sorrow, and stood as immoveable as a picture.

(இ - ள்.) செம்மை புரிவான் - நன்மை செய்யவல்ல நளமகாராசன், தூய - சுத்தரான, தன் மக்கள் - தன் குமாரருடைய, துயர் நோக்கி - வருத்தத்தைப் பார்த்து, சூழ்கின்ற - (தன்னைச்) சுற்றிக்கொண்டிருக்கின்ற, மாய விதியின் - மோசஞ்செய்ய வல்ல விதியினது, வலி நோக்கி - பலத்தையும் பார்த்து, துயரால் புலர்ந்து - துக்கத்தினால் உலர்ந்து, யாதும் தெரியாது - எதுவுந் தோன்றாமல், சித்திரம்போல் - (எழுதப்பட்ட) சொரூபத்தைப்போல, நின்றிட்டான் - நின்றான், எ - று.

நின்றிட்டான் என்பதில் இடு - அசைநிலை ; இப்படியே இருந்தரு, என்பவைகளையுங் கொள்க, எழுந்திருந்தான் போந்தான் என்பன உதாரணம் ; இவற்றைத் துணைவினையென இக்காலத்தார் வழங்குவர். முற்பாட்டில் இருவரையு நோக்கி மக்கள் சொன்னதாகக் கொண்டபோது இப்பாட்டில் இருவரும் சித்திரம்போல் நின்றிட்டார் என்னவேண்டுவ தன்றோவெனின் வேண்டுவதே, ஆயினும், இத்துன்பத்திற்குக் காரணமாக நின்றவனனதினால் அரசன் மிக்க துயரமுற்றா னென்பது தோன்ற இங்ஙன முரைத்தாரென அறிக. (௩௨)

234. காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக் கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் றிருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன், தாமம் புனைவாளைத் தான்.

234. Addressing Damayanti, who placed on him the marriage garland before the Gods, Nala said :—"O thou fair one! It would be a sin for us to take, into the dense forests, these two children who are worthy of our love. Therefore take them with you and go to the beautiful town of your father, Bhima.

236. கைதவந்தூ னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும் — மைதீர்
மகப்பெறா மானிடர்கள் வானவர்தம்
மூர்க்குப் புக்குப்பெறார் மாதராய் போந்து.

236. Nala then said :—"O Damayanti ! the man who does not beget children who remove sin, may cast aside deceit and banish sin from his mind, and perform every conceivable penance, but he can never enter the heavenly regions (Swerga) where the Gods reside."

(இ - ள்.) [அதற்கு நளன் சொல்வது] மாதராய் - தமயந்தியே, கைதவம் நீக்கி - வஞ்சகத்தை விட்டு, கருத்தில் - மனதில், கறை அகற்றி - குற்றத்தை நீக்கி, எத்தனை செய்தவம் செய்தாலும் - அநேக நல்ல தவங்களைப் பண்ணினாலும், மை தீர் - பாவத்தைத் தீர்க்கும்படியான, மகவு - மக்களை, பெறா - ஈனாத, மானிடர்கள் - மனிதர், வானவர்தம் - தேவர்களுடைய, ஊர்க்கு - ஊராகிய சொர்க்கத்தில், போந்து - போய், புக்குப் பெறார் - பிரவேசிக்க மாட்டார்கள், எ - று.

தான் - இரண்டும் அசை. செய்தவம் என்பதில் செய் என்பது செம்மையின் விகாரம். [பதவியல் கூ - ஆம் சூத்திரத்தால் ஈறுகெட்டு முன்னின்ற மெய் திரிந்தது. உம் - அசை முற்றும்மை யென்னவுங் கொள்ளலாம். மக என்பது ஆண் பெண்ணுக்குப் பொதுவாய் நின்று மகவை மகவால் என வந்துமைப்படும்.

237. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனு
மென்னுடைய ரேனு முடையரோ — இன்னடி
சில், புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ்
செய்யவாய், மக்களையிங் கில்லா தவர்.

237. "Though one possess wealth and fame and things else, if he does not beget children whose lotus-hands dabble in the delicious food, and whose rosy mou[th] are as fragrant as a flower, he is destitute.

(இ - ள்.) [அதற்கு நளன் கூறியது] இன் அடிசில் - இனிமையான சோற்றிலே, புக்கு - பிரவேசித்து, அளையும் - கலக்கின்ற, தாமரைக்கை - தாமரைப்பூப்போன்ற

அரும் - பூவைப்போல் பரிமளிக்கிற, செய்யவாய் - சிவந்த வாயையுமுடைய, மக்களை - புத்திரர்களை, இங்கு - இவ்வுலகத்தில், இல்லாதவர் - அடையாதவர், பொன் உடையரேனும் - திரவியத்தை யுடையவர்களானாலும், புகழ் உடையரேனும் - கீர்த்தியை யுடையவர்களானாலும், மற்று - இன்னும், என் உடையரேனும் - எதை யுடையவர்களானாலும், உடையரோ - உடையவர்களாவார்களோ, [ஆகார்கள்,] எ-று. இ-எதிர்மறை.

(திருக்குறள்.) "அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள் சிறுகை யளாவிய கூழ்."

இல்லை யென்பது இன்மையைமாத்திரம் குறிக்குமாயின் செய்யப்படுபொருளில்லாததாம். உடைத்தாகாமையை யுணர்த்துமாயின் செயப்படுபொருளுள்ளதாம். (கூக)

238. சொன்ன கலையின் முறையனைத்துந் தோய்ந்தாலும், என்ன பயனுடைத்தா மின்முகத்து — முன்னங், குறுகுதலைக் கிங்கிணிகாற் கோமக்கள் பால்வாய்ச், சிறுகுதலை கேளாச் செவி.

238. "The ear that has heard all the precepts of the Vedas, what benefit it has derived, if it has not listened to the soft prattling which proceeds from the mouths smelling of milk, on the sweet faces of the high born infants, whose feet are adorned with ankle rings which caper [when they meet and clasp."]

(இ-ள்.) இன் முகத்து - இனிமையான முகத்தினிடத்திலே, முன்னம் - எதிரில், குறுகு - குறுகின, தலை - தலைப்பக்கங்களை யுடைய, கிங்கிணி - சதங்கைமாலை யணிந்த, கால் - பாதங்களையுள்ள, கோமக்கள் - மேன்மையான புத்திரருடைய, பால் வாய் - பாலுண்ணும் வாயின்கணுண்டாகிய, சிறு - சிறுமையான, குதலை - மழலைச்சொற்களை, கேளா - கேளாத, செவி - [illegible] சொன்ன - எண்ணிச்சொன்ன, கலையின் - சாஸ்திரங்[illegible] முறை அனைத்தும் - விஷயங்கள் எல்லாவற்றிலும், [illegible]ந்தாலும் - படிந்திருந்தும், என்ன பயன் - என்ன பிரயோ[illegible]தை, உடைத்து ஆம் - உடையது ஆம், எ-று. இ[illegible]

கள

தமை. அடைந்து - பிற அரசரைச் சேர்ந்து, வாழ்வு எய்தி - வாழ்வைப்பொருந்தி, இன் அமுதம் தேக்கி - இனிமையான அமுதத்தையும் நிறைத்து, இருப்பாரேல் - இருப்பாரானால், அவர் —, சொன்ன - நூல்களிற் சொல்லப்பட்ட, பெரு பேடிகள் - பெரிய பேட்டுப் பெண்களாயிருக்கவேண்டும், அலரேல் - அப்படிப்பட்டவர் அல்லாதவரானால், பித்தரே அன்றே - பைத்தியம் பிடித்தவரே யல்லவோ, எ - று. (எ0)

242. செங்கோலா யுன்றன் றிருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்ப னெழினகர்க்கே — நங்கோ
லக், காதலரைப் போக்கி யருளென்றாள் காதல
ருக், கேதிலரைப் போல வெடுத்து.

242. Damayanti, as if she bore enmity towards the children, who were the objects of their affection, said:— "O sceptred king, if such be your determination, then send our lovely children to the beautiful capital of our king, the king of Vidarpa."

(இ - ள்.) [அதற்குத் தமயந்தி] காதலருக்கு - ஆசைத்திற மக்களுக்கு, ஏதிலரை போல - பகைவரைப்போல் நின்று செங்கோலாய் - அரசனே, உன்தன் திருவுள்ளம் - உன்னுடைய கருத்து, ஈது ஆயின் - இதுவானால், நம் - நம்முடைய, கோலம் காதலரை - அழகுள்ள மக்களை, எம் கோன் - எங்களுடைய அரசனாகிய, விதர்ப்பன் - விதர்ப்பராஜனுடைய, எழில் நகர்க்கே - அழகுபொருந்திய பட்டணத்துக்கே, போக்கி அருள் என்றாள் எடுத்து - அனுப்பி அருள் என்று தூக்கிச் சொன்னாள், எ - று.

ள் - பிரிவிலே பிரிய மனந்துணிந் திரைத்தமையின் ஏதிலரைப்போல வென்றார். (எக)

243. பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதிதன் — தா
தைக்குக், காட்டுநீ யென்றான் கலங்காத வுள்ளத்
தை, வாட்டுநீர் கண்ணிலே வைத்து.

248. Nala, whose calm mind was disturbed by the tear-drops in his eyes, addressing a Brahmin said:— "Go

and shew to king Bhima, the father of Damayanti, their beloved children to whom I am still attached though their mother's feelings are estranged from them."

(இ - ள்.) [நளன்] கலங்காத உள்ளத்தை - எந்தத் துன்பத்தினாலும் கலங்கமாட்டாத வலிமையுள்ள மனத்தை, வாட்டும் - வெதும்பச் செய்கிற, நீர் - ஜலத்தை கண்ணிலே வைத்து—, பேதை பிரிய - தமயந்தி மனம்பிரியவும், பிரியாத - நீங்காத, பேர் அன்பின் - மிகுந்த அன்புள்ள, காதலரை - பிரியமான புத்திரரை, கொண்டுபோய்—, காதலிதன் தாதைக்கு - வீமராஜனுக்கு, நீ காட்டு - நீ காண்பி, என்றான் - என்று (ஒரு பிராமணனை நோக்கிச்) சொன்னான், எ - று.

புத்திரர் குமாரர் முதலிய வடசொற்களும் மக்கள் என்னும் தமிழ்ச்சொல்லைப்போல ஆண்பிள்ளைக்கும் பெண்பிள்ளைக்கும் பொதுவாய் வருமென அறிக. (எஉ)

244. தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்
தாள், இந்து முகத்தை யெதிர்நோக்கி—எந்
தம்மை, - வேறாகப் போக்குதிரோ வென்றார்
விழிவழியே, ஆறாகக் தண்ணீ ரழுது.

244. The children, looking at the handsome face of their father, and gazing at the moon-like countenance of the mother that begot them, and weeping till their tears flowed like a river from their eyes said:—"Are you going to separate us from yourselves by sending us away?

(இ - ள்.) [அப்பிள்ளைகள்] தந்தை திருமுகத்தை நோக்கி - தகப்பனுடைய சிறப்பான முகத்தைப்பார்த்து, தமை பயந்தாள் - தங்களைப் பெற்றவளுடைய, இந்து முகத்தை எதிர் நோக்கி - சந்திரனைப்போன்ற முகத்தை எதிரேபார்த்து, விழி வழியே - கண்களி னிடத்தே, கண்ணீர் ஆறாக அழுது - கண்ணீர் ஆறுபோல் வடிய அழுதுகொண்டு, எந்தம்மை - எங்களை, வேறாக போக்குதிரோ - வேறாய்ப்போகச் செய்கிறீர்களோ, என்றார்—, எ - று.

போக்குதிர்—நிகழ்கால முன்னிலைப் பன்மை வினைமுற்று போக்கு - பிறவினைப்பகுதி, திர் - முன்னிலைப் பன்மைவிகுதி

his wife, saw the desert (in) which the gems (on the heads of snakes were burnt to ashes by the intense heat of the Kulli plants, and the reptiles themselves writhed in agony.

(இ-ள்.) சேல் உற்ற வாவி - கெண்டைகளைப் பொருந்தின தடாகங்களுள்ள, திரு நாடு - சிறப்பான தேசம், பின் ஒழிய - பின்புறத்தில் ஒழிந்துபோக, தேவியொடும் - மனையாளோடும், காலின் போய் - காலினால் நடந்துபோய், ஞாலம் சேர் - பூமியைச்சேர்ந்த, கள்ளி வேகத்து - கள்ளிச்செடியின் கடுமையினால், அரவின்கண் மணிகள் - சர்ப்பங்களி னிடத்துள்ள ரத்தினங்கள், பொடியாய் - வெந்து சாம்பலாய்ப்போக, தள்ளி வேகின்ற சுரம் - (அப்பாம்புகள்) துள்ளிவிழுந்து எரிகின்ற பாலை நிலத்தை, கண்ணுற்றான் - பார்த்தான் (நளன்), எ-று. தாம் - அசை.

ஞாலம் சேர் என்பது, களித்துத் தூங்குதற்கிடமான பூமியில் துன்பப்பட்டு வேகின்ற இடமுமுண்டு. நல்லதிலுந் தீயதுண்டா யிருத்தல் இவ்வுலகத்தி னியற்கை யாதலின் என்பதைக் குறிப்பிக்கின்றது. அல்லது பூமியாவுங் கெடுமியமாதலால் சுரமிருத்தல் தகுதியென்று குறிப்பிக்கின்ற தெனவுமாம். ஞாலல் - நாலுதல், அதாவது தூங்கலும் விழுதலுமாம், ஞகரப்போலி, [நன் - எழுத்து - சு - சுகூ - ன்] உரையைக் காண்க. "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே" என்றபடி அவ்விடத்துக்குரித்தாய் நின்று கள்ளிவேவது இயற்கையாதலின் மணிகளும் பொடியாய் என்றார். வெந்து என்பது செய்வெனெச்சத்தின் திரிபு. சினைவினை யெனக் கொள்ளினு மிழுக்காது. செடிகளை நிலத்துக்கு உரோமமாக வடநூலில் வர்ணித்திருப்பதுண்டு. இங்கு [நன்-வினை-உள-உசு] சூத்திரங் (களை)நினைத்து உபயோகித்துக் கொள்க. (எஎ)

249. கன்னிறுத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்,
பொன்னிறுத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான் - கன்னின்றிக்கே, அஞ்சிப்பாரீந்த வரசனையுந்
தேவியையும், விஞ்சிப்பான் வேண்டி வனத்து.

249. The hard-hearted Kali who wished to deceive Nala, who fearing the truth gave up his country to his

enemies, as well as Damayanti appeared before the former as a golden-hued bird.

(இ - ள்.) நல் நெறிக்கே அஞ்சி - தரும மார்க்கத்துக்குப் பயப்பட்டு, பார் ஈந்த அரசனையும் - பூமியைப் பகைவன்கை யிற் கொடுத்துவிட்ட நளனையும், தேவியையும் - அவன்மனைவி யையும், வஞ்சிப்பான் - வேண்டி, வஞ்சிப்பதற்கு - விரும்பி, வனத்து - அப்பாலை வனத்திலே, கல் நிறத்த - கல்லின் குண முள்ள, சிந்தை - மனதையுடையவனான, கலியும் - கலிபுரு டனும், அவன் முன்பாக - அவ்வரசனுக்கெதிராக, பொன் நிறத்த - பொன்னின் வர்ணமுள்ள, புள் வடிவாய் - பக்ஷியின் ரூபமாகி, போந்து இருந்தான் - போயிருந்தான், எ-று.

போந்து என்பது புகுந்து என்பதின் திரிபு என்பார் சிலர்; போ என்பதற்கே இப் புடைபெயர்ச்சி எனப் பிறர் கொள்வர். ஏ - பிரிநிலை; வீரத்துக்கு அஞ்சியன்று என்பதாம், (எ௯)

250. தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகி
லை, மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்
தான்பிடிக்கப், பொற்புள்ளைப் பற்றித்தா வெ
ருள் புதுமழலைச், சொற்கிள்ளை வாயா டொழுத

250. As Sitha, who resembled a peacock, asked Rama who wore a garland of cool Thulasis, on which the bees swarmed, whose eyes were red and whose body was like the blue clouds, to seize and bring to her a deer, so did Damayanti, whose speech resembled the hesitating and prattling words of the parrot, beseech Nala to seize for her the golden-hued bird, that she might have it in her hand

(இ-ள்.) புது மழலை சொல் - புதுமையான மழலைச் சொல் லைச் சொல்லுகின்ற, கிள்ளை வாயாள் - கிளிபோன்ற வாயை யுடைய தமயந்தி, தொழுது - (தன்கணவனை) கும்பிட்டு, தேன் பிடிக்கும் - வண்டுகள் பற்றியிருக்கிற, தண் துழாய் - குளிர்ச்சி யான துளசிமாலை யணிந்த, செம் கண் - சிவந்த கண்களை யுடைய, கரு முகிலை - நீல மேகம்போன்ற இராமனை, ... சொன்ன - மானைப்பிடித்துத் தரச்சொல்லிய, மயிலின் சாயலுள்ள சீதையைப்போலே, ... கையிற் பிடித்துக்கொள்ளும்படிப் பொன்

...நின்று — வேந்தனே, நன்னாடு தோற்பித்தோனு
னேகாண் ணென்றதே, பொன்னூடு மாணிறத்த புள்

254. That bird of a beautiful golden color, which was so coveted, flying away with the beautiful vestment, which was cast upon it by Nala and the youthful Damayanti, whose tresses were arranged in plaits on her head and who resembled a cuckoo, and hovering above in the air, said:—"O king! look, it is I that caused you to lose your good kingdom."

(இ - ள்.) கூந்தல் இளம் குயிலும் - அளகபாரமுள்ள இளங் குயிலையொத்த தமயந்தியும், கோமானும் - நளமகாராசனும், கொண்டு அணைத்த - கொண்டுவளைத்த, பூ துகில் கொண்டு - அழகிய வஸ்திரத்தைத் தூக்கிக்கொண்டு, அந்தரத்தே - வானத்திலே, போய் நின்று—, பொன் - பொன்னின்து, மால் நிறத்து - பெருமைதங்கிய வர்ணத்தை யுடைத்தான, ஆடும் - அசைந்து கொண்டிருக்கிற, புள் - அந்தப்பறவையானது, வேந்தனே - அரசனே, நல் நாடு - நல்ல நாட்டை, தோற்பித்தோன் - (உனைத்) தோற்கச் செய்தவன், நானே—, காண் - அறி, [பார்,] என்றது—, எ - று. ஏ - அசை. (௮௩)

255. காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் கா
ளைக்கும், ஆவிபோ லாடையுமொன் றானதே—
பூவிரியக், கள்வேட்டு வண்டுழலுங் கானத்தி
டைக்கனகப், புள்வேட்டை யாதரித்த போது.

255. When Damayanti, whose eyes resembled the blue lotus, and the hero Nala, whose beautiful shoulders were adorned with garlands desired the hunt of the golden-hued bird, in the forest where the honey seeking bees swarm on the opening flowers, the garment in which they were enveloped became to them as their life.

(இ - ள்.) பூ விரிய - மலர் மலருகையில், கள் வேட்டு - தேனை விரும்பி, வண்டு உழலும் - வண்டுகள் திரிகின்ற, கானத்திடை - காட்டிலே, கனகம் புள் வேட்டை - பொற்பறவையின் வேட்டையை, ஆதரித்தபோது - விரும்பினபோது, காவி போல்

சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யின்
கொழியப், போந்தருளு கென்றாள் புலர்ந்து.

257. Damayanti sorrowing, said:—"O king who hast attained the true path, and art merciful, and possessest an unrivalled sceptre! When god himself wishes to afflict the world, and employs deceit, can any act of ours oppose him? Let us go away and have nothing more to do in this place.

(இ - ள்.) [தமயந்தி] புலர்ந்து - துக்கப்பட்டு, மெய் வகையே - மெய்யான விதத்தையே, சேர்ந்து - அடைந்து; அருளி - யாவர்க்குங் கருணைபுரிந்து, நின்ற - இருந்த; தனி செங்கோலாய் - தனித்த செங்கோலுடையவனே, வையம் துயர் உழப்ப - பூமி துக்கத்தினால் வருந்த, பல் மாயம் சூழ்ந்து - பலமோசங்களைக்கருதி, தெய்வம் கெடுத்தால் - தெய்வமே கெடுக்கமுயன்றால், செயல் உண்டோ - எதிரான செய்கையுண் டோ (இல்லையாதலின்,) இங்கு ஒழிய - இவ்விடத்துச்செய் கையை யொழித்து, போந்தருளுக - வந்தருளவேண்டும், என் றாள், — எ - று.

தருமந் தப்பாமல் செங்கோல் செலுத்தின உனக்குத் தெய் வம் வேண்டுமென்று இவ் வவஸ்தையை வருவித்தல் நாம் என்ன செய்யலாம் வாவென்றாள் என்பது கருத்து. (அகூ)

258. அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்,
வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே — எந்
தை, குளிப்பார்போற் சென்றடைந்தான் கூரி
ருளாற் பாரை, யொளிப்பான்போற் பொற்றே
ருடன்.

258. When these two were journeying on the great desert, our father the sun, in order to assuage the intense and burning heat that existed there, went down with his golden chariot, as one bathing in the western ocean, and as if wishing to veil the whole earth in darkness.

(இ - ள்.) [அவ்விருவரும் இப்படியாக] அந்த நெடு சுரத் தின்மீது ஏக - அந்தப் பெரிய பாலைவனத்திலே போகும் போது, ஆங்கு - அவ்விடத்துண்டான, அழலும் - கெடுதியா

தோன்றுங் — காணக்கூடாத, இருள் — இருட்டிலே, சென்று ஞாயிறு வீழ்வு - சூரியன் மேல் கடலில் வீழ்வது அஸ்தமயம். இளம்பேய் - மெலிந்து மூப்பின் குற்றமில்லாத பேயை. (அ௯)

260. எங்காம் - புகலிடமென் றெண்ணி யிருள்வழி
போய், வெங்கா னகந்திரியும் வேலைதனில் —
அங்கேயோர் பாழ்மண் டபங்கண்டான் பாலின்
வெண் குடைநிழற்கீழ், வாழ்மண் டபங்கண்
டான் வந்து.

260. While they seeking for a place of shelter for the night and traversing the dark pathways, wandered about in the sultry forest, Nala, who beheld the earth do penance to live under the shade of his milk-white umbrella, saw there the ruins of a dilapidated building (மண்டபம்).

(இ - ள்.) ஏங்கு - எவ்விடத்தில், புகல் இடம் ஆம் என்று எண்ணி — பிரவேசிக்குமிடம் கிடைக்குமென்று சிந்தித்து, இருள் வழி - இருட்டு சூழ்ந்த மார்க்கத்திலேயே, போய் —, வெம் கானகம் திரியும் வேலைதனில் - வெப்பமான காட்டிலே சஞ்சரிக்கும் காலத்தில், பால் வெண் குடைநிழல் கீழ் - பாலை யொத்த வெள்ளைக்குடையின்நிழலில், வந்து —, வாழ் மண் தபம் கண்டான் - வாழ்கின்ற பூமியின் தவத்தைக்கண்டவனாகிய நளன், அங்கே —, ஓர் பாழ் மண்டபம் - ஒரு பாழான மண்டபத்தை, கண்டான் —, எ - று.

பூமி இவனது அரசாட்சியிலே வந்து வாழ்வுறத் தவஞ்செய்திருக்கும்படியான சிறப்புள்ளவன் என்றபடி. புகலிடம் — புகலுக்குரிய இடமென்று நான்கனுருபும் பயனுமுடன்றொக்க தொகை. (அ௧)

261. மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
காருறு மிடமற்றுத் தானில்லை — சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயில்வம்
போதரா யென்றான் புலர்ந்து.

261. Nala, addressing Damayanti said "O thou fair one with loosened tresses! the darkness of the night is

increasing, and we can find no other place for shelter. Come, let us sleep in this building."

(இ-ள்.) [அரசன்] புலர்ந்து - வாடி, சோர் கூந்தல் மாதராய் - தளர்ந்து விழும்படியான கூந்தலையுடைய சுந்தரமுள்ளவளே, மாரி இரவும் போய் - சிற்றிருளுள்ள இராத்திரி மாறி, முற்று இருளாய் மூண்டதால் - நிறைந்த இருளுள்ளதாய் அமைந்ததனால், மற்று சாரும் இடம் - வேறு தங்கும் இடம், இல்லை -, நாம் இந்த மண்டபத்தே - கண் துயில - நித்திரை செய்யும்பொருட்டு, போதராய் - வா, என்றான் -, எ-று. தான் - அசை.

மூண்டதால் — தொழிற்பெயர்; மூன்றும் வேற்றுமை. மூண்டது — முற்று, ஆல் — அசை என்னவுமாம். மாரி என்பது சோம்பலையுணர்த்துவது, ஆகுபெயராய் மந்தத்திற்கு வந்து, சிற்றிருளுள்ள இடத்திற்கு ஏற்பப் பொருள் பட்டது. போதராய் — ஏவல்முற்று; போ என்பதோடு தா என்பது துணை வினையாகச் சேர்ந்த போதா - பகுதி. (௬௦)

262. வைய முடையான் மகரயாழ் கேட்டருளுந்,
தெய்வச் செவிகொதுகின் சில்பாடல் — இவ்விர
வில், கேட்டவா வென்றழுதாள் கெண்டை
யங்க ணீர்சோரத், தோட்டவார் கோதையாள்
சோர்ந்து.

262. "How hard it is that the noble ears of the emperor of the world, which has been accustomed to the music of the மகர guitar should this night be obliged to listen to the meaner noise of the musquitoes!" So saying, Damayanti, whose plaited tresses were adorned with the petals of flowers, became faint, and wept so that the tears fell from her beautiful eyes, which resembled the carp fish.

(இ-ள்.) வையம் உடையான் - பூமிக்குச் சக்கிரவர்த்தியானவனுடைய, மகர யாழ் கேட்டருளும் - மகர வீணையின் நாதத்தைக் கேட்டருளுகின்ற; தெய்வ செவி - மகிமைபொருந்திய காது, இவ் இரவில் - இந்த இராத்திரியில், கொதுகின் சில் பாடல் - கொசுக்களுடைய அற்பமான பாட்டை, கேட்ட ஆ -

264. The jewel-bedecked Damayanti, shedding tears and becoming faint and sorrow-stricken, said:—"O king! I do not see here the beautiful and soft bed of fragrant flowers, or my personal attendents or my sleeping apartments."

(இ-ள்.) பூண் கேர் முலையாள் - ஆபரணம் இசைந்திருக்கிற தனங்களையுடைய தமயந்தி, விரை மலர் - வாசனையுள்ள மலர்களாலாகிய, பூ மெல் அணையும் - அழகிய மெதுவான படுக்கையையும், மெய் காவல் பூண்டு - தேகத்தைக் காக்கும் தொழிலைக்கொண்ட, பரிசனமும் - ஏவல் ஆட்களையும், பள்ளி அறையும் - படுக்கை யறையையும், அரசே - அரசனே, இங்கு நான் காணேன் - இங்கே நான் பார்க்கின்றேனில்லை, என்று - என்று, கண் பனிப்ப - கண் நீர் வடிய, புலர்ந்து - வாடி, கலங்கினள் - கலக்கமுற்றாள், எ-று.

[பதவி - கஅ - ம் - சூத்.] "எதிர்மறை மும்மையும் ஏற்கும்" என்றதனால் காணேன் என்பது இங்கு நிகழ்காலமாயிற்று. பூண் ஏர் முலை எனவும் பிரிக்கலாம். (௬௪)

265. தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம் - நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து. [து

265. Nala stretching his body on the ground and giving his arm as a help to Damayanti, (said):—"The dense forest, the four corners of the earth, and even the devil are asleep. At this late hour of the night you also should go to sleep."

(இ-ள்.) [அரசன்] மண் மேல் திருமேனி வைத்து - மண்ணின்மேல் தேகத்தைவைத்து, கை கொடுத்து - தேவிக்குக் கையை ஆதாரமாகக்கொடுத்து, தீய வனமும் துயின்று - கடுமையான காடுந் தூங்கி, திசையும் துயின்று - திக்குந் தூங்கி, பேயும் துயின்றது - பிசாசுந் தூங்கிற்று, பேர் யாமம் - பெரிய இராத்திரியில், நீயும் —, இனி - இனிமேல், கண்மேல் - கண்ணில், துயில்கை - தூங்குவது, கடன் - கடமை, என்றான் —, எ-று. ஆல் - அசை.

துயின்று என்பது துயில என்பதின் திரிபு. துயில்கையா வது செய்கையொழிந் திருக்கை. (௬௪)

266. புன்கண்கூர் யாமத்துப் பூமிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டு—மென்கண்
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து.

266. Lying down on the earth, Nala said :—"How is it that though on this night of great sorrow, I behold the sleeping form of my wife reposing in the dust, my eyes have not turned to ashes, my life has not departed and my heart has not broken ?"

(இ-ள்.) புன்கண் கூர் யாமத்து - துன்ப மிகுந்த இராத்திரியில், பூமிமேல் படுத்து - புழுதியில் படுத்துக்கொண்டு, தன்கண் துயில்வாளை - தன் கண்ணின்முன் தூங்குகின்ற மனையாளை, தான் கண்டும்—, விழுந்து—; (நளன்) என் கண்பொடியாதால் - என் கண் சாம்பலாக வில்லையே, உள் ஆவி போகாதால் - உள்ளே யிருக்கும் ஆவி போக வில்லையே; நெஞ்சம் வெடியாதால் - மனம் வெடிக்க வில்லையே, என்றான்—. எ-று.

தானும், ஆல் மூன்றும் - அசை. (௬௫)

267. முன்றிற் றனின் மேற்படுக்க முன்றானையுமின்றி
இன்று துயில விறைவனுக்கே — என்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழு
மைபுகுந்த கண்ணீர் வர. [தாள்

267. "As the king has not this night even the end of the garment to spread out and sleep upon in the front verandah of this building, my hands and legs alone must be of use to him." So saying Damayanti wept, so that the tears fell from her blackened eyes.

(இ-ள்.) இறைவனுக்கு - அரசனுக்கு, இன்று துயில - இன்றைக்குத் தூங்குவதற்கு, முன்றில் தனின் மேல் படுக்க - கட்டிடத்தின் முன்புறத்தின் மேலே பரப்பும்படி, முன் தானையும் இன்றி - வஸ்திரத்தின் தலைப்பு மில்லாமல், என்றனது கை புகுந்தது - என் கையானது பிரவேசித்தது; என்னுடைய கால் புகுந்தது—, என்று - என்றுசொல்லி, மை புகுந்த கண்

மைதீட்டிய கண்ணினின்றும், நீர் வார - தண்ணீர் ஒழுக, அழுதாள் - , எ-று.

முன்றில் - முன்றானை; இரண்டும் இலக்கணப்போலி. - பிறந்த மண்டபமாதலின் அதன்முன்றில் உடைக்கலாயிற்று. முன்றி லில் என்பிரித்து முன்வாகத்தில் எனவும் பொருள் கொள் ளலாம்; என் கை ஈங்கிலக்கேள் இழே பரப்புக் - பரப்பாயின என்கிறபடி. (௬௬)

268. வீமன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாம மெனக்களித்த தையலாள்—யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் டுயின்றாண்மற்
றாரே துயரடையா ராங்கு.

268. "If the noble daughter of king Bhima, the damsel, who bestowed upon me the garland which even gods could not obtain, has to make the earth her bed this night, who is there that does not feel sorrow ?" said Nala.

(இ - ள்.) வீமன் திருமடந்தை - வீமராசனுடைய மேன்மை யான மகளான (தமயந்தி), விண்ணவரும் பெற்றிலா - தேவரும் பெறாத, தாமம் - மாலையை, எனக்கு அளித்த - எனக்குத் தந்த, தையலாள் - பெண், யாமத்து - இரவில், பாரே - பூமியே, படை - மெத்தையாகிய, அணை ஆ - படுக்கையாக, கண் துயின்றாள் - தூங்கினாள், ஆங்கு - அவ்விடத்தில், ஆரே துயர் அடையார் - யார்தாம் துக்கப்படமாட்டார்கள், எ-று. மற்று - அசை.

தையல் - அழகு; அதனை உடையவள் தையலாள். (௬௭)

269. பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத,
செம்மை யுடைமனத்தன் செங்கோலான்
பொய்ம்மை, விலக்கினா னெஞ்சத்தை வேறாக்கி
நின்று, கலக்கினான் வஞ்சக் கலி.

269. The deceitful Kali changed and preplexed the mind of king Nala, who swayed his sceptre, who was truthful, and whose virtuous affections remained unaltered towards the maiden whose fair hair was bedecked with flowers.

(இ - ள்.) பெய் மலர் - சொரிகின்ற புஷ்பங்களையுடைய, பூ கோதை பிரிய - அழகான கூந்தலுள்ள தமயந்தி நீங்கும்

பழுது பிரியாத - மாறாத, செம்மை உடைய மனத்தன் - நற்குணமுள்ள மனமுடையவனும், செங்கோலான் - செங்கோலையுடையவனும், பொய்மை விலக்கினான் - பொய்மையை நீக்கினவனுமாகிய நளனுடைய, நெஞ்சத்தை - மனத்தை, வஞ்ச கலி - வஞ்சனை செய்யுங் கலிபுருடன், வேறு ஆக்கி - வேறுபடச்செய்து, கலக்கினான் - கலங்கச்செய்தான், எ-று. நின்று - அசை.

செம்மையுடைய மனத்தன் முதலான மூன்று விசேஷணங்களும் புலவரைகையிலுங் காக்கவேண்டுங் கடமையை விளக்குகின்றன. (௬௮)

270. வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்குஞ்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல் - விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்த னெஞ்சத்
துதித்ததே வேறோ ருணர்வு.

270. As by the intervention of the serpent Raghu, the sun in the heavens changes its golden rays and becomes darkened, so the deceitful Kali changed the mind of king Nala who commanded an army of invaluable charioteers.

(இ - ள்.) மாகத்து - வானத்தில், அரா - இராகுவென்னும் பாம்பு, வளைக்கும் - சூழ்ந்துகொள்ளப்பெற்ற, செம் சுடரின் வந்த - சிவந்த கிரணங்களையுடைய சூரியனிடத்திற் றோன்றிய, கரு சுடர்போல் - கருமையான ஒளியைப்போல, விஞ்ச - மேலாக, மதித்த தேர் தானை - எண்ணப்பட்ட தேர்ச்சேனையையுடைய, வய வேந்தன் - நளனுடைய, நெஞ்சத்து - மனதில், வஞ்ச கலி வலியால் - வஞ்சகனான கலியின் வலிமையினால், வேறு ஓர் உணர்வு - வேறாகிய ஒரு எண்ணம், உதித்தது - உண்டாயிற்று, எ-று. ஏ-அசை.

உதித்தது—உதி - பகுதி, வடசொல்; அது உத் என்னுமுபசர்க்கத்தோடு கூடிய இ என்னுந் தாது. உதயம் என்பதும் இப்பகுதியிற் பிறந்ததே. ஆரியத்தில் எந்த ஈற்றதாயினும் பெயராயினும் தமிழில் வினைப்பகுதியாம்போது இகர ஈறாகவே வரும்.

(உ-ம்.) பால், பாலி; பட், படி; சஞ்சர, சஞ்சரி; கடாக்ஷ, கடாக்ஷி; சந்தோஷ, சந்தோஷி; சித்திர, சித்திரி,

எனக்காண்க. தமிழிலும் பெயர் இகரவிகுதி பெற்றே வினைப்பகுதியாய் வரும். (உ-ம்.) கடைக்கணி, முறுவலி. (கக)

271. காரிகைதன் வெந்துயரங் காணாமல் நீத்திந்தக்
காரிருளிற் போவான் குறித்தெழுந்து — நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
யரிதற் கவனினைந்தா னாங்கு.

271. Wishing to desert Damayanti in her great sorrow and separate from her in that dense darkness, he (Nala) rose, and contemptated dividing into halves the garment which was to them as their common life.

(இ - ள்.) காரிகையின் - தமயந்தியின், வெம் துயரம் காணாமல் நீத்து - கொடுமையான துக்கத்தைப்பாராம லிருக்கும்படிவிட்டு, அந்தகார் இருளில் - அந்த நிறைந்த அந்தகாரத்திலே, போவான் - அப்புறம்போக, குறித்து எழுந்து - நினைத்து எழுந்து, நேரே - நேராக, இருவர்க்கும் ஓர் உயிர்போல் எய்தியது - தங்களிருவர்க்கும் ஒரே பிராணனைப்போலப் பொருந்தியிருக்கின்ற, ஓர் ஆடை - ஒரு வஸ்திரத்தை, அவன் - அந்த நளராசன், அரிதற்கு நினைந்தான் - இடையில் அறுப்பதற்கு எண்ணினான். எ - று. ஆங்கு - அசை.

அவ்விடத்தில் என்னவுமாம். நீத்து - நீ - பகுதி, செயவெனெச்சம் - நீப்ப, எதிர்காலத்தில் நீப்பான், எதிர்மறையில் நீவான் எனவும் வரும்; செய்யுமென்வினை - நீக்கும். இப்பகுதியே குச்சாரியைபெற்று நீக்கு என்றாம். அது நீக்கினன், நீக்குவான் முதலாகவரும். (க00)

272. எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும் — பண்ணி
னுக்குக் கேளான தேமொழியை நீக்கக் கிள
ரொளிசேர் வாளாய் மருங்கிருந்தான் வந்து.

272. Knowing the thoughts of the valiant king, the angry Kali came and attached himselt to the waist of Nala in the form of a bright knife, to enable him to fulfil his design of deserting the maiden whose speech was as pleasant as the flow of music.

(இ-ள்.) பண்ணினுக்கு - இசைக்கு, கேளான - உறவான, தேம் மொழியை - மதுரமான பேச்சுள்ள தமயந்தியை, நீக்க - நீக்கும்படி, எண்ணிய எண்ணம் முடிப்ப - சிந்தித்த சிந்தனையை நிறைவேற்றுவதற்கு, இகல் வேந்தன் - போர்செய்ய வல்ல அரசன், கண்ணியதை அறிந்து - நினைத்ததை அறிந்து, காய் கலியும் - கோபிக்குங் கலிபுருடனும், வந்து -, இளர் ஒளி சேர் - விளங்குகிற காந்திபொருந்தின, வாளாய் - கத்தியாய், மருங்கு இருந்தான் - இடுப்பில் இருந்தான், எ - று.

வாளாய் மருங்கிருந்தான் என்பது வாள்வடிவாக வந்திருந்தானென்பதாம். அன்றியும் எனக்கு அவன் அஷ்டம சனியானான் என்பதுபோலக் கலியின் செய்கைக்கு உரித்தாயிருந்தது பற்றி அவ்வாறு ஆரோபித்ததெனவும் கொள்ளலாம்.

273. ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் னன்பை முதலோடும் — பற்றி
அரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் றிகைத்து.

273. Nala then divided the garment, as if he were separating the two lives and rooting up his affections. And having done this, he brooded over Damayanti's state, and stood motionless.

(இ-ள்.) ஒற்றைத் துகிலும் - ஒற்றை வஸ்திரமும், உயிரும் - பிராணனும், இரண்டு ஆக - இரண்டாகும்படி, முற்றும் - முழுமையும், தன் அன்பை - தன் ஆசையை, முதலோடும் பற்றி - வேரோடு பிடித்து, அரிந்தான் - அறுத்தான், (நளன்) அரிந்திட்டு - அறுத்தபின், அவள் நிலைமை - அந்தத் தேவியின் நிலையை, நெஞ்சில் தெரிந்தான் - மனதில் சிந்தித்து, திகைத்து இருந்தான் - பிரமித்து இருந்தான், எ - று.

"காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கு மாவிபோ லாடையுமொன் றானதே" என்று முன்கூறியிருப்பதனால்: "ஒற்றைத்துகிலு முயிருமிரண்டாக" என்றார். உயிர் ஒன்றியிருப்பதன்காரணம் அன்பாதலின் அதனை அறுத்து உயிரைப் பிரிந்தான். ஆடையுமுயிரும் பிரியாவிடின் அவன் தனித்துச் செல்வது அமையாதென்பது கவிசாதுரியக்கருத்து.

நுவள் நிலைமையாவது செல்வங்களைப் பிரிந்தமைக்குறித்தும் எவ்வளவேனுங் கலங்காமற் கணவனுக்கு நேர்ந்த இத்துன்பத்திற்கே கலங்கி அவனோடிருத்தலே தனக்குப் பெரும்பேருக எண்ணி "தெய்வந்தொழா அள் கொழுநற்றொழுதெழுவாள்" என்றிருக்குந் தன்மை. இறைப்பொழுதும் பிரிவாற்ருத்தன்மையெனினுமாம். தெரிந்தான்—முற்றெச்சம், [வினை-சூ-௩௨]. ()

274. போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்
டேகும்; ஆயர் கொணர்ந்த வடுபாலின் —
தோயல், கடைவார்தங் கைபோலு மாயிற்றே
காலன், வடிவாய வேலான் மனம்.

274. The mind of Nala, who possessed a lance as cruel as Yama, yearned after Damayanti and then returned to him; then went after her again and then again returned to him resembling the hands of the damsels who churned the hardened curds formed from the boiled milk brought by cowherds.

(இ-ள்.) காலன் வடிவு ஆய - எமனுடைய ரூபமான, வேலான் - வேலையுடைய நளனது, மனம்—, ஒரு கால் போய் மீளும் - ஒருதரம் அவளிடஞ்சென்று திரும்பும், ஒரு கால் புகுந்து மீண்டு ஏகும் - ஒருதரஞ் சென்று திரும்பிச் செல்லும் (ஆதலின்,) ஆயர் கொணர்ந்த - இடையர் கொண்டு வந்த, அடு பாலின் - காய்ச்சின பாலினது, தோயல் - தோய்வாகிய தயிரை, கடைவார்தம் கைபோல் - கடைகிற ஆய்ச்சிகளுடைய கையைப்போல், ஆயிற்று - ஆனது, எ-று. உம், ஏ,—அசைநிலை. காடுகளிலிருந்து காலிமந்தையைக் கறந்து சேரிக்குப் பால் கொண்டுவருவது வழக்கமானதுபற்றி "ஆயர்கொணர்ந்த வடு பாலின்" என்றார். தோயல்—தொழிலாகுபெயர். (௨௭௪)

---

275. சிந்துரத்தாற் றெய்வ முனிவர் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போல்—முந்த
ஒலித்ததேர்த் தானை யுயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து.

275. As the floods, once on a time ceased flowing by the power of the prayer of the sage Narada, who was informed of the flood by the elephant Iravatham, so by the

wicked Kali, the mind of the noble Nala, before whom once marched the noisy army of charioteers, was hardened.

(இ - ள்.) சிந்துரத்தால் - ஐராவதமென்னும் யானையினால், தெய்வ முனிவர் தெரிந்து - நாரதமுனிவர் அறிந்து, உரைத்த மந்திரத்தால் - சொல்லிய மந்திரமகிமையினால், தம்பித்த - அசையாமல் நின்ற, மா நீர் போல் - பெருவெள்ள நீரைப் போலே, முந்த - முன்னதாக, ஒலித்த - முழங்கும்படியான, தேர் தானை - தேர்ச்சேனையுள்ள, உயர் வேந்தன் நெஞ்சம் - உயர்வான நளமகாராசனுடைய இருதயமானது, தீ கலியால் - தீமையான கலியினால், வலித்தது - வலிமையாயிற்று, [தயாதாக்ஷிணியங்க ளில்லாததாயிற்று என்கிறபடி], ஏ - று. ஏ - அசை.

"அம்மவோ கொடியவாறே" "போவதே நோயதாகி" என்னுமிடங்களிற்போல இரக்கக்குறியாய் வந்ததெனவுங் கொள்ளலாம். வந்ததென்பதையும் அசையென்று கொள்ளவேண்டும்.

ஒருகால் நாரதமாமுனி முனிக்கணங்களோடு ஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு ஆனந்த பரவசராய்த் தம்மை மறந்து நிலவுகாயுமிரவில் கங்கைக்கரையண்டை வந்தபோது, அக் கங்காநதி தனக்கு அவர் வணக்கஞ் செய்யவில்லையென்று கோபித்து அம்முனிகுழாம் அமிழ்ந்துபோகும்படி அடங்காப் பெருவெள்ளமாய்ப் புரண்டுவர, அதை யம்முனிவர் அறியாமலிருந்ததனால், ஐராவதம் வந்து தண்ணீர்குடிக்கும் பாவனையாய்த் தும்பிக்கையினாலே தண்ணீரைவாரி முனிவர்மேல் விறைக்க, அவர் வெள்ளத்தையுணர்ந்து ஒருமந்திரஞ் செபித்ததனால் கங்கை அசையத் திறனில்லாமல் தம்பித்து அம்மகாமுனிவரைவேண்டி யநுக்கிரகம்பெற்றுச் சாதாரண நிலையினின்றொன்று ஜைமினிபாரதத்தி லோர்கதை யிருப்பதாய்ப் பெரியபுராணிக ரொருவராற் கேள்வியுற்றோமாதலின், "சிந்துரத்தாற்டெய்வமுனிவர்" என்பதை "சிந்துரத்தாற் றெய்வ முனிவர்" என்று மாற்றினோமென அறிக. வசிட்டர், விசுவாமித்திரருக்குச் சிலவுணவு தம் சீஷர்கையிற் கொடுத்தனுப்பிய தாயும் அச்சீஷர் இடையேவந்த ஆற்றுவெள்ளத்தைக் கடக்க

மாட்டாமல் தடுமாறினபோது அத்தண்ணீர் தம்பிகளுக்குப்படி விட்டார் ஒரு மந்திர முனைசத்ததாயும் ஒருவர் ஒருக்கதை எமக்குச்சொன்னார் ஆயினும் அது இன்னபுராணத்ததென்று தெரியாததுமன்றிக் கதை விவரம் விளங்காமையினாலும் "சிந்துரத்தாள்" என்பதற்குச் சிவந்தபாதத்தினையுடைய வென்றே பொருள்கொள்ள இது சிறப்பாய்ப் பொருந்தாமையானும் யாமதனைக் கொண்டிலம்; அப்பாடத்தையே கொண்டு பொருத்தவுரைப்பாராயின் அது எமக்கு முக்கியமான ஒப்பாம்.

276. தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின் — நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான்.

276. "O thou Gods, who exist even in this forest, filled with dangers! Be a protection to the noble daughter of king Bhima; for in this dark night I intend deserting as an enemy would do, and leave without any help this constant and confiding maiden."

(இ-ள்.) தீ கானகத்து உறையும் - தீமையான காட்டில் இருக்கின்ற, தெய்வங்காள் - தேவர்களே, வீமன்தன் கோ காதலியை - வீமராசனுடைய மேன்மையான மகளை, குறிகொண்மின் - (இரக்ஷிப்புக்கு) இலக்காகக் கொள்ளுங்கள், நீக்காத - நீக்கக்கூடாத, காதல் அன்பு மிக்காளை - ஆசையும் பத்தியுமுடைய இவளை, இன்று - இன்றைக்கு, கார் இருளில் - கறுத்த இருட்டில், கைவிட்டு - ஆதரவு அற நீக்கிவிட்டு, யான் - நான், ஏதிலன்போல் - சத்துருவைப்போல், போகின்றேன் - போய்க்கொண்டிருக்கிறேன்; எ - று.

இவ்வாறு நளன் வனதேவதைகளைப் பிரார்த்தித்தான்.

277. ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினன் — தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
இடையிருளிற் கானகத்தே விட்டு.

277. Leaving, in the forest, at dead of night, the maiden who cast upon him the garland of fresh flowers filled

with sweet honey, Nala went away, parting the beautiful raimant, withdrawing his mercy, and dividing the sweet life of Damayanti, who possessed tender rising breasts.

(இ - ள்.) தீ தேன் - மதுரமான தேன், தொடை - மலர்களில் அல்லது பூங்கொத்துகளில், விரவும் - கலந்திருக்கிற, நாள் மாலை சூட்டினாள் தன்னை - புதிய மாலையை (தனக்குச்) சூட்டிய தமயந்தியை, இடை இருளில் - நடுராத்திரியில், கானகத்தே இட்டு - காட்டில் விட்டு, ஏந்தும் - ஏந்தத்தக்க, இள முலையாள் - இளமையான முலைகளையுடைய தமயந்தியின், இன் உயிரும் - இனிமையான பிராணனும், தன் அருளும் - தன் கிருபையும், பூ துகிலும் - அழகிய வஸ்திரமும், வேறு ஆக - வேறுபடும்படி, போயினான் - சென்றான், எ - று.

துன்பத்தால் பிரிந்துபோகுமாதலால் அங்ஙனம் போகாமல் காக்கத்தக்கது அவளுயிரென்பார் 'ஏந்தும்' என்றார். ()

278. தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி,
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரி
ருளில், செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட்
டேகினான், வெங்கா னகந்தனிலே வேந்து.

278. Like the enemies of king Swarki who was on earth, as beneficent as the கற்பகம் tree in Swerga, and whose shoulders were as the mountain Meru, Nala went on his way after having left his wife, alone in the sultry forest, on that dark night, the nails on his fair feet becoming bruised,

(இ - ள்.) தாரு என - கற்பக மரம்போல், பார் மேல் - பூமியின் மீது, தரு - கொடுக்கின்ற, சந்திரன் - சந்திரனைப் போன்றவனும், மேரு வரை தோளான் - மேருமலை யொத்த புஜமுள்ளவனுமாகிய, சுவர்க்கி - சுவர்க்கியென்பவனுடைய, விரவார்போல் - சத்துருக்களைப் போல், கூர் இருளில் - நிறைந்த இருட்டுள்ள ராத்திரியில், தேவியை விட்டு - நாயகியை ஒன்றியாகவிட்டு, வெம் கானகந்தனிலே - வெப்பமான காட்டிலே, செம் கால் நகம் சிதைய - சிவந்த காலின் நகம் சிதையும்படி, ஏகினான் - போயினான், வேந்து - நளமகாராசன், எ - று.

மந்த்ரு என்கிற வடசொல் முதல்நீண்டு தாரு ஆயிற்று. தரு—
மரப்பொதுப்பெயர், சிறப்பாய்க் கற்பகவிருக்ஷத்திற்குவந்தது.
விரவுதல் - சேர்தல், விரவார் - சேராதவர். போல் என்பதை
வகிஞன் என்பதோடு கூட்டுக. சந்திரன் சுவர்க்கி என ஒருபெ
யராயும் வரும். இவன் இக்கவியை ஆதரித்து இந்நூல் செய்
வித்த ஓரரசன். கூரிருள்—அன்மொழித்தொகையாய் ராத
திரிக்கு வந்தது; நிறைந்த இருட்டில் எனவுங் கொள்ளலாம்;
வினைத்தொகை. (கO௭)

279. நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோலமலரின் கொடியிடையாள் - வேல்வேந்தே
எங்குற்றா யென்று வினவளைக்கை நீட்டினாள்
அங்குத்தான் காணா தயர்ந்து.

279. Damayanti, whose waist resembled a blossoming creeper, who awoke after Nala had thus gone, shedding tears, which were as beautiful as a row of pearls from her lotus-like eyes, and not seeing the king there, becoming sorrowful, exclaimed :—"O king, armed with a lance! where hast thou gone ?" and stretched forth her hands which were adorned with smooth bangles.

(இ-ள்.) [இவ்வாறு நளன்சென்றவுடன் விழித்துக்கொண்ட] மலரின் கொடி இடையாள் - மலருள்ள கொடிபோலும் இடை யையுடைய தமயந்தி, நிரை முத்தின் கோலம் - வரிசையான முத்தின் அழகு, [கண்ணீர்த்துளி யொழுக்கென்றபடி,] நீலம் அளவே - கண்களென்னு நீலோற்பலத்தின் அளவாக, நெகிழ - பெருக, அங்கு - அவ்விடத்தில், தான் காணாது - (அரசனைத்) தான் காணமல், அயர்ந்து - தளர்ப்பட்டு; வேல் வேந்தே - வேல் தரித்த அரசனே, எங்குற்றாய் என்று - எங்கேபோனாயென்று, இன வளை கை - ஒத்தவளைகள் அணிந்த கைகளை, நீட்டினாள் - எ - று.

இருட்டாதலால் பக்கத்திற் காணமல் எங்கே புரண்டிருக்கி றாரோவென்று கைநீட்டித் தடவிப்பார்த்தாள் என்கிறபடி.

காணாது—எதிர்மறை வினையெச்சம். (கO௮)

280. வெய்ய தனிவென்னு மெல்லிமனி ...
விக, ... கைய்ரிக்கொண் டெவ்விடத்தும் காணு

—டில்—ஐயகோ, என்னைப்போய் வீழ்ந்தா ளின
மேதி மென்கரும்பைத் தின்னப்போ நாடன்
றிரு.

280. The Lakshmi-like Damayanti, the daughter of king Bhima who ruled the country where the herds of buffaloes seek for the tender sugar-canes to eat them, feeling with her hands on the floor, which was her soft bed, and not finding Nala, exclaimed:—"Alas O king!" and going out fell on the earth.

(இ-ள்.) இன மேதி - கூட்டமாகிய எருமைகள், மென் கரும்பை - மெல்லிய கரும்புகளை, தின்ன போம் - தின்னுதற்குச் செல்கின்ற, நாடன் - நாட்டையுடைய வீமனது, திரு - (மகளாகிய) திருமகள் போன்றவள், வெய்ய தரை என்னும் - வெப்பமான தரையாகிய, மெல் அமளியை - மெதுவான படுக்கையை, தடவி—, கையரிக்கொண்டு - தேடி, (நளனை) எவ்விடத்தும் காணாமல் - எங்கும் பார்க்காமல், ஐயகோ - ஐய அரசனே, என்ன போய் வீழ்ந்தாள் - என்று கூவிக்கொண்டு போய் நிலத்தில் விழுந்தாள், எ - று.

வெய்ய—குறிப்புப்பெயரெச்சம். வெம்மையில் மை போய் நின்ற வெம் - பகுதி, அ - விகுதி, முன்னின்ற மெய்திரிதலென்பதினால் மகரம் யகரமாகித் தனிக்குறின்முன் ஒற்றுதலால் இரட்டியது. என்ன—என்று என்பதின் திரிபு. கோ என்பது அவலத்துக் கூவும் ஓரொலி யென்னவுமாம். நாடன் திரு - நளனுடைய செல்வம் போன்றவள் என்றுஞ் சொல்லலாம். மேல் என்பதின் லகரம் னகரமாகத் திரிந்தது. பண்டடிகளில் ளகரங்கள் ணகரங்களாகும்; ஸற ஆகி மெலிந்த தென்னவுமாம். திரு - உவமையாகுபெயர். (௧௦௯)

281. அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்றா, துழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண், டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீராக், கொழுந்தோட வீமன் கொடி.

281. As the joyous peacock, which when it is pierced by the arrow of the huntsman who hands a bow as destructive as fire, unable to endure the agony, rushes about

from place to place, so Damayanti ran from one place to another, falling down at times, so that the bees flew away from her plaited tresses and the tear-drops moistened her ears.

(இ-ள்.) அழல் - அக்கினிபோன்ற, வெம் சிலை வேடன் - உக்கிரமான வில்லேந்திய வேடனது, அம்பு உருவ - அம்பு பொத்துப் பாய்ந்தபோது, ஆற்றாது - சகிக்கமாட்டாமல், உழலும் - ஓடித்திரிகின்ற, களிமயில் போல் - களிப்படைந்த மயிலைப் போல், [பருவமுள்ள மயிலென்றபடி;] வீழ்ந்தொழிந்து - தடுமாறி, குழல் வண்டு எழுந்து ஓட - அளகபாரத்திலிருந்து வண்டுகள் எழுந்து ஓடவும், இருகுழை மேல் - இரண்டு காதுகளின்மேல், கண்ணீர் கொழுந்து ஓட - கண்ணீரின் துளிகள் ஓடவும், ஓடி - அங்கிங்கேயோடி, வீழ்ந்திரள் - விழுந்தாள், எ - று. (ககo)

282. வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்தது
போல், தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள் —
ஏனம், குளம்பால் மணிகிளைக்குங் குண்டுநீர்
நாடன்; இளம்பாவை கைதலைமே லிட்டு. (இ)

282. As if the clouds and lightning fell upon the bare ground, so the young doll-like daughter of king Bhima, who possessed the country in which the hoofs of the pigs dig up the precious stones in the ditches of water, placing her hands upon her head, alone as she was, fell to the ground with her plaited tresses.

(இ-ள்.) ஏனம் - பன்றிகள், குளம்பால் மணி கிளைக்கும் - குளம்புகளால் ரத்தினங்களைக் கிண்டுகின்ற, குண்டு நீர்நாடன் - பள்ளத்து நீருள்ள நாட்டையுடைய வீமனது, இளம் பாவை - இளமையான பதுமைபோன்ற மகள், தனி - ஒன்றியாகி, கை தலைமேல் இட்டு - கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு, வான் முகிலும் - பெரிய மேகமும், மின்னும் - மின்னலும், வறு நிலத்து வீழ்ந்தது போல் - வெற்றுத்தரையில் வீழ்ந்தது போலே, தானும் குழலும் - தானும் தன் கூந்தலும், வீழ்ந்தாள் —, எ - று.

குழலுக்கு முகிலும் மின்னுக்குத் தானும் உபமேயமாகக் கொள்க. "களிறுங் கந்தும் போல நளிகடற் கூம்புங் கலனுந் தோன்றும்" என்பது போல் இது எதிர் நிரனிறைப்பொருள்

கோன். [பொதுவியல் சூ-ம் கூ.] தானும் சூழலுமென்னு மிரண்டும் ஒருமைமுடிபு கொண்டதற்கு [பொ-உ-எ-சூத்திர] உரையைக்காண்க. முகிலும் மின்னும் என்னும் எழுவாய்கள் வினைமுதற்பொருளாய் வீழ்ந்தது என்னும் தொழிற்பெயரில் முடிந்தது; அத்தொழிற்பெயர், போல என்னும் வினையெச்சத்தில் முடிந்தது. வறுநிலம்—பண்புத்தொகை. தனி—முதனிலை வினையெச்சமானது "வினைமுற்றே வினையெச்சம்" என்னுஞ் சூத்திரவுரையைக் காண்க. (௧௧௧)

283. தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாங் கை
யாற் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோ
னை, வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பன
போற், கூவினவே கோழிக் குலம்.

283. Unable to endure the sorrow of Damayanti, the fowls, striking their sides (lit.-stomachs) with their wings made a noise, as if inviting the sun, in the dreadful darkness, to come with his chariot of prancing horses.

(இ - ள்.) தையல் துயர்க்கு தரியாது - தமயந்தியின் துக்கத்துக்குச் சகியாமல், தம் சிறகு ஆம் கையால் - தம்முடைய இறகுகளாகிய கைகளினால், வயிறு அலைத்து - வயிற்றை அடித்துக்கொண்டு, கார் இருள்வாய் - பயங்கரமான இருட்டில், வெய்யோனை - சூரியனை, வாவு பரி தேர் ஏறி - தாவுகின்ற குதிரைகள் கட்டிய தேர்மேலேறிக்கொண்டு, வா என்று—, அழைப்பன போல் - அழைக்கின்றவைகளைப்போல், கோழி குலம் - கோழிக்கூட்டங்கள், கூவின - கூச்சலிட்டன, எ-று. ஏ - அசை.

விடியற்காலமானதால் கோழி சிறகடித்துக்கொண்டு கூவினதைச் சூரியனை வரும்படியழைத்ததாகக் குறித்தார். தையல் என்பது ஆகுபெயராய்ப் பெண்ணுக்காயிற்று. (௧௧௨)

284. வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன் — போன
நெறி, காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்
கக் காணாதே, நீட்டுவான் செங்கரத்தை நின்று.

284. As if pointing out to that damsel the direction taken by Nala, the wearer of the victorious garland, the

sun whose jewelled chariot traverse the great pathway of heaven, standing in the midst of that forest from which the darkness had retreated, stretched forth his golden-rayed hand.

(இ - ள்.) வான் நெடு வீதி செல்லும் - ஆகாசமாகிய பெருந் தெருவிலே போகின்ற, மணி தேரோன் - ரத்தினத்தேரை யுடையவனான சூரியன், அ மடந்தைக்கு - அந்த பெண்ணுக்கு, தார் வேந்தன் போன நெறி - வெற்றிமாலையணிந்த நளமகாராசன் போன வழியை, காட்டுவான் போல் - காட்டுகிறவனைப் போல், இருள் மீள - இருட்டுப்போய், கைவாங்க - பின்னிட்டு நின்ற, அ கானூடே - அந்தக் காட்டினூடே, நின்று - நின்று, செம் கரத்தை - சிவந்த கிரணமாகிய கையை, நீட்டுவான் - நீட்டினான், எ-று. தான் - அசை.

நின்று என்பதை அசையென்னலுமாம். கைவாங்க - பின்னிடுகையில், எனவு முரைக்கலாம்.

சூரியகிரணம் நீண்டுவீழ்ந்ததைச் சூரியன் கைநீட்டி அரசன் சென்ற வழியைக் காட்டினதாகக் குறித்தார். கரம் என்னும் வடசொல் கைக்கும் கிரணத்துக்கும் பேராதலால் கிரணமாகிய கையென வுரைத்தார். இது சிலேடைபற்றிய உருவகம். நீட்டுவான் — இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாயிற்று. 'செங்கதிரை' எனவும் பாடமுண்டு. அம்மடந்தை என்பதில் மகரம் தொகுத்தலாய் அமடந்தை என்கின்றது. போல் — குறிப்புப்பொருளில் வந்தது. (ககரு)

285. செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்
றழைக்கும், எய்துதுய ரக்கரைகா ணேனென்
னும் — மையவே, என்னென்னுந் தென்னென்னு
மிக்கானின் விட்டேகு, மன்னென்னு மோடு
மயர்ந்து.

285. Then Damayanti would ask — 'What fault have I done'? She would call out 'O king that possessest great chariots' and exclaim—'I cannot see the shore terminating the sea of sorrow which I have now attained' and fainting, would ask, 'why do you not reply to my cries? O king who deserted me in that forest!' Thus exclaiming she would continue sorrowing and swoon away.

(இ-ள்.) [அக்காலத்தில் தமயந்தி,] செய்த பிழை ஏது என்னும் - நான்செய்த குற்றம் யாது என்பாள்; தோள் வேந்தே என்று அழைக்கும் - மகாரதமுள்ள அரசனே என்று அழைப்பாள்; எய்து துயரம் கரை காணேன் என்னும் - அடைந்திருக்கின்ற துக்கசாகரத்தினது கரையைக் காணமாட்டேன் என்பாள்; மைய - தளர்ந்த, என்ன எவ்விதி என் என்னும் - என்னவென்று கேளாமல் இன்னகாரணமென்பாள்; இ கானில் - இந்தக்காட்டில், விட்டு ஏகும் - (என்னை) விட்டுச் செல்கின்ற, மன் என்னு - அரசனே என்றுசொல்லி, அயர்ந்து - துக்கப்பட்டு, வாடும் - வாட்டப்படுவாள்; எ-று. ஏ - அசை.

துயரக்கரை என்பதைத் துயர் அக்கரை யெனவும் பிரிக்கலாம். இக்கரை ஆரம்பமாதலால் அதை அறிவேன்; அக்கரை முடிவு, அதையோ அறியேன் என்பது கருத்தாம். கரை என்றமையின் துயரமாகிய சாகரமென்றும். (உஅரு)

286. அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவடன்
நல்லுயிரு மாசையும்போ னாறுதலும் — மல்
லுறுதோள் வேந்தனே யென்னா விழுந்தாள்
விழிவேலை சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

286. When she saw, as if they were her own good life and her desire, the foot prints, of the lotus-like feet of Nala, whose breast was adorned with a garland of lilies [அல்லி] Damayanti exclaimed :—" O king, possessed of powerful shoulders ! " and bathed herself in the flood of tears which flowed from her sea-like eyes.

(இ-ள்.) அல்லி அம் தார் - அல்லிப் பூமாலையணிந்த, மார்பன் - மார்புள்ள நளனுடைய, அடி தாமரை - பாதங்களாகிய தாமரை மலர்கள், அவள் தன் - அந்தத் தமயந்தியினுடைய, நல் உயிரும் ஆசையும் போல் - நல்ல பிராணனும் விருப்பமும் போலே, நாறுதலும் - தோன்றினவுடனே, [பிரகாசித்தவுடனே,] மல் உறு தோள் - பலம்பொருந்திய தோளையுடைய, வேந்தனே என்னா - அரசனே என்று கூவி, விழி வேலை - கண்ணாகிய கடலினின்றும், சாய்ந்த நீர் வெள்ளத்தே - பெருகி வரும் ஜலப்பிரவாகத்திலே, விழுந்தாள் —, எ-று. தான் - அசை.

அல்லியந்தீர் என்பதில் அம் - சாரியை, அழகானவென்று பொருள் கொள்ளலுமாம். விழுந்தாமரை என்றமையின், காணு தல் பரிபாலித்தல் எனவும் கொள்ளப்பட்டது. என்று, காணு தலும் இரண்டும் வினையெச்சம். அங்கு அரசனது பாதச்சுவடு காணப்பெற்றது அவளுக்குத் தன் உயிரும் விருப்பமும் தோன் றினதுபோல இருந்ததென்பது கருத்து. அது கண்டவுடனே கண்ணீர் வெள்ளம் பெருக அங்கேயே வீழ்ந்தாளென்றதா யிற்று. (கக௫)

287. வெறித்த விளமான்காள் மென்மயில்காள் இந்த,
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர் — பிறித்தெம்
மைப், போனாரைக் காட்டுதிரோ வென்னாப்
புலம்பினாள், வானாடர் பெற்றிலா மான்.

287. The deer Damayanti that even the Gods of the celestial kingdom could not obtain, cried, exclaiming :— "O herd of deer that are stunned through fright! O soft peacocks! you will live for many ages to come in this place. Will you shew me him who separated from me ?"

(இ-ள்.) வானாடர் - தேவலோகத்தார், பெற்றிலா மான் - பெறாத பெண், [தமயந்தி,] வெறித்த - (அச்சத்தினால்) செய்கையற்று நிற்கிற, இளமான்காள் - இளமையான மான்களே, மென்மயில்காள் - மென்மையான மயில்களே, இந்த நெறிக்கண் - இந்தவழியில், நெடிது ஊழி - பெரிய யுகமுடிவு வரையில், வாழ்வீர் - வாழக்கடவீர், எம்மை பிரித்து போனாரை - எம்மை வேறுக்கிப் போன எம் அரசனை, காட்டுதிரோ என்னா - காட்டுவீரோ என்று சொல்லி, புலம்பினாள் - அழுதாள், எ-று.

நெடிது ஊழி வாழ்வீர் என்பதை விளிப்பெயராக்கொண்டு நெடுங்காலம் வாழ்கின்றவர்களே என்றும் பொருளுரைக்கலாம். எம்மை என்பது உயர்வினால் வந்த ஒருமையிற் பன்மை; என்னையும் என்மக்களையும் எனினும் ஒக்கும். நெடிது - குறிப்பு முற்றுப்பெயர், நெடு - பகுதி, து - விகுதி, இடையுகரம் இ ஆயிற்று; ஊழிக்கு விசேஷணம். ஊழி - ஊழ் - பகுதி, முடிவு செய்தல், இ - கர்த்தாப்பொருள்விகுதி; ழகரம் - கெடாமைத்

தொகைச் வடநூ லிலக்கணத்தின்படி இரண்டாம் வேற்றுமை யெனக்கொண்டு நெடிய ஊழிகாலமெல்லாமென்னைப் பொருளுரைப்பது போல். "அத்யந்த சம்யோகே த்விதியை" என்பர். காட்டுதிர்—நிகழ்கால முன்னிலைப்பன்மை வினைமுற்று; காட்டு—பிறவினைப்பகுதி, (காண் - பகுதி, டு - பிறவினைவிகுதி) இர் - முன்னிலைப்பன்மை விகுதி, த் - எழுத்துப்பேறு, விகுதி காலங் காட்டும், எதிர்கால மென்னவுமாம். (ககங)

288. வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியான்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற்கூந்தற்
போரார் விழியாள் புலர்ந்து.

288. Damayanti, upon whose tresses resembling layers of black sand swarms of bees sipped honey, and whose eyes seemed as if disposed to war with each other, seeing before her a rock snake which, from excessive hunger, had swallowed an elephant, and now lay with its stomach bloated, not knowing it was a snake, approached it.

(இ - ள்.) உண் தேன் - மது உண்கின்ற வண்டு மொய்த்த, அறல் - கருமணற் படிபோலிருக்கிற, கூந்தல் - கூந்தலையுடைய, போர் ஆர் விழியாள் - போர் செய்யுங் குணம் பொருந்திய கண்ணையுடைய தமயந்தி, புலர்ந்து - விடிய, பெரு பசியால் - அதிகப் பசியினால், வேட்ட - விரும்பின, கரியை - யானையை, விழுங்கி - கபளீகரித்து, மோட்டு வயிற்று - ஊப்பியிருக்கிற வயிற்றையுடைய, அரவு - மலைப்பாம்பு, முன் தோன்ற - எதிரில் காணப்பட, அதனை - அப்பாம்பை, மீட்டு - திரும்பி, ஓராது - அறியாமல், அருகு - சமீபத்தில், அணைந்தாள் - சேர்ந்தாள், எ - று.

கூந்தல், விழி, இரண்டையும் உம்மைத் தொகையாக் கொண்டு மேல் ஆள் விகுதியைச் சேர்க்கவுமாம். உண் தேன்—அன்மொழித்தொகை. வண்டு சொரிந்த தேன் கூந்தலுக்குக் கொள்க. உண் தேனும் அறலும்போன்ற என்னவுமாம். போர் ஆர் விழி என்பது காண்போர் மனக் கலக்கலுக்குக் குறிப்பு.

வேட்டல் வேள் - பகுதி, ட் - இடைநிலை; ஆ - பெயரெச்ச விகுதி, எகரம் டகரமானது சந்தி. வேட்டான், வேட்கின்றான், வேட்பான் என வரும். மீண்டு என்பது வலித்தலால் மீட்டு ஆயிற்று; மீள் - பகுதி, ட் - இடைநிலை, உ - விகுதி, ள் ட ஆனது சந்தி. திரும்புதல் அறிதற்குக் காரணம். (கக௭)

289. அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடை
யும் வெங்க ணரவுபோன் மெல்லியலைக் —
கொங்கைக்கு மேலெல்லாந் தோன்ற விழுங்கி
யதே வெங்கானின், பாலெல்லாந் தீயுமிழும்
பாம்பு.

289. Like the fiery-eyed serpent Raghu, which approaches the bright moon on the beautiful expanse of the heavens, the rock snake, which emitted fiery poison all over the sultry desert, swallowed up the soft-natured Damayanti, so that only that part of her body above her breasts was visible.

(இ - ள்.) அம் கண் - அழகிய இடமுள்ள, விசும்பின் அவிர் மதிமேல் - வானத்தில் விளங்குஞ் சந்திரன்மேல், சென்று அடையும் - போய்ச் சேருகின்ற, வெம் கண் அரவு போல - உக்கிரமான கண்ணுள்ள, அல்லது கோபமுள்ள இராகுவென்னும் பாம்புபோல், வெம் கானின் - வெம்மையான காட்டினுடைய, பால் எல்லாம் - இடமெங்கும், தீ உமிழும் பாம்பு - (விடமாகிய) அக்கினியைக் கக்குகின்ற அந்த மலைப்பாம்பு, மெல் இயலை - மென்மையான சுபாவமுள்ள தமயந்தியை, கொங்கைக்கு மேல் எல்லாம் தோன்ற - முலைக்குமேற்பட்ட அவயவமெல்லாங் காணப்படும்படி, விழுங்கியது - உண்டுவிட்டது, எ - று. ஏ - அசை.

அவிர்மதி - வினைத்தொகை. விழுங்கியது — விழுங்கு - பகுதி, இன் - இடைநிலை, ன் கெட்டது; அ - சாரியை, து - விகுதி, யகர உடம்படுமெய்; இடைநிலை ன் கெட்டபோது இச்சாரியை வாராது; விழுங்கிற்று இவ்விடைநிலை முதல் கெடுதலு முண்டு; வினைமுற்று. (கஎ௮)

290. விள்ளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவ
னின், தள்ளுண்டு வாழுந் தமியேனைத் —

தோளால், விலக்காயோ வென்றழுதாள் வெவ்
வரவின் வாய்க்கிங், கிலக்காகி நின்றா ளெடுத்து.

290. Damayanti, who had fallen a victim to the mouth of that cruel snake in the forest, crying aloud, said :— "O king! before I die a victim in the mouth of this glittering serpent, can you not with your powerful shoulders save me who am fit to live doing service to your feet?"

(இ-ள்.) இங்கு - இக்காட்டில், வெம் அரவின் வாய்க்கு - உக்கிரமானபாம்பின் வாய்க்கு, இலக்கு ஆகி நின்றாள் - லக்ஷியமாகிநின்ற தமயந்தி, [பாம்பினால் விழுங்கப்பட்ட தமயந்தியென்கிறபடி,] மன்னவ - நளமகாராசனே, வாள் அரவின் வாய்ப்பட்டு - பிரகாசமுள்ள பாம்பின் வாயில் வீழ்ந்து, மாயா முன் - சாகா முன்னமே, நின் தாள் அடைந்து வாழும் - உன்பாதத்தையடைந்து வாழத்தக்க, தமியேனை - ஆதரவற்ற என்னை, தோளால் விலக்காயோ - புஜபலத்தினால் விலக்கிக் காக்கமாட்டாயோ, என்று—, எடுத்து - குரலெடுத்து, அழுதாள்—, என்று.

வாளரவு என்பதற்கு வாள்போன்ற அரவென்று பொருள் கூறுவது நேர். (உ௯0)

291. வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயரால் போயாவி மாள்கின்றேன்—இன்
றுன் திருமுகமான் காணகிலேன் றேர்வேந்தே
யென்றாள், பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து.

291. Damayanti, whose eyes were as a lance sharpened for battle, fainting exclaimed :—"O Nala who possessest chariots! I have fallen into the cruel mouth of this conquering and angry snake, and through excessive sorrow I am dying. I cannot this day see your handsome face."

(இ-ள்.) பொருமுகம் - போர் செய்யத்தக்க முகமுள்ள, வேல் கண்ணாள் - வேல்போன்ற கண்களையுடைய தமயந்தி, புலர்ந்து - துக்கத்தால் வாடி, தேர் வேந்தே - ரதாதிபதியான நளமகாராஜனே, வென்றி சினம் அரவின் - வெற்றி பெறும் (படியான கோபமுள்ள பாம்பினது, வெம் வாயிடை பட்டு - வெம்மையான வாயில் வீழ்ந்து, வல் துயரால் - கடினமான துக்கத்தினால், ஆவி போய் - பிராணன்போய், மாள்கின்றேன்—

தென்னலாம். மற்றொருடுத்ததோள் — அன்மொழித் தொகையாய் அரசனுக்கு மாகும். ஏன் — ஓரிடைச்சொல், உம்மையோடு கூடியே வரும், காரேனும் என்பதில் சிறப்புப்பொருள்; நீரேனும் என்பதில் விகற்பம், இது பிரிநிலையுங் காட்டும்; ஏனும் என்று ஒரு மொழியென்பாரு முளர். காண்குதிர் — காட்டுதிர் என்பதுபோல் கொள்க; எதிர்காலம், கு - சாரியை; உகரச்சாரியைபெற்றுக் காணுதிர் எனவும் வரும். (உகூஉ)

293. அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே யோகோ — விடை
யெனக்குத், தந்த்ருள்வா யென்னுத்தன் றாம
ரைக்கை கூப்பினாள், செந்துவர்வாய் மென்
— மொழியா ளோர்ந்து.

293 Damayanti with a mouth like red coral, and soft speeched, having fallen into the mouth of the dancing snake, in the dence forest which she was traversing, was distracted in mind. Being sure of death, she clasped her lotus-like hands and exclaimed :—" Alas ! husband of my life, you must now allow me to bid you farewell !"

(இ-ள்.) செம் துவர் வாய் - சிவந்த பவளம்போன்ற வாயையுடைய, மென் மொழியாள் - மெத்தென்ற பேச்சையுடைய தமயந்தி, அடையும் கடு கானில் - தான் அடைந்த கடுமையான காட்டில், ஆடு அரவின் வாய் பட்டு - ஆடுகின்ற பாம்பின்வாயில் விழுந்து, உடையும் - (மனம்) உடைந்துபோவாள்; ஓர்ந்து - (தன் மரணத்தை) நிச்சயித்து, உயிர் நாயகனே—, ஓகோ - ஐயோ; எனக்கு விடை தந்தருள்வாய் என்னு - எனக்கு உத்தரவு தந்தருளவேண்டு மென்றுசொல்லி, தன் தாமரை கை கூப்பினாள் - தனது தாமரைபோன்ற கையைக் குவித்தாள், எ - று.

ஓகோ - அவயக்குறிப்பிடைச்சொல்; உடையும் என்பதைப் பெயரெச்சமாக்கொண்டு எனக்கு என்பதோடு கூட்டலாம். ()

294. உண்டோ ரழுகுரலென் றோற்றி வருகின்ற
வெண்டோடன் செம்புங்கி வில்வேடன் —
கண்டான், கழுகுவாழ் கானகத்துக் காரரவின்
வாயின், முழுகுவா டெய்வ முகம்.

294. A hunter, with pendants of bleached bones to his ears, and red locks of hair, passing close by with a bow, and hearing the sound of cries, saw the divine face of her who was half swallowed by the mouth of the great snake in the forest where the vultures lived.

(இ-ள்.) ஓர் அழு குரல் உண்டு என்று - (இக்காட்டில்) அழுகின்ற ஓசை ஒன்று கேட்கப்படுகிறதென்று, ஒற்றி - உற்றுக் கேட்டு, வருகின்ற - வருகிறவனாகிய, வெள் தோடன் - வெள்ளெலும்பினாற் செய்த காதணி யுடையவனும், செம் பங்கி - சிவந்த தலைமயிருள்ளவனும் ஆகிய, வில் வேடன் - வில்லை யுடைய வேடன், கழுகு வாழ் கானகத்து - கழுகுகள் வாழ்கின்ற காட்டில், கார் அரவின் வாயில் - பெரும்பாம்பினது வாயிலே, முழுகுவாள் - அமிழ்கின்றவளுடைய, தெய்வ முகம் - தெய்வத்தன்மை பொருந்திய முகத்தை, கண்டான்—, எ-று.

வெள்தோடன் என்னுமிடத்துத் தகுதிபற்றி வெள்ளெலும்பெனக் கொள்ளப்பட்டது. முகத்துக்குத் தெய்வத்தன்மையாவது, பார்த்தவுடனே இவள் தேவாமிசம் பொருந்தினவளென்று தோன்றுகை, கழுகுவாழ் கானகம் என்றது காட்டின் கொடுமைக்குக் குறிப்பு. (உகூச)

295. வெய்ய வரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயமியான்—உய்ய
அருளீரோ வென்னா வரற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளொடுத்து.

295. Damayanti, the brightness of whose jewels dispelled the darkness, full of fear exclaimed :—"O sir! I have fallen into the venomous mouth of this terrible serpent. I take refuge in you. Will you not have mercy on me and bid me live?"

(இ-ள்.) வெய்ய அரவின் விட வாயினுள் பட்டேன் - உக்கிரமான சர்ப்பத்தினுடைய விஷம்பொருந்திய வாயில் விழுந்தேன், ஐயன்மீர் - ஐயமாரே, உங்கட்கு யான் அபயம் - உமக்கு யான் அடைக்கலமாகின்றேன், உய்ய அருளீரோ - (நான்) பிழைக்கும்படி கிருபை செய்யமாட்டீர்களோ, என்னா - என்று, இருள் ஈரும் பூணாள் - இருளை நீக்குகின்ற ஆபரணங்

தனையுடைய தமயந்தி, அஞ்சி - பயப்பட்டு, எடுத்து அரற்றினள் - குரல் எடுத்துக் கூவினள், எ-று.

ஐயன் என்பது ஆரியன் என்னும் வடசொல்லின் திரிபு; மரியாதை செய்யத்தக்கவன் என்பது பொருள்; உயர்வினால் ஒருமையிற் பன்மை வந்தது. ஐயன் என்னுஞ் சொல்லின்மேல் "அன் ஆன்" என்னுஞ் சூத்திரத்தில் "பெயரினுஞ் சிலவே" என்பதனால் பலர்பாலுக்குமார் விகுதி வந்தது. [பொதுவியல் நிஉ-ம் சூ] "ரவ்வீற்றுயர் பெயர்க் களபெழல்" என்னுஞ் சூத்திரத்தில் "ஆண்டையா ஈ ஆதல்" என்றமையின் அயல் ஆகாரம் விளியில் ஈகாரமாயிற்று. (கஉச)

296. தங்க நிதிபோற் றருசந் திரன்சுவர்க்கி, வெங்க லிவாய் நின்றுலக மீட்டாற்போல்—மங்கையை வெம், பாம்பின்வாய் நின்று பறித்தான் பகை கடிந்த, காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

296. As Chandraswarki, who like the golden conch of Kuvera could bestow any thing, recovered the world from the cruel Kali, the hunter who possessed a bamboo bow with which he slew his enemies, seeing what happened, drew Damayanti out from the mouth of the cruel snake.

(இ-ள்.) சங்க நிதி போல - சங்கமென்கிற ஒரு நிதியைப் போல, [illegible] கொடுக்கின்ற, சந்திரன் சுவர்க்கி - சந்திரன் சுவர்க்கி யென்பவன், வெம் கலிவாய் நின்று - வெப்பமான கலியினிடத்திருந்து, உலகம் மீட்டாற்போல் - உலகத்தை மீட்டுக்கொண்டு வந்ததுபோல, பகை கடிந்த - சத்துருவை நீக்கின, காம்பின் வாய் - மூங்கிலினால் வாய்த்த, வில் - வில்லையுடைய, வேடன் கண்டு - பார்த்து, வெம் பாம்பின் வாய் நின்று - உக்கிரமான பாம்பின்வாயிலிருந்து, மங்கையை - தமயந்தியை, பறித்தான் - இழுத்துப்போட்டான், எ-று.

உலகத்தைக் கலிவாயினின்று மீட்டலாவது, அயோக்கிய தாரியங்களினின்றுந் திருப்பித் திருந்தச்செய்தல். வாய்—வாய்த்த என்னும் பெயரெச்சந்திரிந்த வினைத்தொகை. வாய் நின்று — நின்று ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு, நீக்கப் பொருளில் வந்தது. (கஉரு)

297. ஆருயிரு நானு மழியாம லேயரவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய் — தேரில்
இதற்குண் டோ கைம்மா றெனவுரைத்தாள்
வென்றி, விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு.

297. Damayanti, the daughter of the victorious king of Vidarpa addressing the hunter said:—"O sir! you have saved me from the mouth of this huge serpent, and prevented my precious life and myself from being destroyed. When we consider the matter, is there any return obligation of equal value? No."

(இ-ள்.) வென்றி விதர்ப்பன் - வெற்றியுள்ள விதர்ப்பராஜன், பெற்ற விளக்கு - தமயந்தியானவள், ஐயா—, ஆர் உயிரும் - அருமையான உயிரும், நானும்—, அழியாமல் - நாசமாகாமல், இப் பேர் அரவின் வாயில் - இந்தப் பெரும்பாம்பின் வாயினின்றும், பிழைப்பித்தாய் - பிழைக்கச்செய்தாய், தேரில் - நன்றாய் யோசித்துப் பார்த்தால், இதற்கு கைம்மாறு உண்டோ இதற்குப் பதிலுபகாரமுண்டோ, என - உரைத்தாள் என்று சொன்னாள் (அவ்வேடனை நோக்கி,) ஏ - ற் - தான்-அசை.

"தனியைந்நொது முன்மெலி மிகலுமாம்" என்றமையின் கைம்மாறு என்பதில் மகரமிகுந்தது. (கை - உபகாரம். மாறு - மாறுவது,) மாறுவதாகிய உபகாரம். (கஉ-கூ)

298. இந்து நுதலி யெழினோக்கி யேதோதன்
சிந்தை கருதிச் சிலைவேடன் — பைந்தொடீஇ
போதுவா யென்னுடனே. யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

298. Regarding the beauty of Damayanti, whose forehead was like the crescent moon, and entertaining an immoral desire at heart, this archer who was worthy of the depths of hell, said:—"O thou adorned with bangles of burnished gold! Come with me"

(இ-ள்.) இந்து நுதலி - சந்திரன்போன்ற நெற்றியையுடைய தமயந்தியினது, எழில் நோக்கி - அழகைப்பார்த்து, ஏதோ - ஏதையோ, தன் சிந்தை கருதி - தன் மனதில் நினைத்து, புலை நரகுக்கு - ஈனமான நரகத்துக்கு, ஏதுவாய் நின்றான் - பயனுய்

நின்றவளாகிய, சிலை வேடன் - வில்லையுடைய வேடன், பைந் தொடி - பசும்பொன்னாலாகிய வளைகளை யணிந்தவளே, நீ—, என்னுடனே போதுவாய் - என்னோடு வா, என்றான் எடுத்து - என்றெடுத்துச் சொன்னான், எ - று.

பயனும் ஏதுவாம். பைந்தொடி — பசுமையில் ஈறுபோய் அடி அகரம் ஐயாகி சு என்பதும் கெட்டுநின்ற பை என்பதின் முன் வருமெழுத்துக்கு இனமிகுந்து தொடி என்பதோடு புணர்ந்தது; பண்புத்தொகைப்புறத்துவந்த அன்மொழித்தொகை; அண்மை விளியாதலின் இயல்பு. தற்காலம் வளையில்லா விடினும் கையில் வளையணிந்திருந்த வடுநோக்கி அங்ஙனம் விளித்தானென்க் கொள்க. போதுவாய்—புகுது போது ஆயிற்று; ஆய - ஏவலொருமை விகுதி - சிந்தித்தலுக்குக் கருவியாதலால் சிந்தை—ஐ கருவிப்பொருள் விகுதி, பகுதி இகரங் கெட்டது சந்தி. (௨௱௯௰௭)

299. வேட னழைப்ப விழிபுதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா—ஓடினாள்
தூறெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது.

299. On the hunter calling her, Damayanti who possessed curly locks, blinking with her eyes and drawing a hot breath, and becoming troubled like a dancing peacock, cried; so that the streets flooded with the tears from her lance-like eyes and rushed among the bushes.

(இ-ள்.) வேடனழைப்ப - வேடன் அழைக்கையில், விழி புதைத்து - கண்புதைத்து, வெய்து உயிரா - வெப்பமாக மூச் செறிந்து, ஆடல் மயில்போல் - ஆடுதலையுடை மயிலைப்போல், அலமரா - வருத்தப்பட்டு, சுரி குழல் - சுரிந்த அளகத்தை யுடைய தமயந்தி, வேல் கண்ணின் நீர் - வேல்போன்ற கண்ணின் நீரானது, ஆறெலாம் ஆக - வழியெல்லாம் ஓடும்படி, அழுது—, தூறெலாம் - புதர்களிலெல்லாம், ஓடினாள்—, எ-று.

தூறெலாமாக என்னுமிடத்தி லுள்ள ஆக என்பது அசை. அலமரா — அலமரு - பகுதி, செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (௨௱௯௰௮)

300. தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போ
ஆக்கை தளர வலமந்து — போக்கற்றுச்
சீறு விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து.

300. Like the young deer, which flees when pursued by the fiery-eyed tiger, Damayanti through fear became faint in body, and troubled, and not finding any way to escape, turned and stared at him angrily and the archer fell to the ground in ashes.

(இ - ள்.) தீக்கண் புலி தொடர - நெருப்புப்போன்ற கண்ணையுடையபுலியானது - தொடர்ந்து வருவதினால், செல்லும் - ஓடுகின்ற, சிறு மான் போல் - இளமானைப்போலே, ஆக்கை தளர - (பயத்தினால்) உடம்பு தளர்ந்துபோக, அலமந்து - அங்குமிங்குஞ் சுற்றிச்சுழன்று, போக்கு அற்று - போகும்வழி இல்லாமல், சீறு - சீறி [கோபித்து], விழித்தாள் - கண் திறந்து பார்த்தாள்; அவ்வளவில் - அக்காலத்தில், சிலை வேடன் - வில்லையுடைய வேடன், நீறு ஆய் - சாம்பலாய், நிலத்து விழுந்தான் - தரையிலே விழுந்தான், எ - று.

மகா பதிவிரதையாதலால், கோபித்துப் பார்த்தவுடனே அந்தக் கொடியவன் சாம்பலானான் என்பதாம்.

அலமந்து — அலமா - பகுதி; இது, வா, தா, என்பனபோல நிகழ் எதிர்காலங்களில் அலமரு எனத் திரிந்துவரும். [அலமரு பகுதி யெனில் இறந்தகாலப் புடை] பெயர்ச்சி பெற்றுநின்றது. சீறு — செய்யா என்னும் வாய்பாட்டெச்சம். போக்கு — வழிக்கு ஆகுபெயர். (கஉக)

301. வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோன் மீ
ழித்தழன்மீ மண்டு கொடுஞ்சுரத்தோர் பாலழு
ருந்து — பண்டையுள் வாழ்வெல்லாந் தானி
னைந்து மற்றழுதாண் மன்னிழைத்த தாழ்வெல்
லாந் தன்றலைமேற் றந்து.

301. Damayanti, recalling her former days of greatness and attributing the king's behaviour to her own fate, stood aside and wept in that forest which burnt with fire, like the large families who opposed the sages versed in fertile Tamil lore.

(இ - ள்.) வண் தமிழ் வாணர் - அழகிய தமிழில் வல்லவரை, பிழைத்த - தப்பின, [அவர்க்கு அபராதப்பட்ட], வான் குடி போல் - மேன்மையான வமிசத்தைப்போல், தீ தழல் - தீய அக்கினி, மீ மண்டு - மேற்கொண்டு நெருங்கப் பெற்றிருக்கிற, கொடும் சுரத்து - கொடுமையான பாலை வனத்திலே, ஓர் மாடு இருந்து - ஒரு புறமிருந்து, பண்டை உள - முன்பிருந்த, வாழ்வு எல்லாம் நினைந்து - போகங்களையெல்லாம் நினைத்து, மன் இழைத்த - அரசன் செய்த, தாழ்வு எல்லாம் - தாழ்மைகளை யெல்லாம், தன் தலைமேல் தந்து - தன் தலைவிதியின்மேல் வைத்து, அழுதாள் —, எ - று.

வித்துவான்கள் திறத்தில் அபராதப்பட்ட குடி தீப்பட்டு வேவதுபோல் வெந்துகொண் டிருக்கிறது சுரம் என்கிறபடி. அரசன் தனக்குச் செய்த தீங்குகள் தன் விதிவசத்தால் நேர்ந் தனவே யன்றி அவன் கொடுமையால் செய்தனவல்லவென் றெண்ணினாள் என்பதை "மன்னிழைத்த தாழ்வெல்லாந் தன் றலைமேற் றந்து" என்றார். தான் - மற்று - அசைகள். "வண்டமிழ் வாணர்ப் பழித்த" எனவும் பாடமுண்டு. வாணர்ப் பிழைத்த—உயர்திணைப் பெயராயினும், இரண்டாம் வேற்றுமைச் சிறப்புவிதியால் வலிமிக்கது. [நன் - உருபு புணர் சூ - ௧௬.] இரண்டனுருபு ஏற்றுக் கோட்பொருளில்வந்தது [பெயர். சூ - ௩௧.] பண்டை — பண்டு என்னும் குற்றுகரம் ஐகாரச்சாரியை பெற்றது [உயிர். சூ - ௩௫.]

தமிழ்வாணர்—வாள் (ஒளி) - பகுதி, நர் - உடைமைப்பொருளில்வந்த பலர்பால்விகுதி, சந்தியில் ளகர நகரங்கள் ணகரமாகி முந்திய ணகரம் கெட வாணர் என்றும். தமிழில் வாணர் விளங்குவோர், தமிழ்வாணர்; அல்லது வாழ்நாள் என்பது வாணாள் என்றானதுபோல் வாழ்நர் என்பதும் வாணர் என்றாயிற் றெனக்கொண்டு முன்போலக் கூட்டிக் கொள்ளலாம். கீர்வாணர் என்பதற்கு வடநூலார், கீர் - வாக்கை, வாணர் - பாணமாக வுடையவர் என்று பொருள்கூறியதுபோல் தமிழ் ஆகிய பாணத்தை யுடையவரெனவும் பொருள் கொள்ளத் தகுமென்று எமக்குத் தோன்றுகின்றது. கீர்வாணர் தேவர்; வாக்கைக்கொண்டே ஜயிக்கவல்லவர் என்பது அதன் பொருள்.

அப்படியே தமிழ்வாணர், தமிழைக்கொண்டு வெல்ல வல்லவர் என்பது பொருளாம். தமிழ் என்பது திரமிடமென்னு மாரியத்தின் சிதைவு. (௩௰௦)

302\. அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவு தீவினையே னென்பாடன் மெய்வடி
வைக் கண்டா னையுற்றான் கமலையி வளேயென்
றான், உண்டாய தெல்லா முணர்ந்து.

302\. At that time, a thoughtful merchant passing along the broadway, saw the physical beauty of Damayanti, who reproached herself with being a great sinner, and doubting when he saw all that had happened, thought she could be no other than the goddess who resides in the lotus.

(இ - ள்.) அவ்வளவில் - அக்காலத்தில், ஆதி பெருவீதியில் - முதன்மையான பெரியவீதியில் போகின்ற, ஆய் வணிகன் - ஆராயுந்தன்மையுடைய வர்த்தகன், இவ்வளவு தீவினையேன் - இவ்வளவு தீவினை செய்தவள் யான், என்பாள் தன் - என்றுசொல்லுகிற - தமயந்தியின், மெய் வடிவை - தேகத்தின் அழகை, கண்டான் -, ஐயுற்றான் - சந்தேகித்தான், கமலை இவளே என்றான் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பெண்ணாகிய திருமகளே என்று சொன்னான், உண்டாய தெல்லாம் - உண்டான காரியங்களையெல்லாம், உணர்ந்து - அறிந்து, எ - று. [உணர்ந்து சொன்னான் எனக் கூட்டிக்கொள்க.]

இவ்வாக்கியம் மேற்பாட்டோடு குளகமாக முடியுமென அறிக. குளகமாவது பலபாட்டு ஒரு முடிபாய் வருவது. அங்ஙனமின்றித் தனியே முடிவது முத்தக மெனப்படும்.

புசித்து வாடி சோர்ந்து கண்ணீரொழுக மனங்கலங்கித் தவிப்பதை "உண்டாயதெல்லாம்" என்றார். இவள் வடிவைப் பார்க்க இவள் சகல சுலக்ஷணங்களோடுங் கூடிச் சகல பாக்கியங்களையும் பெறத்தக்கவள் இவ்வளவு தீவினையேன் என்பது ஏன்னென்று "ஐயுற்றான்" என்பதாம். தெய்வப் பெண்ணோ மானிடப்பெண்ணோ என ஐயுற்றானெனினு மொக்கும். ஆய் வணிகன் — வினைத்தொகை. காரியங்களை யோசித்து அறிய

இல்லவன் என்றபடி. ஐயுற்றான்—காழ்ம் உற்றான் காழுற்றான் என்பதுபோல், ஐயுற்றான் ஐயுற்றான் என்று ஆயிற்று. (கஉக)

303. எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்
பேர்; நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—
மைக்குழலாய், கட்டுரைத்துக் காணென்றான்
கார்வண்டு காந்தாரம், விட்டுரைக்குந் தார்வணி
கர் வேந்து.

303. The chief of the merchants, who wore a garland on which the beautiful bees hum, addressing Damayanti, said :—"O! thou raven-tressed one! In what family were you born? Whose wife are you? Which is your native place? What is your name? Why do you thus weep and why are you faint and troubled in mind? Explain all this to me clearly".

(இ - ள்.) கார் வண்டு - கறுப்பான (அல்லது) அழகான வண்டுகள், காந்தாரம் விட்டு உரைக்கும் - இராகத்தை வாய் விட்டுச் சொல்லுகிற, தார் - மாலையைத்தரித்த, வணிகர் வேந்து - வர்த்தகருடைய தலைவன், மை குழலாய் - கறுப்பான கூந்தலுள்ளவளே, நீ—, எக் குலத்தாய் - எந்த வம்சத்திற் பிறந்தவள், யார் மடந்தை - யாருடைய மனைவி, உன் ஊர் யாது - உன் வாசஸ்தலமெது, உன் பேர் யாது - உன் நாமதேயமென்ன, நெக்கு - தளர்ந்து, உருகி - மனங் கரைந்து, அழுதற்கு நிமித்தம் என் - அழக்காரணம் யாது, கட்டுரைத்து காண் என்றான் - திருத்தமாய்ச் சொல்லு என்றுசொன்னான் (தமயந்தியை நோக்கி), எ - று.

காண் - அசை. அல்லது உரைப்பதனால் வரும் பயனைப்பார் எனவும் பொருள்கொள்ளலாம். நீ யேன் வினவுகின்றாயென்று இகழாமல் உரை யென்பதாம். மைக்குழலாய்—விளி. [பெய - ருக - ஆத் - விதியால்] ள் - ய் ஆயிற்று. எக்குலத்தாய்—முன்னிலை யொருமைக் குறிப்பு முற்று: ஆய் - விகுதி. நெக்கு—ஆதனிலேயே வினையெச்சப்பொருளில் வந்தது. எக்குலத்தாய் எக்குலத்திற் பிறந்தவள், யார்மடந்தை யாருடையமகள் எனவுமாம். தனிக்குறிலணையாத யகரம் யகரம் வரக் கெடும் ஆதலின் எக்குலத்தா யார் என்றாயிற்று. (கஉஉ)

[தமயந்தி வணிகனை நோக்கி]

304. முன்னை வினையின் வலியால் முடிமன்னன்
என்னைப் பிரிய விருங்கானில்—அன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்
பூணாரம் பூண்டாள் புலர்ந்து.

304. Damayanti, who wore glittering brilliants, said :— "On account of the wretchedness of my sin, committed in a former birth, the excellent Nala, who wears a noble crown, deserted me in this forest and on that account, being unable to find him, I weep."

(இ - ள்.) கதிர் இமைக்கும் - கிரணங்கள் பிரகாசிக்கின்ற, பூண் ஆரம் பூண்டாள் - முத்துமாலைகளைத் தரித்தவளாகிய தமயந்தி, புலர்ந்து - , முன்னை வினையின் வலியால் - (நான்) பூர்வ சன்மத்திற் செய்த பாவத்தின் கொடுமையினாலே, முடி மன்னன் - (யாவர்க்கும் மேலானவனென்று) சிறந்த கிரீடந் தரித்த மகாராசன், இரு கானில் - பெரிய காட்டினிடத்தில், என்னை பிரிய - என்னைவிட்டு நீங்கினதினால், அன்னவனை காணாது - அவனைக் காணாமல், அழுகின்றேன் என்றாள் - , ஃ-று.

யான் இன்றன்மைகள் இன்னதன்மையின என்று எல்லாவற்றையும் குறிப்பா லுரைத்ததைக் கவி சுருக்கிப் பாடினாரென அறிக. "கதிரிமைக்கும் பூணாரம் பூண்டாள்" என்பது தமயந்தியின் நிலைமையைக் கொண்டுரைத்தபடி; இது இங்கே அவளிருக்கும் நிற்கும் நிலையைக் குறிப்பிக்கின்றது. பூண் ஆரம் - பூணத்தக்க முத்தாரங்களையும் எனவுமாம். "பூணார் முலையாள்" எனவும் பாடம்.

305. சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டுப்
போதிற் கொடைவணிகன் போயினான்—நீதி
கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்
நடத்துவான் வட்டை நடந்து. [மேல்

305. Then taking the Lakshmi-like Damayanti and leaving her in a town in the சேதி country, that charitable merchant who was able to support justice and who published abroad the glory of kings, went on his way.

(இ - ள்.) அப்போதில் - அக்காலத்தில், திருவை - இலக்குமி போன்ற தமயந்தியை, சேதி நகர்க்கு செலவிட்டு - சேதி தேசத்துப் பட்டணத்துக்குப் போகச்செய்து, பார்மேல் நீதி நடத்துவான் - பூமிமேல் நீதியைத் தங்கச்செய்ய வல்லவனும், மன்னவர்தம் கீர்த்தியினை நடத்துவான் - அரசருடைய புகழை வியாபிக்கச் செய்ய வல்லவனுமாகிய, கொடை வணிகன் - கொடுக்குந் தன்மையுள்ள அந்த வர்த்தகன், வட்டை நடந்து போயினான் - வழியில் நடந்து போனான், எ-று.

வட்டை - தேர் எனக்கொண்டு, தேரால் நடந்து சென்றனெனினு மமையும்; வட்டை என்பது வாட்டை என வழங்குகின்றது. ஏ - அசை. வாணிகம் பொய்கலந்த மெய்யாயினும் இவன் மெய்யுரவாய் நடப்பவனென்பது பற்றி நீதி நடத்துவான் என்றும், இந் நல்லொழுக்க முடையவன் பலநாட்டிலுஞ் சென்று வருதலினாலும் வாணிக வளப்பத்தினாலும் அரசர்க்குப் புகழ் விளங்குகின்றதென்பதுபற்றிக் கீர்த்தியினை நடத்துவானென்றுங் கூறினர். நல்வணிகர் நாட்டிலிருப்பது அரசர்க்கு மேன்மையென்று நீதிசாஸ்திரம். செலவிட்டு நடத்துவானென்று கூட்டிக்கொள்க. (௩௦௫)

306. அற்ற துகிலு மறுதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையளாய் — மற்றொருத்தி
நின்றாளைக் கண்டோ நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவா ரெடுத்து.

306. Some of the damsels in the harem, addressing the Queen said:—"O thou beautiful consort of the ruler of the earth! We saw in this town, a maiden with half a garment, shedding tears incessantly, and afflicted with great sorrow."

(இ - ள்.) மடவார் - அந்தப்புரத்துப் பெண்கள் சிலர், நிலவேந்தன் பொன் தேவி - நிலத்தையாளு மரசனுடைய பொன் போன்ற மனையாளே, அற்ற துகிலும் - பாதியறுந்த வஸ்திரமும், அறாது ஒழுகு - நீங்காமல் ஒழுகுகின்ற, கண்ணீரும் —, உற்ற துயரும் உடையளாய் - அதிகமான விசனமும் அடைந்தவளாய், நின்றாளை - நின்றவளாகிய, ஒருத்தி - ஒரு பெண்ணை,

உள்ளவா றெல்லா முரையென்று ளொண்மல
ரின், கள்ளவார் கூந்தலாள் கண்டு.

308. The consort of the king சேதி whose long tresses were moistened with the honey from the bright flowers, looking at Damayanti, and doubting whether this was not the goddess who resided in the beautiful lotus, exclaimed:—"O thou adorned with green bangles! as my mind is still in suspense, tell me everything truthfully."

(இ - ள்.) [அந்த நகரத்தில் அவளைப்பார்த்து] ஒள் மலரின் - விளக்கமான புஷ்பங்களிலுடைய, கள் - தேனையுடைய, வார் கூந்தலாள் - நீண்ட கூந்தலையுடைய சேதியரசி, கண்டு - (தமயந்தியைப்) பார்த்து, அம் தாமரையிலவளோ என்று - (இவள்) அழகிய தாமரையி லிருக்கிற திருமகளோ என்று ஐயுற்று - சந்தேகித்து, பைந்தொடியே - பச்சிய வளைகளையணிந்தவளே, சிந்தாகுலம் எனக்கு தீராது - சிந்தைக்கலக்கமெனக்குத் தீரவில்லை, உள்ளவாறு எல்லாம் உரை - உள்ளபடியாக எல்லாவற்றையுஞ் சொல், என்றாள் —, எ - று.

பெண்ணே உன்னைப்பார்க்க எனக்குப் பலவிதமாகச் சிந்தை கலங்கி வருத்த முண்டாகின்றது. அதனால் உண்மையாக உன் சங்கதிகளைச் சொல்லென்றாள் என்பது கருத்து. உதிர சம்பந்த முண்டா யிருப்பதனால், இன்னாளென்று அறியாத போதும் தற்செயலாய் மனம்பதைப்பது உலகவியல்பு. இவளைக் கண்டவுடனே ரூபலாவணியங்களினால் திருமகளென்று சந்தேகித்தும் படுந்துன்பநோக்கி மனம் வியாகுலப்பட்டாள் என்க. ஆல் - அசை. (கஙஎ)

309. என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்
தேக, அன்னவனைக் காணா தலமருவேன் —
இந்நகர்க்கே, வந்தே னிதுவென் வரவென்
றாள் வாய்புலராச், செந்தேன் மொழிதளர்ச்
சோர்ந்து.

309. Damayanti, her lips being parched, and her speech which was as sweet as pure honey, faltering said:—"Not being able to find my husband, who separa

சேதிராசன் மூத்தவரினேர் இந்த முறையே ரின் - நின்று
யற்றிந் திருப்பவரா தலின் அவள் அவளைத் தழுவித்தியென்று
ஒன்றே விசனப்படும்போது, யாவரும் அறிந்து உடல் உயிரைப்
பொருந்தினதுபோல் மிக்க காதலோடு அவளைப் பொருந்தி
யிருந்தார் என்பது கருத்து. பெருக்க - என்பதனால் கண்ணீர்
அவள் மேற்பட வெந்நீர்போல் கொதித்த தென்பதாம். (கூ௨௩)

314. மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த காரி
கைதான் பட்ட துயர் கண்டாயோ—சோர்குழ
லும், வேணியாய் வெண்டுகிலும் பாதியாய்
வெந்துயருக், காணியாய் நின்றாள் அயர்ந்து.

314. The Brahmin, addressing the Queen of the சேதி country, said, " O thou whose tresses resemble the clouds! Have you seen the sorrow which has fallen your daughter? With her hair dishevelled and matted and her clean garment rent in half; she is transfixed in her sorrow, as the linch-pin in a chariot.

(இ - ள்.) [அவ்வரசியை நோக்கிப்பார்ப்பான் சொல்லியது.] மாரி பொரு கூந்தல் மாதராய் - மேகத்தை யொத்த கூந்தலையுடைய பெண்ணே, நீ பயந்த காரிகை - நீ பெற்ற பெண், பட்ட துயர் கண்டாயோ - அனுபவிக்கிற துன்பத்தை யறிந்தையோ, சோர் குழலும் - தொங்குங் கூந்தலும், வேணி ஆய் - சடையாய், வெண் துகிலும் - சுத்தமான வஸ்திரமும், பாதியாய— அயர்ந்து - வருந்தி, வெம் துயருக்கு - கடினமான துக்கத்திற்கு, ஆணியாய் நின்றாள் அச்சாணிபோல் [ஆதாரமாய்] நின்றாள், எ-று.

மாதர் - அழகு, அதையுடையாள் மாதராள். விளியில் ஏகாரம் யகரமாயிற்று. வெண்மை இலக்கணையால் சுத்தத்திற்குக் கொள்ளப்பட்டது. தான் - அசை. உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. (௯௧௩)

315. தன்மக்க ளாவர் தறியர்த் தடுமாறும் பொன்வடி
வின் மேலழுதுபோய் வீழ்ந்தாள்—மென்மலரைக், கோதிப்போய் மேதி குருகெழுப்பும்
தண்பணைசூழ், சேதிக்கோன் றேவி திகைத்து.

315. The consort of the king of சேதி country, which is surrounded by cool fields, in which the buffaloes disturb with their horns the flowers in the water, and frighten away the cranes, becoming faint, and recognizing her as her daughter, was agitated, and falling on Damayanti wept.

(இ - ள்.) மென் மலரை - மெல்லிய நீர்ப்பூக்களை, கோதிப்போய் - கொம்புகளாற் கோதிப்போய், மேதி - எருமைகள், குருகு எழுப்பும் - நாரைகளை யெழுப்புகின்ற, தண் பணை சூழ் - குளிர்ச்சியான வயல் சூழ்ந்த, சேதி கோன் தேவி - சேதி தேசத்தரசன் மனைவி, திகைத்து - பிரமித்து, தன் மகளாவது அறியா - தன்புத்திரியா யிருப்பதை யறிந்து, தடுமாறு தத்தளித்து, போய—, பொன் வடிவின்மேல் - தமயந்திமேல், அழுது வீழ்ந்தாள் - வீழ்ந் தழுதாள், எ-று.

தடாகங்களிற் பூவைக் கொம்பாற்கோதி எருமைகள் வருவதனால் நாரைகள் பயந்து ஓடிப்போகின்றன என்பதனால், நாட்டு வளப்பஞ் சுறப்பட்டதென அறிக. பொன்வடிவு — உவமத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (௩௧௫)

316. கந்தனையுங் கன்னியையுங் கண்டாயி னுஞ்சிறிது
தன்றுயரந் தீர்ந்து தனியாறத் — தந்தை
பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

316. The king of the country of சேதி sent Damayanti to the capital of Bhima, that her sorrow might be somewhat abated at the sight of her children, for she was suffering the painful consequences of a former sin.

(இ - ள்.) சேதியர் கோன் - சேதி தேசத்தாருடைய அரசன், பண்டை விதியிலே போந்தாளை - பழைமையான தீவினையிலே அகப்பட்டிருக்குந் தமயந்தியை, மீண்டு - திரும்பி, கந்தனையும் - மகனையும், கன்னியையும் - மகளையும், கண்டாயினும் - பார்த்தாவது, சிறிது - கொஞ்சம், தன் துயரம் தீர்ந்து - தன் துக்கம்போய், தனி ஆற - தனியே யாறும்படி, தந்தை பதியிலே - தகப்பனது வீமன் பட்டணத்திலே, போக்கினான் - அனுப்பினான், எ-று.

கந்தன் என்பது தெலுங்குமொழி, திசைச்சொல்லாய்த் தமிழில் வந்தது. சிறிது—இனிதுபோற் கொள்க. முன் தந்தையகத்தி லிருந்ததை மீண்டென்பது குறிக்கின்றது. மீண்டு கந்தனையுங் கன்னியையுங்கண்டு எனவுங் கூட்டலாம். (௩௧௬)

317. கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கும்
வாயிலு நின்று மயங்கியதே—தீயகொடுங்
கானுள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது.

317. When Damayanti, who totally forsook her children and followed her husband, only to wander in the dangerous and dense forest, arrived at Vidarpa, the palace and the harem, and the city gates on which the flags waved, were filled with a great and mixed crowd.

(இ-ள்.) தீய கொடுங் கானுள் - தீமையான கொடுமையுள்ள காட்டை ஆளுதற்கு; [காட்டில் உழல்வதற்கு;] மக்களையும் - புத்திரனையும் புத்திரியையும், கைவிட்டு - பரித்யாகம் செய்துவிட்டு, காதலன் பின் போனாள் - கணவன்பின்னே சென்றவளாகிய தமயந்தி, புகுந்த பொழுது - பிரவேசித்த காலத்தில், கோயிலும் - அரமனையும், அந்தப்புரமும் - ராஜஸ்திரீகளிருக்கும் மாளிகையும், கொடி நுடங்கும் - கொடிகள் ஆடிக்கொண்டிருக்கிற, வாயிலும் - பட்டணத்துத் துவாரங்களும், நின்று - வந்து நின்று, மயங்கியது - கலந்து நின்றது, எ-று. ஏ - அசை.

மக்களையும் என்கிறவும்மை சிறப்பு, மற்றவை எண். மயங்கியது—பன்மையில் ஒருமை, எல்லாம் ஒன்றாயிற்றென்பதைக் குறிப்பித்தது. அரமனையரசரும் அந்தப்புரத்து ராணிகளும் இவளைப்பார்க்கப் பட்டணத்து வாயிலாரோடு ஒன்றாய் அங்கு வந்தாரென்பதாம். தமயந்தியின் விசேடணம் அவள் கற்பைச் சிறப்பித்தது. (௩௧௭)

318. அழுவார் விழுவா ருயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்—வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்த தொத்ததே
நாமவேல் வீமனகர்.

தாம். நாவில் நீர் வார்த்து நனைத்தாலும் உலர்ந்துகொண்டே யிருந்ததென்பது தோன்ற உலர்கின்றது என நிகழ்கால வினையைப் பிரயோகித்தார். உலர்கின்றார் எனப் பாடங்கொள்வது நேர். (௩௨௦)

321. பனியிருளிற் பாழ்மண் டபத்திலே யுன்னை, நினை
யாது நீத்தகன்ற போது—தனியேநின், றென்
னினைந்தா யென்செய்தா யென்றுப் புலம்பி
னாள், பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

321. Damayanti's mother gazing at her daughter, who resembled Lakshmi and fainting through sorrow, cried aloud saying :—"When your husband deserted you in the dreadful darkness, leaving you in the ruined mandapam, without considering your nature,—in your solitude what were your thoughts, and what did you do?"

(இ - ள்.) பனி இருளில் - பயங்கரமான இருட்டிலே, பாழ் மண்டபத்திலே - பாழ்பட்ட மண்டபத்திலே, உன்னை நினையாது - உன்தன்மையை ஆலோசியாமல், நீத்து - விட்டு, அகன்ற போது - (உன் கணவன்) நீங்கின்போது, தனியே நின்று - ஒன்றியா யிருந்து, என் நினைந்தாய் - என்ன நினைத்தையோ, என் செய்தாய் - என்ன செய்தையோ, என்று - என்றுசொல்லி தாய் - (தமயந்தியின்) மாதா, பொன்னினை நோக்கி - திருமகள் போன்ற மகளைப்பார்த்து, புலர்ந்து - (துக்கத்தினால்) உலர்ந்து, புலம்பினாள் - கூவியழுதாள், எ-று.

பனி — வினைத்தொகை. பனித்தல் - நடுங்கல். என்று — செய்யா என்னு மெச்சம். இது சொல்லெச்சமு மாதலால் "என்று சொல்லி" எனப் பொருள் கொள்ளப்பட்டது. (௩௨௧)

கலிதொடர்காண்டம் முற்றிற்று.

## மூன்றாவது

# கலிநீங்கு காண்டம்.

---

கலி நளனைவிட்டு நீங்கின சரித்திரஞ் சொன்னபாடல்களின் கூட்டமாதலின் கலிநீங்கு காண்டம் என்று சொல்லப்பட்டது. கலிதொடர் காண்டம் என்பதுபோல் சொற்றொடரிலக்கணங் கொள்க.

மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாம்
காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை
முந்தருளும் வேத முதலே யெனவழைப்ப
வந்தருளுஞ் செந்தா மரை.

(*This section treats of Kali's departure from Nala.*)

In the பிரணவம் which is at the head of the ancient Vedas in which are inculcated all the virtues, and behind the herd of cows, we may see the sacred feet, which resembled the red lotus, of him who graciously assisted the great elephant, when it summened him to its assistance, saying:—"O thou who existest before Brahma, and who shewest grace te thy servants before they invoke thee!"

(இ - ள்.) மால் யானை - பெரிய யானை, முந்து அருளும் - (அடியார் வேண்டுவதற்கு) முன்னேயே (அவர்கள் திறத்து) கிருபை செய்கின்ற, வேத முதலே என அழைப்ப - பிரமனுக்குக் காரணமானவனே யென்று அழைக்கையில், வந்து அருளும் - அதனிடத்துக் கிருபையாற் சென்ற, செம் தாமரை - திருவடியாகிய சிவந்ததாமரைமலரை, மூல பழ மறைக்கு - சகல தருமங்களுக்கும் பிரமாணமாகிய பழமையான வேதத்துக்கு, முன்னேயும் - முதலான பிரணவத்திலேயும், காணலாம்—, காலிக்கு பின்னேயும் காணலாம் - பசுக்கூட்டத்துக்குப் பின்புறத்திலேயும் பார்ப்பதகூடும், எ-று.

வேதன் என்பதில் "சில விகாரமா முயர்திணை" என்பதனால் னகரங் கெட்டது, வேதத்தினால் ஓதப்பட்ட காரணமே என்னவுமாம். முன்னே, பின்னே,—ஏகாரம் சாரியை "பெருமையிற் சிறுமை பேரணி" என்கிறபடி "மூலப் பழமறைக்கு

முன்னே" என்பதனாலே பெருமையும், "காலிக்குப் பின்னே" என்பதனால் சிறுமையுங் கூறப்பட்டன. இக்குணமேழைன் பார்க்குப் பற்றுக்கோடாவது. சிறுமை என்பது எளிமை. இது ஆனை கூர்த்ததனால் விளக்கப்பட்டது.

போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்
தை, யோதுவா ருள்ள மெனவுரைப்பார் — நீதி
யார், பெம்மா னமரர் பெருமா னொருமான்கை,
அம்மானின் றாடு மரங்கு

The great say that the hearts of those who at all times wear the distinguishing mark of the sacred ashes, and who recite the prayer consisting of the five mystic letters, are the permanent dwelling places of him who is the king of the just, a prince among the gods, and who holds in his hands an incomparable deer.

(இ-ள்.) போது - காலங்களில், வார் நீறு அணிந்து - நீண்ட விபூதிரேகைகளைத் தரித்து, பொய்யாத - சத்தியமான, ஐந்து எழுத்தை ஓதுவார் உள்ளம் - பஞ்சாட்சர மந்திரத்தை ஜபிக்கிறவர்களுடைய இருதயமானது, நீதியார் - நீதிமான்களுக்கு, பெம்மான் - அரசனும், அமரர் பெருமான் - தேவர்களுக்கு அதிபதியுமாகிய, ஒரு மான் கை - ஒப்பற்ற மானைக் கையில் தரித்த, அம்மான் - அந்தப் பெரியவன், நின்று ஆடும் - நிலைத்து ஆடுகின்ற, அரங்கு என் உரைப்பார் - சாலையென்று சொல்வார்கள் (பெரியோர்) எ-று.

போதுவார் என்பதை வினையாலணையும் பெயராகவேனும் முற்றெச்சமாகவேனுங் கொண்டு உரைக்கச் சிறப்பில்லையாதலின் அங்ஙனம் உரைத்திலம். நீதியார் என்பதை நீதி ஆர் எனப் பிரித்து நீதி நிறைந்த என்று பெம்மானுக்கு விசேடணமாக்கலுங் கூடும். அம்மான் — மஹாந் என்னும் வடசொல் மஹான் எனத் திரிந்ததெனக் கொள்க.

322. மன்னு வுனக்கபய மென்னு வனத்தீயிற்
பன்னுக வேந்தன் பதைத்துருகிச் — சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியின் னஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

(*Nala's tale alone will now be related.*)

322. Nala, who trod in the deceitful and mean path made for him by inimical Kalli hearing the king of serpants who had fallen into a fire in the desert, and was writhing, call out, "O king! you are my refuge," went listening, in the direction of the cry.

——[இனித் தமயந்தியைப்பிரிந்த நளன்செய்தி
கூறப்படுகின்றது.]

(இ - ள்.) முரண் கலியின் - பகையான கலியினது, வஞ்சப்பழி வழியே - வஞ்சனையான பழிக்கப்பட்ட மார்க்கத்திலே, செல்கின்றான் - நடக்கின்ற நளன், பன்னக வேந்தன் - ஒரு சர்ப்பராசன், வனம் தீயில் - காட்டுத்தீயில் (விழுந்து), பதைத்து உருகி - துடித்து மனந்தளர்ந்து, மன்னா - அரசனே, உனக்கு அபயம் என்று சொன்ன - (நான்) உனக்கு அடைக்கலமென்று சொல்லிய, மொழி வழியே - வார்த்தையின் வழியையே, பார்த்து - லக்ஷித்துக்கொண்டு, சென்றான் - போயினான், எ-று.

அபயம் என்பது பயமின்மையென்னும் பொருளுள்ளதாய் அதனை விரும்புவோனுக்கு ஆகுபெயராயிற்று; ரக்ஷிக்கத்தக்க பொருளென்றபடி, ஆதலின் உனக்கு என்னும் நான்காம் வேற்றுமை கர்த்தாப்பொருளில் மயங்கியதெனக் கொள்க. புன்னகம் என்னும் வடமொழி, பன்னகம் என விகாரப்பட்டது. பல் நாகம் - விஷப்பல்லை யுடைய நாகம் எனலும் ஒன்றும். (௧)

323. ஆருந் திரியா வரையிருளி னங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டா னெதிர்.

323. The Hero Nala who wandered about in the solitary midnight, sorrowing at his separation from Damayanti with the dishevelled hair, saw before him the king of the serpents burning in the red fire in that dense forest.

(இ - ள்.) ஆரும் திரியா - எவருஞ் சஞ்சரிக்க மாட்டாத, அரை இருளின் - நடு ராத்திரியில், அங்ஙனே - அப்படியே,

[யாழ்மண்டபத்திலிருந்து வந்தபடியே,] சோர் குழலி நீத்த துயரோடும் - தமயந்தியைத் துறந்ததனாலாகிய துக்கத்தோடு, திரிவான் - திரிந்துகொண்டிருக்கின்ற, வீரன் - நளமகாராசன், அத் தீ கானில் - அந்தத் தீமையான காட்டிலே, செம் தீயின் வாய் பட்டு - செம்மையான நெருப்பில் விழுந்து, எரிவானை - எரிந்துகொண்டிருக்கிற சர்ப்பராசனை, எதிர் கண்டான் - எதிரிலே பார்த்தான், எ-று.

துயரோடும்—உம் - இசை; சிறப்பெனினும் ஆக்கும். அப்போது தன் மனதிற் பற்றியெரிகின்ற பெருந் துயரத்தையுந் தடுத்துத் தீயிற் பட்டவனைக் காக்க விரைந்துசென்றா னென்பதாம்; இதனால் அவனது அருட்பெருமை குறிப்பிக்கப்பட்டது. ஆர்—யார் என்பதின் மரூஉ. இருளின்—இன்னுருபு இப்பொருளின் மயங்கியது. இருளில் எனப்பொருள்கொள்ளுதல் நன்று. (௨)

324. தீக்கடவு டந்த வரத்தைத் திருமனத்தில்
ஆக்கி யருளா லரவரசை—நோக்கி
அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி
யுடைந்தான்போய்ப் புக்கா னுவந்து.

324. Remembering in his noble mind the gift bestowed on him by Agni, the God of fire, Nala, beholding the snake with mercy, went towards it; and as he approached the God of fire, becoming afraid, retired rejoicing at the courage of Nala.

(இ-ள்.) தீ கடவுள் தந்த - அக்கினிதேவன் கொடுத்த, வரத்தை—, திரு மனத்தில் ஆக்கி - சிறப்புள்ள மனதிலே கொண்டு, அருளால் - கிருபையினால், அரவு அரசை நோக்கி - சர்ப்பராசனைப் பார்த்து, அடைந்தான் - (அவ்விடம்) சென்றான் (நளன்,); அடைதலுமே - அடைந்தவுடனே, ஆர் அழலோன் அஞ்சி - அக்கினிபகவான் பயந்து, உடைந்தான் - மிடுக்கு அற்றவனாகி, உவந்து - (நளனுடைய மனவுறுதிக்குச்) சந்தோஷித்து, போய் புக்கான் - அப்புறம் போய்விட்டான், எ-று.

அஞ்சுதல் - தான் கொடுத்த வரத்தைக் காக்கவேண்டிய அறத்திற்குப் பயப்படுதல். (௩)

வருவதனால் ஏழுலகும் என்றார். குலமென்பது இலக்கணையால் மேன்மைக்காயிற்று. அப்போது முகவிலாசத்தைச் "சந்திரனை வென்றான்" என்றார். அகன்றான் — அகல் - பகுதி, ற் - இடைநிலை, ஆன் - விகுதி, லகரம் சந்தியால் றகரமாகி மெலிந்தது.()

328. மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளா லொன்
றுமுதல், எண்ணித் தசவென் றிடுகென்றான் —
நண்ணிப்போர், மாவல்லான் செய்த வுதவிக்கு
மாறாக, ஏவலாற் றீங்கிழைப்பே னென்று.

328. The king of the serpents who, through ingratitude for the kindness done to him by Nala, who was as powerful as an elephant in the thick of the battle, said within itself 'I will do him evil at his own command' and addressing Nala said :—"Count from one, with your powerful feet and when you say (தச) ten, place me on the earth."

*N. B.—The word (தச) means both ten and bite, and herein is contained the cunning of the snake, which made Nala, by this word to command it to do him evil.*

(இ - ள்.) நண்ணி - கிட்டி, போர் மாவலான் - போரில் யானையைப்போல் வல்லவனாகிய நளன், செய்த உதவிக்கு - செய்த உபகாரத்துக்கு, மாறு ஆக - எதிராக, ஏவலால் - (அவனுடைய) கட்டளையினால், தீங்கு இழைப்பேன் - தீமையைச்செய்வேன், என்று - என்று நினைத்து; (அந்த நாகராசனானவன் அரசனைநோக்கி) மண்ணின்மீது - பூமியின்மேல், என்றனை - என்னை, நின் வல் தாளால் - உன்னுடைய வன்மையான பாதத்தினால், ஒன்று முதல் எண்ணி - ஒன்று முதலாகக் கணக்கெண்ணி, தச என்று - தசவென்னுஞ் சொல்லைச் சொல்லி, இடுக என்றான் - போட்கடவை என்று சொன்னான், எ - று.

தச என்பது ஆரியத்தில் பத்து என்னு மெண்ணுப்பெயரும், கடி என்கிற பொருளுள்ள ஏவலொருமை வினைச்சொல்லுமாம். கீர்வாணத்திலேயே அவர்களுக்குச் சம்பாஷணை நடந்ததனால்

ஒன்றுமுதல் பத்துவரையிலும் அடி யெண்ணிக்கொண்டுபோய் என்னைத் தரையிற்போடு என்றுசொன்னது போலே யிருக்கிற அவ்வார்த்தை (கடி) என்கிற அர்த்தத்தையும் சிலேடையால் தரும். இக்கருத்தினாலேதான் அவனைவலநலே அவனுக்குத் தீங்குசெய்யக்கருதி யென்றார். பாதத்துக்கு வன்மையாவது, பல அரசருடைய கிரீடந் தாங்கியுந் தேயாமலிருத்தல் ; இத னால் அரசற்கு மேன்மை குறிப்பிக்கப்பட்டது.

இடுகென்றான்—வியங்கோளின் ஈறு தொக்கது. (எ)

329. ஆங்கவன்று னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மை
எண்ணினான் வைத்தா னெயிறு. [யால்

329. When the king of the serpents had thus spoken in that place, listening to those words, Nala, who possessed an exalted mind, and who had been conquered by the evil Kali, placed his beautiful feet on the earth and truthfully counted (தச) *ten*. Then that serpent fixed his fangs on the king's hand.

(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அவன் - அப்பாம்பரசன், அவ்வாறு உரைப்ப - அப்படி சொல்ல, அது கேட்டு - அப்பேச் சைக்கேட்டு, தீ கலியால் - தீமையான கலிபுருஷனால், செற்ற - வெல்லப்பட்ட, திரு மனத்தான் - மேன்மையான மனத்தையுடைய நளன், வாய்மையால் - சத்தியத்தினால், பூங் கழலை - அழகான பாதத்தை, மண்ணின்மேல் வைத்து - பூமிமேல் வைத்து, தச என்று எண்ணினான் - தச என்று கணக்கிட்டான், (அப்போது அந்த நாகன் அரசன்கையில்) எயிறு வைத்தான் - பல்லைப் பிர யோகித்தான், [கடித்தா னென்றபடி], எ - று. தான் - அசை.

நெருப்பில் வீழ்ந்து துடிப்பவனைத் தரையிலிடப் போகை யில் அவன் தச என்று சொல்லிப் போடு என்பதை யோசித்து அவ்வஞ்சமறிய வல்லவனாயினும் அறியாமற்போனது கலியின் கொடுமையாலாதலின் "தீங்கலியாற் சென்ற திருமனத்தான்" என்றார்.

செற்ற—இறந்தகாலத் தெரிநிலைப் பெயரெச்சம்; செறு பகுதி, அ - விகுதி, றகரமிரட்டிக் காலங்காட்டிற்று. "செயப் படுபொருளைச் செய்ததுபோல" என்கிற விதியால், செயப் பாட்டுவினை செய்வினையாயிற்று. நளன் - [உயிரீறு. ரு - வது] சூத்திரத்தின்படி பூங்குழல் என மெலி மிகுந்தது. (அ)

330. வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமங்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் றிருமேனி வெந்து.

330. When it bit him, the body of the truthful Nala assumed a dark hue, and his powerful shoulders, whose beauty the eyes of Damayanti could not fully realize, became shrunken, like the house of the miser who does not give off his gold to the poor.

(இ - ள்.) [கடிக்கவே] மெய்ம்மை விடாதான் - சத்தியந் தவிராத நளனது, திருமேனி வெந்து - அழகுள்ள வுடம்பு தீய்ந்து, வீமன் மடந்தை விழி - தமயந்தியின் கண், முடிய கண்டு அறியா - பூர்ணமாகப் பார்த்தறியாத, வாமம் - அழகான அல்லது இடப்பக்கமான, நெடு தோள் - நெடுமையான புஜ மானது, வறியோருக்கு - தரித்திரருக்கு, ஏமம் கொடாதார் - பொன்னைக் கொடாதவருடைய, அகம் போல் - மாளிகையைப் போல், குறுகிற்று - குறுகிப் போயிற்று, எ - று. ஏ - அசை.

ஏமம் - சந்தோஷமுமாம். அகம் குறுகுதலாவது வாழ்க்கை தாழ்வது. விழிமுடியக் கண்டறியாமையாவது எத்தனை யார்த்தும் அதனழகு அளவிடப்படாமை.

கொடாதார்—கொடு - பகுதி, ஆ - எதிர்மறைவிகுதி, த் - எழுத்துப்பேறு, ஆர் - விகுதி. (க)

331. ஆற்ற லரவரசே யாங்கென் னுருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சிதைவித்தாய்—மாற்று
தற்கின், றெங்கா ரண்மென்று னேற்றமரிற் கூற்
றழைக்கும், மின்கா லயின்முகவேல் வேந்து.

331. Nala, who possessed a sharp-pointed lance, which emitted lightning and which summoned Yama to carry

away from the battle field those who opposed him in war, said :—"O thou skilful king of the serpents! Without any enmity existing to cause anger, why have you this day, by your cruel fangs, changed my form?"

(இ - ள்.) ஏற்று - (போர்க்குவந்தவர்களை) ஏற்றுக்கொண்டு, அமரில் - யுத்தகளத்தில், கூற்று அழைக்கும் - (அவர்களைக் கொண்டுபோக) இயமனை அழைக்கின்ற, மின் கால் - மின்னலைக் கக்குகின்ற, அயில் முகம் வேல் வேந்து - கூர்மையான முகமுள்ள வேலையுடைய நளமகாராசன், ஆற்றல் - சாமர்த்தியமுள்ள, அரவு அரசே - சர்ப்பராசனே, சீற்றம் ஒன்று இன்றி - கோபகாரணமானபகை யொன்று மில்லாமல், என் உருவத்தை - என் ரூபத்தை, நின் எயிற்றால் - உக்கிரமுள்ள பல்லினால், இன்று மாற்றுதற்கு - இன்றைக்கு வேறாக்குவதற்கு, என் காரணம் - என்ன ஹேது, என்றான் -, எ - று. ஆங்கு - அசை.

ஏற்றமரில் என்பதற்கு ஏறுபோன்றவரோடு செய்யும்போரில் எனவும் பொருள் கொள்ளத்தகும். சீற்றம், சினம் இரண்டுந் தொழிற்பெயர்; சீறு - பகுதி, அம் - விகுதி, சின் - பகுதி, அகரம் கெட்ட அம் விகுதி; பகைக்கும் உக்கிரத்துக்கும் ஆகுபெயர். உருவம் — ரூபமென்னும் வடமொழித்திரிபு; உரு, உருவு எனவும் வரும். என் — எவன் என்னுங் குறிப்பு முற்றின் இடை குறைந்தது. தன்வாயிலேயே "கடி" என்று சொல்வித்த தந்திரநோக்கி, 'ஆற்றலரவரசே' என்றான். சண்டையில் வேலால் கொல்வது நிச்சயம் என்பதை, "ஏற்றமரில் வேல்" என்றது. (௩௦)

332. காயுங் கடாக்களிற்றாய் கார்க்கோ டகனென்பேர்
நீயிங்கு வந்ததி யானினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணம்
வேறாக்கிற் றென்னான் விரைந்து. [மா

332. "O thou who possessed angry and rutting elephants! my name is கார்க்கோடகன். Knowing that you had come to this place, in order that you may live in concealment, I hastened hither and changed your form."

(இ - ள்.) காயும் கடி களிற்ருய் - கோபிக்கின்ற, மதயானையுள்ளவனே, என் பேர் கார்க்கோடகன்—, நீ இங்கு வந்தது - நீ இவ்விடம் வந்ததை, யான் நினைந்து - நான் எண்ணி, காயத்தை - (உன்) உடம்பை, மாறு ஆக்கிக்கொண்டு - வேறு ரூபப்படுத்திக்கொண்டு, மறைந்து உறைதல் - (நீ) மறைந்து வாசஞ்செய்வது, காரணம் ஆ - ஹேது ஆக, விரைந்து - துரிதப்பட்டு, வேறு ஆக்கிற்று - (யான்) வேருக்கியது, என்ருன்—, எ-று.

வேருக்கிற்று—தொழிற்பெயர், யானென்னு மெழுவாயைக் கொண்டது; இதுவும் எழுவாய் பெயராதலின் ஆயிற்றென்னுந் தோன்ருப் பயனிலைகொண்டு முடிக்க. வடநூற் கொள்கையின்படி இது பாவேப்பிரயோகமாம், "அதாவது கர்த்தாப் பெயர் தொழிற்பெயரால் முடிவது; அப்பாஷையில் இங்கு கர்த்தாப்பெயர் மூன்ரும் வேற்றுமையில் வரும்; ஆயினும் பொருள் வேற்றுமை யின்மையால் இங்ஙனங் கொள்ளலாம். இவ்வாக்கியத்தை யுட்கொண்ட என்ருனென்னும் பயனிலை நாகராசன் என்னுந் தோன்ரு எழுவாயைக் கொண்டது. ஆக்கிற்று—ஆக்கு -.பிறவினைப்பகுதி, று-விகுதி, இன்-இடைநிலை, ன் - ற் ஆயிற்று ; அகரச்சாரியைவரின் ஆக்கினது என்ரும். ()

333. கூனிருல் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிருல் பாயுந் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கிஞ யிந்த
அணியாடை கொள்கென்ருஞ் னங்கு.

333. "O thou, who possessest the beautiful country in which the curved இருல் fish, leaping, causes the honey from the black நெய்தல்flower to flow, as if from a honey comb, into the mouths of the frogs! you have destroyed the unquenchable fire in this forest, Accept therefore this beautiful garment" said கார்க்கோடகன்.

(இ - ள்.) கூன் இருல் பாய - வளைந்த இருல் மீன்கள் பாய்வதிஞலே, குவளை - கருநெய்தற் பூக்களி னின்றும், தவளை வாய் - தவளைகளின் வாயிலே, தேன். - தேனனது, இருல் பாயும் - தேன் கூண்டுபோலே பாயப்பெற்ற, திரு நாடா - அழகிய

-றுண்டையுடையவனே, கானில் - காட்டில், தணியாத - இருந்த, வெம் கனலை தாங்கினாய் - வெப்பமான நெருப்பினின்றும், (என்னை) எடுத்தாய், (ஆதலின்) இந்த அணி ஆடை - இந்த அழகான வஸ்திரத்தை, கொள்க என்றான் - பெற்றுக்கொள் என்று சொன்னான் (கார்க்கோடகன்), என்றவாறு. இங்கு அசை.

கூனிறால் - திருநாடா என்பது நாட்டின் வளத்தை புலப்படுத்தியது; அதனால் அரசனது செங்கோற் சிறப்பு குறிப்பிக்கப்படும், இறால்மீன்கள் கரையில் துள்ளி மரங்களின் மீதன் கூண்டுகள் மேல் பாய்வதினால் அவை குவளை தவளைகளின் வாயில் பாயும்படியான நாடு என்வு முறைக்கலி மாயினுஞ் சிறப்பில்லை.

கனல் என்பது விஷ அக்கினி எனினும் அமையும்: கனலை— இரண்டனுருபு நீக்கப் பொருளில் வந்தது; வேற்றுமை மயக்கம். வெங்கனலிற்றாங்கினாய் என்னவாம். என் விஷ அக்கினியைத் தாங்கினதற்குப் பரிஹாரமாய் இவ்வாடையைக் கொள் என்று னெனினும் அமையும். (௩௨)

334. சாதி மணித்துகினீ சாத்தினாற் றண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா நீட்டுந் துறைநாடா கோவே
ஒளிக்குநா ணீங்கு முரு.

334. "O king, who possessest the country surrounded by water in which the வரால் fish, which forages beneath the cool red kuvali flower, streches out its tongue to receive the drops of honey which fall from the pollen of that flower! If you put on this garment which resembles a genuine gem, the form which has this day left you will shine again."

(இ - ள்.) தண் கழுநீர் போதின்கீழ் - குளிர்ச்சியான செங்கழுநீர்ப் பூவின் கீழ், மேயும் புதுவரால் - மேய்ந்துகொண்டிருக்கிற புதிய வரால்மீன், தாதின் துளிக்கு - அப்பூவின் தேன் துளிக்கு, நா நீட்டும் - நாக்கை நீட்டுகின்ற, துறை நாடா கோவே - தண்ணீர்த் துறையுள்ள நாட்டையுடைய அரசனே, சாதி மணித்துகில் - சாதி மாணிக்கம்போன்ற இந்த வஸ்தி

ரத்தை, நீ சார்த்தினல் - நீ தரித்தால், நாள் நீங்கும் உரு - இந்நாளில் நீங்கிய ரூபம், ஒளிக்கும் - விளங்கும்; எ - று.

ஒளிக்கு நாள் - வெளிப்படுதற்கு வேண்டிய நாளில்; உரு நீங்கும் - இவ்வுரு நீங்கிவிடும் எனவுங் கொள்ளலாம். ஒளிக்கும் என்பது, சித்திரிக்கும் கடைக்கணிக்கும் என்பவைபோல் ஒளி என்னும் பெயரடியாய்ப்பிறந்த வினைமுற்றென அறிக. தாது—தேனுக்கு ஆகுபெயர். (கரு)

335. வாகு குறைந்தமையால் வாகுவனென் றுன்னா
மம், ஆக வயோத்தி நகரடைந்து—மாகனகத்,
தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான் செம்ம
னத்தாற், பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

335. Addressing Nala, who excelled in governing the world by his right-mindedness, கார்க்கோடகன் said :—"You shall be known by the name of வாகுவன் on account of your shrunken hand. Go to the town of Oude and may you there become celebrated in the act of driving the great golden chariot."

(இ - ள்.) செம் மனத்தால் - செவ்வையான மனதினல், பார் தொழிற்கு மிக்கானை பார்த்து - பூமி யாளுஞ் செய்கையில் மிகுந்தவனாகிய நளனைப் பார்த்து, வாகு குறைந்தமையால் - கை குறைந்ததனல், வாகுவன் என்று—, உன் நாமம் ஆக - உன்பேர் ஆகக்கடவது; நீ அயோத்தி நகர் அடைந்து - நீ அயோத்தியா பட்டணத்தைச்சேர்ந்து, மா கனகம் தேர் தொழிற்கு - பெரிய சுவர்ண ரதம் ஓட்டும் வேலையில், மிக்கான் ஆகு - மேன்மை யுடையவனாகக்கடவை, என்றான்—, (கார்க்கோடகன்), எ - று.

ஆக என்பது வியங்கோண் முற்று, வினையெச்சமுமாம். தொழிற்கு—குவ்வுருபு இடப்பொருளில் மயங்கிவந்தது. காமக் குரோதாதிகளின்றித் தயை தாக்ஷிணிய முதலியவை யுடையதாதலின் செம்மனத்தால் என்றார். இது பாராளுந் தொழிலின் மேன்மையாதற்கு ஏதுவாதலின் ஆல் உருபு வந்தது.

வாகுவன்—பாஹுக என்கிற ஆரியத்தின் திரிபு. - பாஹு-கை, க என்பது பழிப்புப் பொருளில்வந்த விகுதி, பழிப்

337. Nala, whose mind was burning with fire which being fanned by his thought as if by a breeze emitted volumes of smoke, saw before him the sea which was restless even at night and which washed the coast of the country where the timid male birds eyed the solitary female bird which sheltered itself beneath the shade of the long-cool creeper.

(இ-ள்.) நினைப்பு என்னும் காற்று அசைப்ப - சிந்தையாகிய காற்று அசையச் செய்வதனால், நெஞ்சிடையே - மனதிலே, மூளும் கனல் புகைய - பற்றிக்கொள்ளும் நெருப்பு புகையெழும்பி நிற்க, வேகின்றான் - வெந்துகொண்டிருக்கிறநளன், பனி குருகு - அச்சமுள்ள பறவைகள், தண் படாம் - குளிர்ச்சியான பெருங்கொடிகளினது, நீழல் - நிழலில், தனி பேடை - தனித்திருக்கின்ற பெண்பறவையை, பார்த்து—, இரவு - இராத்திரியில், கண்படா - தூங்காமலிருக்கிற, வேலை கரை - கடற்கரையை, கண்டான்—, எ - று.

மனதில் தமயந்தியை நீத்த துன்பம் நெருப்பைப்போல மூண்டு நிற்பதனால் தாபமுற்றவனாகி அங்கிருந்து கடற்கரை வழியாகச்சென்றார். துணிந்து பேடையிடஞ் செல்லாமையின் "பனிக்குருகு" என்றார். குருகு — தகுதியால் சக்கரவாகம் எனக் கொள்ளவுமாம். (கசு)

338. கொம்பி னிளங்குருகே கூறு திருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று.

338. "O thou young bird, perched on the bough of the tree! You have not a word to say to me who deserted in her sleep, the beautiful daughter of the king of the excellent country of Vidarpa, where the beetles open with their six legs the bud of the lotus flower, thereby causing the honey to gush out."

(இ-ள்.) கொம்பர் இள குருகே - மரக்கொம்பின்மேலிருக்கிற இளமையான் பக்ஷியே, அம்புயத்தின் போதை - தாமரை மொட்டினை, அறு காலால் - ஆறு கால்களினாலே, தும்பி திறக்க - வண்டுகள் திறக்கையில், தேன் ஊறும் - தேன் சாக்

கும்படியான; திருக்காடன் - சிறப்பிரான விதர்ப்ப ராசனுடைய புடையவனது, பொன்னே - பொன்போன்ற மகளே, இறக்கத்தே நீத் தேனுக்கு - தூக்கத்தில் விட்ட எனக்கு, ஒன்று - ஒரு பேச்சையும், கூறுது இருத்தி - சொல்லாம லிருக்கிறாய், எ - று. ஆனுல் - அச்சை,

நளன் கடற்கரையில் போகும்போது தமயந்தியை நீத்த விசனத்தினால் இவ்வாறு நினைத்துச் சொல்லிக்கொண்டு போனா னென்பதாம். (கஎ)

339. புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு, கன்
னிப் பெடையுண்ணக் காத்திருக்கும் — இன்ன
ருள்கண், டஞ்சினு னாவி யழிந்தா னறவுயிர்த்
து, நெஞ்சினு லெல்லா நினைந்து.

339. Nala, observing the sweet grace with which the spotted beetle, after having picked with its legs the beautiful fragrant pollen of the punnai flower, waited till the fair female bee first imbibed the honey, was disturbed in his mind and heaved a deep sigh, and pondering over all that he had done, he felt his life as it were ebbing away.

(இ - ள்.) புன்னை நறு தாது - புன்னைப் பூவின் வாசனையுள்ள பூந்தாதை, கோதி - அலகினால் குத்தி, பொறி வண்டு - புள்ளிகளுள்ள வண்டானது, கன்னி பெடை - அழகிய பெண்வண்டு, உண்ண - (அத்தேனை) யுண்ணுதற்கு, காத்திருக்கும் - காத்துக்கொண்டிருக்கின்ற, இன் அருள் கண்டு - இனிமையான கிருபையைப் பார்த்து, அஞ்சினன் - பயப்பட்டவனாகி, அற உயிர்த்து - மிகப் பெருமூச்செறிந்து, நெஞ்சினால் - மனதினால், எல்லாம் நினைந்து - தான் செய்தவைகளையெல்லாம் நினைத்து, ஆவி அழிந்தான் - உயிர்நீங்கப் பெற்றான், [மூர்ச்சித்தான் நளன் என்கிறபடி], எ-று.

நாலறிவுயிரான தும்பியும் பெண்பால் வைத்த அருளை யான் கொன்றேனே யென்று அறத்துக்கு அஞ்சினு னென்பதாம். ()

340. காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ — நாதம்

அளிக்கின்ற ஆழிவாய்ப் போங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை.

340. "O crab! Tell me why you thus run away from me and hide yourself in the roaring ocean. Is it because you think you should not look upon the face of a sinner like myself, who deserted is dear consort in the thick darkness of the forest? or is it from any other reason?"

(இ - ள்.) அலவ - ஓ நண்டே, காதலியை - பிரியமான நாயகியை, கார் இருளில் - மிகுந்த இருட்டிலே, கானகத்தே கைவிட்ட பாதகனை - காட்டிலே அறவிட்ட பாவியை [என்னை,] பார்க்கப்படாது என்றோ - பார்ப்பதுங் கூடாதென்று நினைத்தோ, ஓதம் அளிக்கின்ற ஆழிவாய் - தொனியையுண்டாக்குகின்ற சமுத்திரத்தில், ஓடி ஒளிக்கின்றது - (நீ) ஓடி ஒளித்துக் கொள்ளுதல், என்னோ - (வேறு காரணம்) யாதோ, உரை - சொல், எ - று. ஆங்கு - அசை.

இங்ஙனம் நண்டை நோக்கி நளன் கூறினன். இதையும் புருவேம்பிரயோகமாக் கொள்ளலாம். [பெயரியல்-௫௪-வது] சூத்திரத்தினால் அலவ என்று விளியுருபாயிற்று. (௩௪௰)

341. பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே — யானுடைய
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வா யாங்கு
ணர்ந்தால், என்னினைக்குஞ் சொல்லீ ரெனக்கு.

341. "O thou dark-hued kuvali flower! O thou sea shore on which blow the fresh south winds which pass through the groves! O crane, who art in the gulf adjoining the sea! Tell me what will be the thoughts of my wife, who is adorned with glittering jewels, when she awakes in that dense forest."

(இ - ள்.) பானலே - நீலோற்பலமே, சோலை - தோட்டங்களோடு கூடிய, பசுந்தென்றல் - பசுமையான தென்றற் காற்று, வந்து உலவும் - வந்து வீசுகின்ற, கானலே - கடற்கரையே, வேலை கழி குருகே - கடலைச்சேர்ந்த கழியினிடத்துள்ள நாரையே, யான் உடைய - யான் கலியாணஞ் செய்துகொண்ட,

யின் இமைக்கும் பூணுள் - காந்தி விளங்குமாபரணமுடைய தமயந்தி, அவ் வீங்கு இருள்வாய் - அந்தப் பெருத்த இரவில் உணர்ந்தால் - விழித்துக் கொண்டால், என் நினைக்கும் - யாது நினைப்பாள், எனக்கு சொல்வீர் - எனக்குச் சொல்லுங்கள், எ - று. ஆங்கு - அசை.

பிற்சேர்லையென வேதிருத்தலால் "காவல் எஃபது" ஞாக்கேகெள்ளப்பட்டது. (உ०)

342. போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய் — தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாயோ கொலின்று.

342. "O sea! you roll backwards and forwards, and roaring tremble shaking the ships that float on the surface. Have you also, like myself, who saved the serpent from the fire, deserted your wife this night?"

N. B.—The king is troubled for having parted his family and is trembling while his tongue falters.

(இ - ள்.) ஆர்கலியே - சமுத்திரமே, போவாய் வருவாய் - போகிறாய் (மறுபடி) வருகிறாய், புரண்டு விழுந்து—, இரங்கி - ஒலித்து (—பரிதவித்து), நாவாய் - கப்பல் (—நாக்கோடுகூடிய வாய்), குழற - அலைய (—தடுமாறிப்போக), நடுங்குறுவாய் - நடுங்குகின்றாய் (ஆதலின்,) தீவாய் அரவு அகற்றும் - நெருப்பினின்றும் பாம்பை நீக்கின, என் போல - என்னைப்போல (நீயும்,) மாதை - பெண்பிள்ளையை, இன்று - இன்றைக்கு, இரவு - இராத்திரியில், அகற்றி வந்தாய்கொல் - நீக்கி வந்தையோ, எ-று.

இதில் தனக்குக் கடலுக்குஞ் சிலேடை யிருப்பது காண்க. இவ்வாறு நளமகாராசன் துயரத்தோடு கடற்கரையில் சென்றது, பிரிதலியற்றிணையின் பாகுபாடாகிய சுரமிடை பெண்ணொடு ஒத்திருப்பதனால் அத்திணையின் றுறையாகக் கொள்ளவேண்டும். தமயந்தி புலம்பிச்சென்றதும் முதுபாலையோடொத்திருத்தலி னிவ்வாறே. குறையுங் குற்றமு மில்லாத

பூரிய அலங்கார நூலின்படி இது கருணரசத்திற் சேர்ந்த சஞ்சாரிபாவங்களுள் அடங்கும். (௧௩)

343. முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் [தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு.

343. The king of the country of Nidatha, where the beetles approaching the excellent flower of the lotus, which surpasses the natural beauty of gold, cause the honey to flow out of it, passed along the sea-shore where the maidens laughed immoderately at his appearance, and reached tho fertile town of Oude.

(இ-ள்.) பொன் நீர் - பொன்னின் குணமாகிய, முருகு உடைக்கும் - அழகை, உடைந்துபோகச் செய்கிற [பொன்னினும் அழகான என்கிறபடி,] தாமரையின் -, மொய் மலரை - பெருமையான பூவை, தும்பி - வண்டுகள், அருகு - சமீபத்தில் [கிட்டச்சென்று,] உடைக்கும் - தேன் ஒழுகும்படி மலர்த்துகிற, நன்னாட்டு அரசு - நல்ல நிடதநாட்டின் அரசன், முன்னீர் - கடற்கரையிலுள்ள, மடவார் - பட்டினப் பெண்கள், முறுவல் திரள் - சிரிப்பின் கூட்டத்தை, குவிப்ப - சேர்க்க [மிகச்சிரிக்க,] நல் நீர் - நல்ல நீர்வளமுள்ள, அயோத்தி நகர் - அயோத்தியா பட்டணத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ-று.

அரசனுடைய விகாரரூபத்தைக் கண்டு சிரித்தனரென்க.

பொன் நீர் - பொன்னின் குணமுள்ள, முருகு உடை - தேனையுடைய, குத்தா - குத்திவிற்காத [முதிர்ந்துநிற்கிற,] மரையின் - தாமரையின், எனவும் உரைக்கலாம். அதுவலிமை.

முன்னீர் - முந்திப்படைத்த நீர்; கடலுக்கு ஆகுபெயர். ஜலத்தை முதலிற்படைத்தார் கடவுள் என்பது சாஸ்திரம்; இச்சொல் முந்நீர் எனத் தந்நகர முடையதாயிருக்கின், அதற்குப்பொருள், படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய மூன்று தொழிலுஞ் செய்யு நீர் என்பதாம்; ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூன்றுநீர் எனப் பொருளுரைப்பாருமுளர். ()

மொழிக்குத், தக்கானை யிங்கே தருமி னென
வுரைக்க, மிக்கானுஞ் சென்றான் விரைந்து.

345. When the messengers had delivered that message to the king, he thought over it, and believing it to be true, told them to bring him the man who was able to utter those words. And Nala hastened into his presence.

(இ-ள்.) அம் மொழியை - அந்தப் பேச்சை; தூதர் - செய்தியறிவிப்போர், அரசற்கு அறிவிக்க - அவ்வரசனுக்குத் தெரிவிக்கையில், அதனை சிந்தித்து - அப்பேச்சை யாலோசித்து, செம் மொழி ஆ தேர்ந்து - சத்திய வசனமாகத் தெளிந்து, இம்மொழிக்கு தக்கானை - இப்பேச்சுக்குத் தகுந்த யோக்கியதை யுடையவனே, இங்கே தருமின் என - இவ்விடத்தில் இட்டுக்கொண்டு வாருங்களென்று உரைக்க - (அயோத்தி யரசன்) சொன்னதனால், மிக்கானும் - மேலான நளனும், விரைந்து சென்றான் - துரிதப்பட்டுச் சென்றான், எ-று.

உரைக்க வென்னுஞ் செயவெனெச்சம் இங்கு இறந்தகாலத்தில் வந்தது. மிக்கானும்—எச்சவும்மை. மிக்கான்—மிகு என்னும் முதனிலைமேற் பிறந்த இறந்தகால வினையாலணையும்பெயர்; மிகு - பகுதி இரட்டிக் காலங்காட்டியது, ஆன் - விகுதி. (உசரு)

346. பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்
தன், செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்—ஐயாநீ
எத்தொழிற்கு மிக்கா னியாது பெயரென்றான்,
கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு.

346. Looking at Nala, into whose thoughts a lie never entered, the king of Oude, his beautiful countenance blooming, asked;—"Sir, in what work do you excel? What is your name?" Then, addressing the king of Oude who excelled in the great art of governing.

(இ-ள்.) பொய் அடையா சிந்தை - பொய் சேராத நினைப்புள்ள, புரவலனை நோக்கி - நளமகாராசனைப் பார்த்து, தன் செய்ய முகம் மலர்ந்து - தன்னுடைய செம்மையான முகம் மலரப்பெற்று, தேர் வேந்தன் - அயோத்தி யரசன், ஐயா நீ எத்தொழிற்கு மிக்கான் - எந்தத்தொழிலில் மிகுந்தவன்,

-யாது பெயர் - உன்பேர் என்ன, என்றான்—, * கைத் தொழிற்கு - மேன்மையான தொழிலில் [அரசாட்சியில்,] மிக் கோனைக் கண்டு - மேலான அவ்வயோத்தி மன்னனைப் பார்த்து, பரி - குதிரை.

* இது பிற்பாட்டோடு சேர்த்திக்கது. கைத்தொழிற்கு மிக்கானைக்கண்டு என்பதற்கு நளனைக்கண்டு இப்படி யுரைத்தானெனப் பொருள் கூறலாமாயினும் முதலடியோடு கூறியது கூறலாம், ஆதலின் சிறப்பிலதாம். புரவலன் - புரத்தலிலே வல்லவன், புரத்தல் - காத்தல்.

கையென்பது படைவகுப்புக்கும் பேராதலால் படைவகுப்புத் தொழிலில் மிக்கானெனவும் பொருள் கூறலாம். கையிற் செய்யவல்ல எல்லாத் தொழிலிலும் எனப்பொருள் கூறினும் அமையும். கை - நீட்சி, மேன்மைக்கும் பெயர் [மெய் - புணரியல் - ௩ - ஆம்] சூத்திரத்தினால் மிக்கானியாது எனவிரித்து. செம்மையில் மை கெட, பெயரெச்ச விகுதியாகிய அ வர முன்னின்ற மகரம் யகரமாத்திரிந்து தனிக்குறின் முன்னொற்றாகிய அது இரட்டி, செய்ய ஆயிற்று. மலர்ந்து என்னுஞ் சினைவினை என்றுமென்னு முதல்வினை கொண்டது. (௨௫)

347. அன்ன மிதிப்ப வலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்—மன்னன்.
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லனா
யானென்றான், கொடைத்தொழிலின் மிக்கான்
குறித்து.

347. Nala, who excelled in charity, said :—"O king of the inhabitants of the excellent country in which the honey which flows from the lotus flowers, on which the swans tramble, causes the good paddy to grow! I excel in cookery and in the art of chariot-driving."

(இ - ள்.) கொடைத் தொழிலில் மிக்கான் - ஈகையில் மிகுந்தவனாகிய [வள்ளலாகிய] நளன், குறித்து - தன் பேச்சுக்கு இலக்காகவைத்து, அன்னம் மிதிப்ப - அம்சபக்ஷிகள் மிதிப்பதனால், அலர் வழியும் - தாமரைமலர்களினின்றும் வழிகின்ற, தேறல் போய் - தேன் ஓடி, செந்நெல் - செந்நெற்

யினை, விளக்கும் - விளங்கச் செய்கிற, திருநாடர் மன்னவ - மேன்மையான நாட்டிலுள்ளவர்க்கு அரசனே, யானே -, மடைத்தொழிலும் - சமைக்குந் தொழிலிலும், தேர் தொழிலும் - தேர்செலுத்துந் தொழிலிலும், வல்லன் - சாமார்த்திய முடையேன், என்றான் -, எ-று.

வல்லன் — தன்மை யொருமைக் குறிப்பு முற்று. செந்நெல் எனப் பாடமோதி தேட்கெண்டையென்னும் மீன்களை வளர்க்கிற எனப் பொருள்கொள்ளக் கூடுமாயினும் அது சிறப்பன்றென்க. (௩௪௭)

348. என்னை யிருங்கானி னீத்த விகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை — மின்னுப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தானா ளுணர்ந்து.

348. Damayanti, knowing him to be a man of discernment, said to the family priest of king Bhima, who was armed with a lance as bright as lightning, "Go and find out the hero Nala who deserted me in the wide forest."

(இ - ள்.) தண் கோதை - குளிர்ச்சியான மாலையைத் தரித்தவள் [தமயந்தி,] உணர்ந்து - (இவன் அறிய வல்லவனென்று) தெரிந்து, மின்னு புரை - மின்னலை ஒத்திருக்கிற, கதிர் வேல் வேந்தன் - காந்தியுள்ள வேலைத்தரித்த வீமராசனுடைய, புரோகிதனுக்கு - வைதிக காரியஞ் செய்விக்கும் ஆசாரியனுக்கு, என்னை —, இரு கானில் நீத்த - பெரியகாட்டில் விட்ட, இகல் வேந்தன் தன்னை - வீரமுள்ள நளமகாராசனை, நீ நாடுக என - நீ தேடியறி என்று, இந்த உரை - இந்தப்பேச்சை, பகர்வதானாள் - சொன்னாள். எ - று.

பகர்வது - பகர்தல்; ஆனாள் - உண்டாகப்பெற்றாள்; சொல்லலானான் முதலியவைகளையும் இவ்வாறே கொள்க. "வின்பின்பன் கன் தொழிற்பெயரனைய" என்னுஞ் சூத்திரத்தினால் உகரச்சாரியைப்பெற்று மின்னு என்றாயிற்று. "இயல்பினும் விதியினும்" என்கிற பொதுவிதியால் வலிமிகுந்தது. 'புரோகிதனுக்கு' என நான்கனுருபு கோடற்பொருளில் வந்தது. தண்கோதை - அன்மொழித்தொகை. (௩௪௮)

[தமயந்தி புரோகிதனுக்கு நளனைக்கண்டுபிடிக்கு
முபாய முரைத்தது.]

349. காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர்துயிலி னீத்த றுணிவன்றே — தேர்வேந்
தற், கென்றறைந்தா னேர்நின் றெதிர்மாற்றந்
தந்தாரைச், சென்றறிந்து வாவென்று ளோர்ந்து.

349. Damayanti after consideration spake thus:—"Return after finding him out who confronts you and gives an answer to the question, 'Was it not courageous in the Chariot-driving king to desert his beloved consort in the thick darkness, leaving her in the ruined Mandapam when sleep had overcome her senses?'"

(இ-ள்.) கார் இருளில் - கரிய இருளிலே, பாழ் மண்டபத்தே—, தன் காதலியை - தன்னுடைய ஆசைசூழ்ந்த மனைவியை, சோர்துயிலில் நீத்தல் - மனமோய்ந் திருக்கும்படியான தூக்கத்தில் விட்டுப்போதல், தேர் வேந்தற்கு - தேராளுமரசனுக்கு, துணிவன்றே - தைரிய மல்லவோ, என்று அறைந்தால் - என்று சொன்னால், நேர் நின்று - எதிரில் நின்று, எதிர் மாற்றம் தந்தாரை - மறுமொழி கொடுத்தவரை, சென்று அறிந்து வா - போய்த் தெரிந்துகொண்டு வா, என்றாள் ஓர்ந்து - என்று நிச்சயித்துச் சொன்னாள் (தமயந்தி), எ-று.

இச்சங்கதி தனக்கு மவனுக்குமே தெரிந்த ரகசியமாதலால் குத்துப்பாடாக இதை யெடுத்துரைக்கும்போது அக்குத்துப்பாடு நெஞ்சிலுறைத்து அவனே மறுமொழி கூறலாவனென்பது தேர்ந்தென்பதின் கருத்து. தந்தாரை யென்பது உயர்வினால் ஒருமையிற் பன்மை. சோர்துயில் — வினைத்தொகைத் தொடர். கருமையான இருள் - காரிருள், கருமை - பெருமை, கறுப்புமாம், நெருங்கிய இருட்டு என்றபடி. (உஅ)

350. மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினேன் — மன்னு
மிடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
(௦௲) யடைந்தா னயோத்திநகர். - ஓ

350. Having travelled over high mountains upon which the lightning played, and over seas, as well as through the good countries surrounded by the seas and through the forests, he entered the town of Oude, in search of king Nala, who (once) possessed standing and rutting elephants.

(இ-ள்.) [அந்தப்புரோகிதன்] மின் ஆடும் - மின்னல் விளங்கப்பெற்ற, மால் வரையும் - பெரிய மலைகளிலும், வேலையும் - சமுத்திரத்திலும், வேலைசூழ் நல் நாடும் - சமுத்திரஞ் சூழ்ந்த நல்ல தேசங்களிலும், கானகமும் - காடுகளிலும், நாடினன் - சென்றனனாகி, மன்னு - நிலைபெற்ற, கடம் தாழ் - மதப்பெருக்கு ஒழுகப்பெற்ற, களி யானை காவலனை - மதயானையையுடைய நளமகாராஜனை, தேடி -, அயோத்தி நகர் அடைந்தான் - அயோத்தியா பட்டணத்தைச் சேர்ந்தான், எ-று.

மின் நாடு எனவும் பிரியும், மேகமண்டலத்தை யளாவியது என்றபடி. வேலை என்பது கடனடுவிலுள்ள தீவுகளை.—

கடம் — வடசொல், யானைக்கன்னத்தின்பெயர்; அதில் வழியும் மதநீருக் காகுபெயராயிற்று. (௨௯)

351. கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்
டுப், போனதுவும் வேந்தற்குப் போதுமோ —
தானென்று, சாற்றினா னந்தவுரை தார்வேந்தன்
றன்செவியி லேற்றினான் வந்தா னெதிர்.

351. "Is it fit that a king should desert his wife in the forest and in the thick darkness?" Thus spake (புரோகிதன்) and Nala, having heard those words, confronted him thus.—

(இ-ள்.) கானகத்து - காட்டில், காதலியை - மனைவியை, கார் இருளில் - பேரிருளில், கைவிட்டு போனதுவும் - விட்டு நீங்கிய செயலும், வேந்தற்கு போதுமோ என்று சாற்றினான் - அரசனுக்குத் தகுமோவென்று சொன்னான் (புரோகிதன்;) அந்த உரை - அந்த வார்த்தையை, தார் வேந்தன் - நளன், தன் செவியில் ஏற்றினான் - தன்காதிற் கொண்டவனாகி, எதிர் வந்தான் - (புரோகிதனுக்கு) எதிரிலே வந்தான், எ-று.

தான் - அசை. ஓ - எதிர்மறை. (௩௦)

[எதிரில்வந்து நின்று சொல்லிய மறுமொழி.]

352. ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண் — தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்னேயை வெவ்
வனத்தே, நீத்தானென் றையுறே னீ.

352. "Consider the desertion in her sleep of the wife adorned with glittering bangles, as the predestined result of Fate, and do not suppose that the king, whose white umbrella is adorned with circlets of cool pearls, abandoned the beautiful maiden in the sultry forest," said Nala.

(இ-ள்.) ஒள் தொடி தன்னை - பிரகாசமான வளையலணிந்த காதலியை, உறக்கத்தே நீத்ததுவும் - தூக்கத்தில் கைவிட்டதும், பண்டை விதியின் பயனே - பழமையான விதியின் பலனே, காண் - ஆராய்ச்சி; தண் தரளம் பூ தாமம் - குளிர்ச்சியான முத்துக்களின் அழகிய மாலைகள் சூழ்ந்த, வெண் குடையான் - வெள்ளைக்குடையுள்ள அரசன், பொன்னை - பொன் மகளை - பொன்போன்ற பெண்ணை, வெவ் வனத்தே நீத்தானென்று - வெப்பமான காட்டிலே விட்டானென்று, நீ ஐயுறேல் - நீ சந்தேகப்படாதே, என்றான் - என்றான், மன்னன் - திருநம்களுமான்.

ஐயுறேல் — எதிர்மறை யேவலொருமை.

353. எங்கணுறைந்தனை கொல் எத்திசைபோய் நாடி
னைகொல், கங்கைவள நாட்டார் தங் காவலனை —
அங்குத், தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்
றாள் கண்ணீர், அலைப்பட்ட கொங்கையா
ளாங்கு.

353. Damayanti, upon whose breasts her tears flowed in wavelets, said:—"Tell me where you went. In what corner of the earth did you seek for my husband; the king of the fertile country of Nidatha, surrounded by the water of the Ganges? Did anything relating to this matter happen?"

—(இ-ள்.) [இச்செய்தி தெரிந்து குண்டினபுரஞ் சென்ற புரோகிதனை நோக்கித் தமயந்தி] கண்ணீர் - கண்ணீரானது,

அலேப்பட்ட - அலேகளைக்கொண் டிருக்கின்ற, கொங்கையாள் - தனங்களையுடையவளாகி, எங்கண் உறைந்தனை - எங்கேபோ யிருந்தாய், கங்கை வள நாட்டார்தம் காவலனை - கங்கைசூழ் ந்த வளப்பமுள்ள நிடதநாட்டாருடைய அரசனாகிய என் நாயகனை, எத்திசை போய் நாடினை - எந்தத் திக்கிற்சென்று தேடினாய், அங்கு - நீ சென்ற இடங்களில், தலைப்பட்ட ஆறு - நேர்பட்ட வகை, உண்டோ—, சாற்று என்றாள் - சொல் லென்று சொன்னாள், எ - று.

கொல் - இரண்டும், ஆங்கும் - அசை. தலைப்படுதல் - நேர படுதல். (ருடு)

354. வாக்கினன் மன்னவனை யொப்பான் மறித்தொரு கால், ஆக்கையே நோக்கி னவனல்லன் — பூக் கமழும், கூந்தலாய் மற்றக் குலப்பாக னென் றுரைத்தான், ஏந்துநூன் மார்ப னெடுத்து.

354. That Brahmin, who wore upon his breast the sacred thread, said :—"That charioteer, in his speech resembles a king, and again, if we look at his body, he does not appear a king."

(இ - ள்.) ஏந்தும் நூல் மார்பன் - பூணூலைத் தாங்கிய மார் பையுடைய அந்தப் பிராமணன், பூ கமழும் கூந்தலாய் - மலர் வாசிக்கின்ற கூந்தலை யுடையவளே, அ குல பாகன் - (நீ சொல் லியபடி பரீக்ஷிக்கப்பட்ட) அந்த மேன்மையான தேர்ப்பாக னொருவன், வாக்கினால் - பேச்சினாலே, மன்னவனை ஒப்பான் - அரசனை ஒத்திருக்கின்றான், மறித்து ஒருகால் - திரும்பி யொரு தரம், ஆக்கையே நோக்கில் - உடம்பைப் பார்த்தாலோ, அவன் அல்லன் - அரசனல்லன், என்று எடுத்து உரைத்தான் - என்று விளங்கக் காட்டிச்சொன்னான், எ-று. மற்று - அசை.

பூக்கமழும் — "பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன் றும்" என்றதனால் வன்மையுந் தோன்றியது. (ருரு)

355. மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிரும்டங்கை பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால் — நீண்ட, கொடைவேந்தற் கித்துரகத் தேர்க்

ரம் தேர்க்கோலங் கொள்வான், படைவேந்த னென்றாள்
பரிந்து.

355. "O Brahmin! If you go and say to that charitable king that the excellent daughter of Bhima is holding another Swayamveram ceremony, king Nala, the possessor of armies, will come to this distant place in his disguise of a charioteer." Thus spoke Damayanti, with a troubled mind.

(இ-ள்.) [அதைக்கேட்டுத் தமயந்தி] அந்தண - வேதியனே, வீமன் திருமடந்தை - வீமராசனுடைய சிறப்புள்ள மகள், மீண்டு - மறுபடியும், ஓர் சுயம்வரத்தைப் பூண்டாள் என்று - ஒரு சுயம்வரச்சடங்கை ஏற்றுக் கொண்டாளென்று, நீ போய் உரைத்தால் - நீ போய்ச் சொன்னால், நீண்ட கொடை வேந்தற்கு - மிகுந்த ஈகையுள்ள அவ்வரசனுக்கு, படை வேந்தன் - சேனைகளையுடைய நளமகாராசன், இத்தூரம் - இவ்வளவுதூரத்துக்கு, தேர் கோலம் கொள்வான் - தேரோட்டுங் கோலத்தைப்பூண்பான், என்றாள் பரிந்து - என்று இரங்கிச் சொன்னாள், எ - று.

பரிந்து - அன்புகூர்ந்து, என்னவுமாம். சுயம்வரம் — தானே புருஷனை ஏற்படுத்திக்கொள்ளல். (௩௫௫)

356. எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரச மறைவித்தான் — செங்கோலாய்
அங்கோ ரெருநாளை யெல்லென்று அந்தணன்போய்த்
தென்னனுந் தாரானைச் சேர்ந்து.

356. That Brahmin, having departed, came to the king of Oude, who wore a garland which excelled all others in beauty, and said:—"O king! A second Swayamveram is being held for Damayanti, the daughter of our monarch, who has commanded the drum to be beaten. The time is within to-morrow."

(இ - ள்.) அந்தணன் போய் - புரோகிதன் போய், தென் ஆரும் தாரானை - அழகு நிறைந்த மாலையையுடைய அயோத்தி யரசனை, சேர்ந்து, செங்கோலாய் - அரசனே, எங்கோன் - எங்களரசன், மகளுக்கு - தன்மகளாகிய தமயந்தி

பொருமை எதிர்காலவினைமுற்று ; கு - விகுதியே காலங்காட்டும், இ - ன்பக்குறிப்பு.

சுயம்வரத்தில் அயோத்தியரசன் தன்மீது மிக்ககாதல்கொண்டதை யறிந்திருப்பதினால் தமயந்தி அங்ஙனம் அவனுக்கே தெரிவித்தாள். "ஆசை கொண்டான் பித்துங் கொண்டான்" என்கிற பழமொழிப்படி அவ்வரசன் இச்செய்தி மெய்யென்றே நம்பி பிரயாணமாவானென அறிக. நளன் அவனிடத்துத் தேர்ப்பாகனா யிருப்பதனால் அவசியம் இங்கு வருவான் என்பது முக்கியக்கருத்து. (௩௬)

358. குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையா ளின்று — பறிபீறி
நெல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல். —

358. "King of the extensive country in which the large வரால் fish, forcing themselves out of the bag into which they are thrown jump into the field of corn, Can Damayanti, whose disposition is full of chastity, and who thinks of no one else save her husband, be capable, this day, of such speech?"

(இ-ள்.) [அதற்கு நளன் சொல்லினது] பறி பீறி - மீன் போடுகின்ற நெற்பையைப் பீறிக்கொண்டு, நெல்லில் - நெற்பயிரில் (வந்து) வரால் ஓடும் - பருத்த வரால்மீன் ஓடப்பெற்ற, நெடு நாடா - பெரிய நாட்டையுடைய அரசனே, குறையாத கற்பினாள் - நிறைந்த பதிவிரதா குணமுள்ள, கொண்டானுக்கு அல்லால் - கலியாணஞ் செய்துகொண்டவனுக்கல்லது, இறவாத - (தன்னை) செலுத்தாத, ஏந்திழையாள் - தமயந்தி, இன்று - இன்றைக்கு, இச்சொல் சொல்லப்படுமோ - இந்தப் பேச்சைச் சொல்லத் துணிவளோ, எ - று.

கற்பினாள் என்னுங் குறிப்புமுற்று ஈண்டு பெயரெச்சமாகக் கொள்ளப்பட்டது. (௩௭)

359. சின்பே செறிகின்ற மாலை யெழினளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளில் — அன்

னதற்குக், காரணந்தா னீதன்றோ வென்றான்
கடாஞ்சொரியும், வாரணந்தா னன்னான் மதித்து.

359. The king of Oude who resembled a rutting elephant esteeming the words of the புரோகிதன் said:—"The garland of flowers intended to be cast on me at the former Swayamveram fell on the beautiful Nala. Did not that happen in order to cause this second event?"

(இ - ள்.) கடாம் சொரியும் - மதநீரைப் பொழிகின்ற, வாரணம் அன்னான் - யானையையொத்த அயோத்திராசன், மதித்து - (புரோகிதன் பேச்சை) மெய்யாக் மேற்கொண்டு, முன் நாளில் - (சுயம்வரம் நடந்த) பூர்வகாலத்தில், என்மேல் எறிகின்ற மாலை - என்னை நோக்கி எறிந்த பூமாலை, எழில் நளன் தன் முன்னே - அழகுள்ள நளமகாராசன் மேலே, விழுந்தது காண் —; அன்னதற்கு - அப்படி விழுந்தசெய்கைக்கு, காரணம் தான் —; ஈது அன்றோ என்றான் - இது அல்லவோ என்று சொன்னான், எ - று.

ஈது என்றது மறுதரஞ் சுயம்வரங் கோடித்ததை. காண் - தான் - அசைகள். காண் - யோசித்துப்பாரெனினு மொக்கும். இது, ஈது ஆனது செய்யுள் விகாரம், "ஏகரவிறு" என்னுஞ் சூத்திரத்தில் விட்டு நீளி லென்பதைக் காண்க.]

எறிகின்ற — அக்காலநோக்கி இறப்ப நிகழ்காலத்திற் [illegible] [illegible] என்பதின் விகாரம்.

[இப்பாட்டினால் அப்போது நளன் சிந்தித்ததைச் சொல்லுகிறார்.]

360. முன்னை வினையான் முடிந்ததோ [illegible]
இவள், என்னைத்தான் காண விழைந்ததோ — தன்
மரபுக், கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்
பட்ட, தெவ்வாறு கொல்லோ விது.

(௩)360. "Has this happened, thought Nala, in consequence of an action done at a former birth? or has Damayanti done this only to discover me? By what means have these words, unworthy of her family, spread through the world?"

(இ - ள்.) முன்னை வினையால் முடிந்ததோ - சன்மாந்தர கர்மத்தினால் நிறைவேறியதோ, மொய் குழலாள் - தமயந்தி, என்னைக் காணத்தான் இசைந்ததோ - என்னைக் கண்டுபிடிக்கத்தான் செய்யலாயிற்றோ, தன் மரபுக்கு - தன் வமிசத்திற்கு, ஒவ்வாத வார்த்தை இது - ஒத்திராத பேச்சாகிய இது, உலகத்து உரைப்பட்டது - உலகத்தில் வழங்கியது, எவ்வாறு கொல்லோ - எவ்விதத்தி லானதோ, எ-று.

கொல் — ஐயப்பொருளில் வந்தது. ஓ - அசை. மொய்குழலாள் — மொய் - நெருங்கிய, குழலாள் - கூந்தலையுடையவள், வினைத்தொகை. (௩௯)

361. காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்
றன், ஏவன் முடிப்ப னினியென்று — மாவிற்
குலத்தேரைப் பூட்டினான் கோதையர்தங் கொங்
கை, மலர்த்தே னளிக்குந்தா மன்.

361. "I have accepted to serve the king and therefore I shall hereafter do the work he commands." Thus soliloquizing Nala, who was adorned with a garland, from the flowers of which, the dripping honey moistened the breasts of maidens, harnessed the horses to the beautiful chariot.

(இ-ள்.) காவலனுக்கு - இவ்வரசனுக்கு, ஏவல் கடன் பூண்டேன் - ஏவல்செய்யுங் கடமையை ஒத்துக்கொண்டேன் (ஆதலால்,) இனி - இனிமேல், அவன்தன் ஏவல் - அவனுடைய ஏவற்பணியை, முடிப்பன் - நிறைவேற்றுவேன், என்று —, கோதையர்தம் கொங்கை - பெண்களுடைய முலைகளில், மலர் தேன் துளிக்கும் - பூக்களிலிருக்கிற தேன் துளித்து விழும்படியான, தார்மன் - மாலையணிந்த நளமகாராஜன், மாவின் - குதிரைகளோடு, குலம் தேரை பூட்டினான் - மேலான தேரை இணைத்தான், எ - று. மற்று - அசை. (௪௦)

362. ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன் — மற்றி
தற்கே, யேறு கென்றுரைத்தான் பொற்

மென் - றளிமுரலத், தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய்.

362. King Nala, who wore a garland which poured forth honey, as the bees swarmed about it, buzzing said :— 'I have brought you a great victorious chariot which, in speed, can equal the single and matchless wheeled chariot of the Sun. Come and get into it.'

(இ - ள்.) பொரம் என்று - பொர்ம் என்னும் மோசைச்செயிடு, அளி முரல - வண்டுகள் சப்திக்க, தீ தேறல் வாக்கும் - மதுரமான) தேனை ஊற்றுகின்ற, தார் - பூமாலையணிந்த, சேய் - நளமகாராசன், ஒற்றை தனி ஆழி - ஒன்ருகிய ஒப்பற்ற உருளையை யுடைத்தான, தேர் என்ன - (சூரியனுடைய) தேரைப போல், ஓடுவது - ஓடத்தக்க, ஓர் கொற்றம் நெடு தேர் கொடு வந்தேன் - ஒரு ஜயம் பொருந்தின பெரியதேரை, கொண்டு வந்தேன், இதற்கு - இத்தேரில், போந்து ஏறுக என்று உரைத்தான் - வந்து ஏறக்கடவாயென்று சொன்னான், எ - று. மன் - மற்று - அசை.

நளன் அவ்வரசனை நோக்கி என்னசெய்வே னென்று விசாரப்படுவதை யொழித்து இந்த மேன்மையான தேரில் ஏறிக்கொள் காரியசித்தியாகுமென்ருன் என்பதாம். ஆகவே மற்று - வினைமாற்றில் வந்ததெனக் கொள்ளலாம்.

ஒற்றை = ஒன்று ; இந்த மென்றொடர்க் குற்றியலுகரம் "மென்றொடர்மொழியுள்" என்கிற சூத்திரத்தினல் வன்றொடராகி "ஐயீற்றுடைக்குற் றுகரமுமுளவே" என்பதனல் ஐகாரச்சாரியை பெற்றது. இரட்டையு மிப்படியே. (௬௨)

363. முந்தை வினைகுறுக மூவா மயில்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே — சந்தவிரைத்
தார்குன்ற மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே, தேர்கின்ற னார்கின்ற தேர்.

363. Understanding, in his mind, this act of Damayanti, whose soft tresses were filled with beautiful and fragrant garland, and forming his resolution, Nala pressed by the acts of his former birth, drove the chariot swifter

even than the unquenchable desires in the mind of the king of Oude.

(இ-ள்.) சந்த விரை தார் - அழகும் வாசனையுமுள்ள மாலைகள், குன்று - குறையாத, ஒல் ஓதி தன் செயலை - மெல்லிய கூந்தலையுடைய தமயந்தியின் செய்கையை, தன் மனத்தே தேர்கின்றான் - தன்மனதிலே நிச்சயித்துத் தெளிந்த நளமகாராசன், ஊர்கின்ற தேர் - ஏறிச்செலுத்துகின்ற ரதம், முந்தை வினை குழுக - பூர்வ கருமம் நெருங்கினதனால், மூவா மயல் கொண்டான் - தேயாத ஆசை (அல்லது) மயக்கங்கொண்ட ருதுபர்ணனுடைய, சிந்தையினும் - மனதைக்காட்டிலும், கடிசு சென்றது - சீக்கிரம் ஓடிற்று, எ-று. ஏ - அசை.

ருதுபர்ணன் என்பது அயோத்தியரசன்பெயர். இரண்டாஞ் சுயம்வரம் அசம்பவமென்றும் அப்படியானாலும் தன்னையே வரிப்பது சதமென்றென்றும் நினையாமல், அவன் மயல்கொண்டது முந்தைவினைப்பயனென்றபடி. உம்மை - ஆசை மயக்கங்களால் கடுகச்செல்கிறதென்னுஞ் சிறப்பில் வந்தது. சிந்தையின் - இதில் இன் உருபு எல்லைப்பொருளில் வந்ததெனக் கொள்க. (கூஉ)

364. மேலாடை வீழ்ந்த தெடுவென்றா னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே - தோலாமை
மேல்கொண்டா னேறிவரு வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

364. "My upper garment has fallen off, pick it up," said the king who esteemed it an honor not to yield to one's enemies, as he rod in is chariot But by this time, Nala, whose mind was turned by the deceit of the angry Kali, plying the whip, had driven the horses a distance of 4 or 6 kathams. [காதம் = 10 miles.]

(இ-ள்.) தோலாமை - எதிரிக்குத் தோற்காதிருப்பதை, மேல் கொண்டான் - மேலாகக்கொண்ட ருதுபர்ணன், ஏறிவரு - ஏறிவருகையில், மேலாடை வீழ்ந்தது - எடு என்றான் - மேலே தரித்த வஸ்திரம் கீழே வீழ்ந்தது (அதை) - எடு வென்று சொன்னான் (அயோத்தி அரசன்,) அவ்வளவில் - அந்தக் காலத்துக்குள், வெம்மை கலி சூதின் - கோபமுள்ள கலியின்

வஞ்சனேயினால், மால் கொண்டான் - மயக்கங் கொண்டநளன் கோல் கொண்ட - சாட்டிகொண்டு தூண்டிய, மா - குதிரை, நாலு ஆறு காதம் நடந்தது - நான்கு (அல்லது) ஆறுகாதவழியில் ஓடிற்று, எ - று. ஏ - அசை.

நாலாறு - இருபத்து நான்கு என்னவுமாம். குதிரை—சாதியொருமை. மேல்கொண்டான் - தன்னிடத்திற்கொண்டான் எனவு முரைக்கலாம்; இது ஏழாம்வேற்றுமைத் தொடர். முன்னது குறிப்புவினையெச்சத்தொடர். இரண்டுவிதத்திலும் "குறில்செறியாலள" என்கிறவிதியால் லகரம் இயல்பாயிற்றென் றறிக். (௬௪)

365. இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணிற்
பத்தா யிரங்கோடி பாரென்ன—உய்த்ததனிற்
றேர்நிறுத்தி யெண்ணினன் றேவர் சவைநடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் றான்.

365. "Look, if you count the fruits of this huge தான்றி tree, which is on this low field, they will amount to 10,000 crores," said the king of Oude. And Nala, whose shoulders received the marriage garland in the midst of the assembly of Gods, having halted the chariot in that field, counted them carefully.

(இ - ள்.) (இங்ஙனம் போய்க்கொண்டிருக்கையில்) இத்தாழ் பணையில் - இந்தத் தாழ்மையான வயலில், இரு தான்றி காய் எண்ணில் - பெருமையான தான்றிமரத்தின் காய்களை எண்ணிப்பார்த்தால், பத்து ஆயிரம்கோடி - பதினுயிரங்கோடி, பார் என்ன - சோதித்துப்பாரென்று (அயோத்தியரசன்) சொல்ல, தேவர் சவை நடுவே - தேவருடைய சபையின்மத்தியிலே, தார் நிறுத்தும் தோள் வேந்தன் - மணமாலை நிற்கச் செய்யப்பெற்ற தோளையுடைய - நளமகாராசன், அதனில் தேர் நிறுத்தி - அவ்வயலினிடத்தே தேரை நிற்கச்செய்து, உய்த்து எண்ணினன் - கூர்மையாகப் பார்த்து எண்ணினான், எ - று. தான் - அசை.

கோடி—கொள் என்ற ஏவல்முற்றுமாம். அதனை எச்சமாவைத்து நீ எண்ணிச்சகொண்டுபார் எனவு முரைக்கலாம்.

கொள் - பகுதி, இ - விகுதி, த் - எழுத்துப்பேறு, தி - விகுதி என்னலாம்; பகுதி முதல் நீண்டது; "குறில்செறியாலள" என்பதினுல் ளகரங்கெட்டது. "ணளமுன் டணவும்" என்கிற விதியால் த் - ட் ஆனது. [illegible] (சச)

366. ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றொடை
பீறிக், காரடுத்த சோலைக் கடனாடன் — தேர
டுத்த, மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதி
யோ வென்றுரைத்தான், தேர்த்தொழிலின் மிக்
காளைத் தேர்ந்து.

366. The king of the country adjoining the sea and surrounded by groves, where the men who drive ploughs, lifting up their sticks, strike the bunches of flowers above them, so that the honey which bursts forth reaches the clouds, esteeming Nala who excelled in the art of chariot driving, said;—"Would you exchange the art of driving the chariot for the art of counting these fruits?"

(இ - ள்.) ஏர் அடிப்பார் - உழவுமாடுகளைத் துரப்பவர், கோல் எடுப்ப - தாற்றுக்கோலை உயரவெடுக்கையில், இன் தேன் தொடைபீறி - இனிமையான தேனானது பூங்கொத்தைப்பீறிக் கொண்டு, கார் அடுத்த - மேகத்தைச் சேரப்பெற்ற, சோலை - சோலைகள் சூழ்ந்த, கடல் நாடன் - சமுத்திரமடுத்த நாட்டையுடைய ருதுபர்ணன், தேர் தொழிலின் மிக்கானை - தேரோட்டுந் தொழிலில் மேன்மையான நளனை, தேர்ந்து - மதித்து, தேர் அடுத்த மா தொழிலும் - தேரிற்கட்டிய குதிரையோட்டுந் தொழிலையும், இத் தொழிலும் - இந்தக் காயெண்ணுந் தொழிலையும், மாற்றுதியோ என்று உரைத்தான் - மாற்றிக்கொள்ளுகிறாயா வென்று சொன்னான், எ - று.

என் கல்வியை யுனக்குக் கற்பிக்கின்றேன் உன் கல்வியை எனக்குக் கற்பிக்க வுடன்படுகிறையா என்றான் என்றதாம். ஏரடிப்பார் எடுத்த கோல் தாக்கிச் சோலைக்கண் பூங்கொத்தினின்று தேன் அலைகளைப்பீறி யெழும்பி அச்சோலையிற் படிந்திருக்கிற மேகத்தைச் சேர்கின்றதென நாட்டின் சிறப்பை அதிசய அணியாகக் கூறினார். அந்நாட்டின் கிழக்கெல்லை கடற்கரை வரைக்கும் போலும். (சரு)

367. வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோ
 மான், தண்டார் புனைசந் திரன் சுவர்க்கி—கொ
 ண்டாடும், பாவலன்பா னின்ற பசிபோனீங்கி
 ற்றே, காவலன்பா னின்ற கலி.

367. Kali departed from king Nala, as the hunger departs from those poets who were exalted by our king Chandra Swarki, who is adorned with cool garlands, and who rules the country of Malwa, which abounds in beetles, and which is surrounded by fertile fields.

(இ - ள்.) வண்டு ஆர் - வண்டுகள்நிறைந்த, வளவயல்சூழ் - வளப்பமான வயல்கள் சூழ்ந்த, மள்ளுவ நாட்டு - மள்ளுவ நாட்டையாள்கின்ற, எம் கோமான் - எம்முடைய அரசனாகிய, தண் தார் புனை - குளிர்ச்சியான பூமாலை யணிந்த, சந்திரன் சுவர்க்கி—, கொண்டாடும் - மேன்மைப்படுத்துகின்ற, பாவலன்பால் நின்ற - கவியினிடத்தி லிருந்த, பசி [illegible] யைப்போல், காவலன்பால் நின்ற கலி - நள மகாராசனிடத் திருந்த கலிதோஷம், நீங்கிற்று - தீர்ந்தது, எ - று.

அவ்வரசனிடத் திருந்து நளன் அக்ஷ இருதயம் என்னும் வித்தையைக் கற்றான்; அவ்வித்தை சொக்கட்டா னுட்டம் மரத்தின் இலை காய்களை யெண்ணல் இவையெல்லாம் வல்லது, ஆதலின் கலியின் வல்லமை இவன் கையில்வரக் கலி நீங்கினு னென்பது கருத்து. இதை ஸ்ரீமகாபாரதத்தாலுணர்க. கவி இங்கு பாவல னென்று ஒருமையாற் கூறியது தன்னையென்பார். சாதியொருமை எனக்கொண்டு பலருக்கு மாக்கலாம். (சகூ)

368. ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளும், காமர்
 நெடுநாடு கைவிட்டு—வீமன்றன், பொன்னகரி
 சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்,
 அன்னகரி யுடையா னங்கு.

368. The king of Oude who possessed an elephant which resembled Yama, who rises desirous for war, left the large and beautiful country where the crabs sleep on the backs of the turtles, and arrived at the splendid capital of king Bhima.

(இ - ள்.) போர் வேட்டு - யுத்தத்தை விரும்பி, எழும் கூற்றம் அன்ன - எழுகின்ற யமனையொத்த, கரி ஒன்று உடையான் - ஒரு யானையையுடைய அயோத்தியராசன், ஆமை முதுகில் - ஆமைகளின் முதுகுகளில், அலவன் துயில்கொள்ளும் - நண்டுகள் தூங்கப்பெற்ற, காமர் நெடு நாடு - அழகான பெரிய நாட்டை, கைவிட்டு - நீங்கி, வீமன் தன் பொன் நகரி - வீமராசனுடைய பொன்பொருந்த பட்டணத்தை, சென்று அடைந்தான் - போய்ச் சேர்ந்தான், எ - று. ஆங்கு - அசை.

வேட்டு—வேள் - பகுதி, உ - விகுதி, ட் - இடைநிலை; ள் ட் ஆனது சந்தி. (௬௮)

369. வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயின்
முற்றத் திருத்தி முறைசெய்யுங் — கொற்றவற்
குத், தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

369. Having caused his victorious and matchless chariot to be stopped in the yard of king Bhima's palace, ருதுபர்ணன் commanded his arrival to be announced to the king, who administered justice; and rejoicing, sought a retired spot.

(இ - ள்.) வெற்றி தனி தேரை - ஜயமுள்ள தனிமையான தேரை, வீமன் பெரு கோயில் முற்றத்து - வீமனுடைய பெரிய அரமனையின் முன்றிலிலே, இருத்தி - இருக்கச்செய்து, [நிறுத்தி,] முறை செய்யும் கொற்றவர்க்கு - நியாயத்தை நடத்துமராசனுக்கு, தன் வரவு கூற பணித்து - தான் வந்ததைச்சொல்லும்படி கட்டளையிட்டு, மன் விரவு தாரான் - பெருமைசேர்ந்த சேனையையுடைய ருதுபர்ணன், மகிழ்ந்து - சந்தோஷித்து, தனி புக்கான் - தனியிடஞ் சென்றான், எ - று.

தார் - மாலையெனவுங் கொள்ளலாம். முற்றம் - வீட்டின் எதிர்ப்புறம். மகிழ்ச்சி, சுயம்வரநாள் தப்பாது வந்தோமென்பதனாலாகியது. (௬௯)

370. கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்

நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்.

370. "O king of the great country where the winged bees, which retire to sleep on the lotus flowers after imbibing the fresh fragrant honey, again seek after the black நெய்தல் what is the desire which causes you to come to me?" said Bhima.

(இ - ள்.) [ருதுபர்ணனை வீமன் வினவியது.] கன்னி நறு தேறல் மாந்தி - இளமையான வாசனையுள்ள தேனைக்குடித்து, கமலத்தில் மன்னி - தாமரைமலரில் பொருந்தி, துயின்று, வரி வண்டு - தாங்கின இரேகைகளுள்ள வண்டுகள், பின்னையும் போய் - மறுபடியும்போய், நெய்தற்கு அவாவும் - கருநெய்தற் பூவை விரும்புகிற, நெடு நாட - பெரியதேசத்தரசனே, நீ என் பால் எய்தற்கு - நீ என்னிடம் வருவதற்கு, அவாவிய ஆறு என் - அபேக்ஷித்த விதமென்ன, எ - று.

குவ்வுருபு செயப்படுபொருளில் தகுதியாய் வந்தது. (௪௯)

371. இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்
ஙன், மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன் —
என்றான், ஒளியார்வேற் கண்ணாண்மே லுள்ளந்
துரப்பத், தெளியாது முன்போந்த சேய்.

371. The prince ருதுபாணன் who advanced, his mind becoming irresolute at the thought of Damayanti, who possessed bright lance-like eyes, said :—"O thou, adorned with fragrant garlands, I have come here, this day, with a desire to see you."

(இ - ள்.) ஒளி ஆர் வேல் கண்ணாள் மேல் - காந்தி நிறைந்த வேல்போன்ற கண்ணையுடைய தமயந்தியினிடத்தில், உள்ளம் துரப்ப - மனஞ் செலுத்துவதனால், தெளியாது - தெளிவில்லா மல் [மயங்கி,] முன் போந்த சேய் - முன்னிட்டுவந்த ராசகுமா ரன் [ருதுபர்ணன்,] மன்றல் மலர் தாராய் - பரிமளமுள்ள பூமாலையுடையவனே, உன்னை காண்பது ஓர் ஆதரவால் - உன் னைக் காணும்படியான ஓராசையினால், யான் —, இன்று இங்ஙன் வந்து அடைந்தேன் - இன்றைக்கு இவ்விடம்வந்து சேர்ந்தேன், என்றான் —, எ - று.

இன்று, இங்ஙன்,—இடைச்சொற்கள்; பெயரெனக் கொள் வாருமுளர். (௫௦)

372. ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து.

372. The king of the country of Nidatha,—where the black நெய்தல் blossoms at the corner of the buffaloes' mouth, having unharnessed and rested the horses of the excellent huge chariot, entered the kitchen, intending to finish the remaining work of cooking which is free from all defect.

(இ - ள்.) மேதி கடை வாயில் - எருமையின் கடைவாயிலே, கார் நீலம் கண் விழிக்கும் நாடன் - கருநெய்தற்பூ மலரப்பெற்ற நிடதநாட்டரசன், ஆதி நெடு தேர் பரி விட்டு - முதன்மையான பெருந் தேரிற் பூட்டிய குதிரைகளை யவிழ்த்துவிட்டு, அவை ஆற்றி - அவைகளை இளைப்பாறுவித்து, கோது இல் அடிசில் குறை - குற்றமில்லாத சோறு சமைப்பதாகிய குறையை, முடிப்பான் - முடிக்கும்பொருட்டு, மதித்து - யோசித்து, மடைவாயில் - மடைப்பள்ளியி னிடத்தில், புக்கான் - பிரவேசித்தான், எ - று.

முதல்வேந்தர் இக்ஷ்வாகு வம்சத்தரே யாதலால், அம்மரபில்வந்த தேரை ஆதித்தேர் என்றார்; அரசன்தேர் எனினுமொக்கும். மேதிக்கடைவாயிலே நீலம் கண்விழிப்பது என்பது எருமை தின்னும்போது மலர்வதென்பதாம். மடை—மடுக்கப்படுவது; மடுத்தல்—உட்கொள்ளல், தின்னல். (௫௧)

373. ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

373. Like the mind of the great, who rule the path of justice, and have learnt all the ancient Vedas, the house into which Nala the excellent driver of the beautiful chariot entered, and which before was empty, become filled with every variety of materials requisite.

(இ - ள்.) ஆதி மறைநூல் அனைத்தும் - முதன்மையான வேத சாஸ்திரங்களெல்லாவற்றையும், தெரிந்து உணர்ந்த - ஓதி யறிந்திருக்கிற, நீதி நெறியாளர் - நீதிவழியாளர்களின்ற பெரியோர்களுடைய, நெஞ்சம்போல் - மனதைப்போல, நெடுந்தேர் - அழகிய தேரினது, வலம் பாகன் புக்க - சிறந்த பாகனாகிய நளன் பிரவேசித்த, மனை - வீடு, யாதும் நிரம்பாமல் - ஒன்றையும் (எவஸ்துக்கள்) நிறைக்காமலிருக்க, எல்லாம் நிரம்பிற்று - எல்லாப்பண்டமும் நிறைந்தது, எ - று. ஏ - அசை.

நெஞ்சம்போல் நிரம்பிற்றெனக் கூட்டுக. மறைநூல் - மறைகளாகிய நூல், அல்லது மறையும் நூலும். (௩௭௩)

374. இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த
கொடைத்தொழிலா னென்றயிர்த்த கோமான்—
மடைத்தொழில்கள் செய்கின்ற தெல்லாந் தெ
ரிந்துணர்ந்து வாவென்றா னைகின்ற நெஞ்சா
ணையந்து.

374. Damayanti, whose mind was weighed down by sorrow, and who doubted whether this was the large-hearted Nala who deserted her at midnight in the midst of the desert, said affectionately to one of her attendants, "Go, and take notice of the different ways in which he cooks and eats."

(இ - ள்.) நைகின்ற நெஞ்சாள் - விசனத்தினால் தளர்கின்ற மனமுள்ள தமயந்தி, நயந்து - விரும்பி, [பிரியமாகப்பேசி யென்கிறபடி,] இடைச்சுரத்தில் - பாலைவனத்தின் நடுவிலே, இடை இருளில் - நடு ராத்திரியில், தன்னை நீத்த - தன்னை விட்டுப்போன, கொடை தொழிலான் என்று - உதார குணமுள்ள நளனென்று, அயிர்த்த - சந்தேகிக்கப்பட்ட, கோமான் - நளமகாராசன், மடை தொழில்கள் - சமைக்குங் காரியங்களை, செய்கின்றதெல்லாம் - செய்யும் வகையெல்

376. Nala, who possessed warlike and rutting elephants, seeing his children before him, became troubled in mind, and, heaving a hot sigh, went and took them up, and embraced them with his heroic shoulders, exclaiming "O children, you resemble my offsprings. Whose children are you?"

(இ - ள்.) வன்மம் - பகைக்குணமுள்ள, களி யானை - மதயானையையுடைய, மன் - நளமகாராசன், மக்களை முன் காணு - புத்திரரை எதிரில் கண்டு, மனம் நடுங்கா - இதயம் நடுங்கி, வெய்து உயிரா - வெப்பமாக மூச்செறிந்து, புக்கு எடுத்து - போய் எடுத்து, வீரம் புயத்தி அணையா - வீரத்தன்மையுள்ள புசங்களாலே அணைத்து, மக்காள் - மக்களே, நீர் என்மக்கள் போல்கின்றீர் - நீங்கள் என்புத்திரரைப்போலிருக்கிறீர்கள், யார் மக்கள் - யாருடைய குமாரர், என்று உரைத்தான் — , எ - று.

மக்காள் — ஈற்றயல்நீட்சி விளியுருபாயிற்று. காணு முதலியவை செய்யா என்னும் வாய்பாட்டு எச்சம். மனநடுங்கா — சினை வினையாதலின் முதல்வினை கொண்டது. வெய்து — இங்கு வினையுரி. வன்மம் — வல் - பண்படி, பகுதி, அம் - தொழிற்பெயர் விகுதி, மகரம் எழுத்துப்பேறு. (௫௫)

377. மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவனேக — இந்
நகர்க்கே, வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்
றொருவன், ஆள்கின்றா னென்றா ரழுது.

377. Those children weeping, replied:—"We are the children of the great king Nala who protects the inhabitants of the country of Nidatha. As that king deserted our mother in the forest, we are living in this town. Another is ruling our fertile country."

(இ - ள்.) மன்னன் நிடதத்தார் - மகாராஜனாகிய நிடத தேசத்தார், வாழ் வேந்தன் - வாழ்கிறதற்குக் காரணமாகிய நளச்சக்கிரவர்த்தியினுடைய, மக்கள் யாம் - குமாரர்கள் நாங்கள், அவன் - அந்தச் சக்கிரவர்த்தி, அன்னை தனை - (எங்கள்) தாயை, கான் விட்டு ஏக - காட்டில் விட்டுப் போனதனால், இந்

நகர்க்கே வாழ்கின்றோம் - இந்தப் பட்டணத்திலேயே இருக்கிறோம், எங்கள் வள நாடு - எங்களுடைய வளப்பமான நாட்டை, மற்றொருவன் ஆள்கின்றான்—, என்றார் அழுது - என்று அழுது சொன்னார்கள் (அம்மக்கள்), எ - று.

நகர்க்கு—கு உருபு கண்ணுருபு ஆம். நகர்க்கே—ஏ - பிரிநிலை, எங்கள் நகர்க்குப் போகாமல் என்றபடி. (௫௬)

378. ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவில்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து.

378. The king of the excellent country of Nidatha where the கோங்கு flowers in the groves resemble cups, hearing these words of the children, became faint, his tears flowing like his mind, and stood there, his life alone clinging to him.

(இ - ள்.) பூ காவில் - பூந்தோட்டங்களில், வள்ளம் போல் - கிண்ணங்களைப்போல, கோங்கு மலரும் - கோங்கம்பூ மலரப்பெற்ற, திருநாடன் - மேன்மையான நிடதநாட்டையுடையவன், ஆங்கு - அப்படி, அவர் சொன்ன உரை கேட்டு - அம்மக்கள் சொன்ன பேச்சைக் கேட்டு, அழிவு எய்தி - (ஒன்றுந் தோன்றாம லிருக்கும்படியான) சோர்வை யடைந்து, உள்ளம் போல் - மனந்தப் போல், கண்ணீர் உகுத்து - கண்ணீரை உதிரச்செய்து, நீங்கா உயிரோடு - உடம்பைவிட்டு நீங்கமாட்டாத பிராணனோடு, நின்றிட்டான் - நின்றிருந்தான், எ - று.

"உள்ளம்போற் கண்ணீருகுத்து" என்பது அழிவெய்தியதனால் மனஞ் சோரவிட்டதுபோல் கண்ணீரையுஞ் சோரவிட்டென்று வர்ணியங்களி லொன்றையே உபமான மாகக் கூறிய வர்ணியோபமை யணி. மனதையும் உகுத்தான் கண்ணீரையும் உகுத்தா னென்பது கருத்து. நீங்காவுயிரோடு நின்றான் என்றதனால் உயிர் நீங்காக்குறை யொன்றேயன்றி மற்றச் செய்கைகள் நீங்கிக் கம்பம்போல் நின்றானென்றதாயிற்று. ()

379. உங்க ளரசொருவ னுளனீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை

வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தா லீன்ற
இளவரசை நோக்கி யெடுத்து. [நளன்

379. Taking up the young prince, whom he had begotten with great penance, Nala addressed him saying:—"O beautiful prince possessing fair hands; Is it not mean in you to run away and live here while another rules your kingdom?"

(இ - ள்) மாதவத்தால் பெற்ற - பெருந்தவத்தினாலீன்ற, இள அரசை - இராசகுமாரனை, எடுத்து நோக்கி—, செங்கை வள அரசே - சிவந்தகையையுடைய வளப்பமான ராசகுமாரனே, உங்கள் அரசு ஒருவன் ஆள - உங்கள் ராச்சியத்தை மற்றொருவன் ஆளாநிற்க, நீர் - நீங்கள், ஓடி போந்து - ஓடிப் போய், இங்கண் உறைதல் - இங்கே இருப்பது, இழுக்கு அன்றோ - தாழ்மையல்லவோ, என்று உரைத்தான்—,(நளன்), எ - று.

"செங்கைவளவரசே" என்றது, ஆளுதற்குரிய லக்ஷணங்களைக் குறித்தபடி. (ருஅ)

380. நெஞ்சால் நினைந்திம் மாற்ற முரைக்க நீயல்லால்
அஞ்சாரோ மன்ன ரடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமாற்கு
வாய்மையே கண்டாய் வலி. [ன்

380. "O thou, fit only for cooking in a kitchen? O thou, who dost a work full of meanness! Kings will fear to say these words that you say. Know that, to our king Nala, truth is strength."

(இ - ள்.) அடும் - சமைக்கின்ற, மடையா - மடைப்பள்ளிக்குரியவனே, எஞ்சாது - குறையாமல், தீமையே கொண்ட - கேட்டையே யுடைத்தாயிருக்கிற, சிறு தொழிலாய் - அற்பத் தொழில் செய்பவனே, நெஞ்சால் நினைத்து - மனத்தினாலே சிந்தித்து, இம் மாற்றம் உரைக்க - இந்தப்பேச்சைப் பேச, நீ அல்லாது - நீ யல்லாமல், மன்னர் அஞ்சாரோ - அரசர் பயப்படார்களோ, எங்கோமான் - எங்களரசனாகிய நளச்சக்கிரவாத்திக்கு, வாய்மையே வலி - சத்தியமே பலம், கண்டாய்; எ - று.

382. "Can menials understand the greatness of kings? Do not be angry with me who spake, ignorant of your rank." Having said this, he Nala, bowed his head, and fainted with affection, and stood with tears flowing from his eyes.

(இ - ள்.) [அதற்குத் தேர்ப்பாகன் கூறியது.] மன்னர் பெருமை - ராசாக்களுடைய பெருமையை, மடையர் அறிவரோ - மடைத்தொழிலாளர் அறிவார்களா, உன்னை அறியாது - உன்பெருமையையறியாமல், உரைசெய்த என்னை - பேசின என்னை, முனிந்தருளல் - கோபிக்கவேண்டாம், என்று - எனச்சொல்லி, முடி சாய்த்து - தலையை வணக்கி, கனிந்து உருகி - அன்புற்றுத்தளர்ந்து, கண் நீர் வார - கண்ணினின்றும் நீரொழுக, நின்றான் -, எ - று.

முனிந்தருளல் — எதிர்மறை யேவலொருமை வினைமுற்று; வியங்கோள் முற்றுமாம். அல் விகுதியே மறுத்தலையும் ஏவலையுங் காட்டுமெனத் துணிந்தாருமுளர். அருள் என்னுஞ்சொல், உயர்ந்தோரைநோக்கிச் சொல்லுமிடத்தில் வருவது. கண்ணீர் ஒழுகல் அன்பினால். (௩௮௨)

383. கொற்றக் குமரனையுங் கோதையையுங் கண்டு, மற்றவன்றா னங்குரைத்த வாசகத்தை — முற்றும், மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே, அழிந்தாள் விழுந்தா ளழுது.

383. When Damayanti saw her royal son and her daughter, they related to her all that the charioteer had said to them there. But before they had finished speaking, her mind became troubled, and she fell down weeping.

(இ - ள்.) கொற்ற குமரனையும் - ராஜலக்ஷணமுள்ள மகனையும், கோதையையும் - மகளையும், கண்டு —, அவன் - அந்தப்பாகன், ஆங்கு - அவ்விடத்தில் (அல்லது) அப்படி, உரைத்த வாசகத்தை - சொன்ன பேச்சை, முற்றும் மொழிந்தார் - முழுதுஞ்சொன்னார் (மக்கள் முதலானோர்), அம் மாற்றம் - அப்பேச்சு, மொழியாத முன்னே - சொல்லாதமுன்னமே, அ

தாள் - மனம் அழிந்தவளாகி, விழுந்தாள் அழுது - விழுந்தழு தாள் (தமயந்தி,) எ - று. தான் - இரண்டும், மற்று - அசைகள். மொழியா தழுமன் என்பது விரைவைக் குறிக்கின்றது. (கூஉ)

384. கொங்கை யளைந்து குழறிருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டு மடுபுகையால் — இங்ஙன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் புதைத்து.

384. Damayanti, whose lance-like eyes looked with pleasure in former days upon her husband, becoming sorrowful, wept and said :—"Have those palms become blackened, by the smoke of the kitchen, which once touched the fragrant mixtures, and which adjusted my hair and adorned me?"

(இ - ள்.) முன் நாள் - முற்காலத்தில், காதலனை - நாயகனை, பருகிய வேல் கண்ணாள் - கண்டு அனுபவித்த வேல்போலுங் கண்ணுள்ள தமயந்தி, புதைத்து - தவித்து, கொங்கை அளைந்து - வாசனை வஸ்துக்களை மிகவும் பரிசித்து, குழல் திருத்தி - கூந்தலைச் செவ்வையாக்கி, கோலம் செய் - (எனக்கு) அலங்காரஞ் செய்கிற, அங்கை இரண்டும் - இரண்டு உள்ளங் கைகளும், அடு புகையால் - சமைத்தலினால் வருகிற புகையினால், இங்ஙன் - இவ்வாறு, கருகியவோ - கறுத்துப்போயினவோ, என்று அழுதாள் —, எ - று.

இங்ஙன் என்பது கரியகட்டை போலாயின என்று சொல்வார் சொல்லியபடி, அல்லது தனதுடம்பு வஸ்திர முதலானவைபோலெனவுமாம். [மெய்ப்புணரியல்-கக-ஆம்] சூத்திர விதியினால் அகங்கை, அங்கையாயிற்று; அழகிய கை என்னவுமாம். "கொங்கைவருடிக் குழைதிருத்தி" என்னும் பாடமுண்டு, அதற்குத் தனங்களைத் தடவிக் காதணிகளைச் செவ்வை செய்து எனப் பொருள்கொள்க. (கூச)

385. மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்,
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து — மற்
றும், மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்

னெங்கள், கொடைத்தொழிலா னென்றாள்
குறித்து.

385. Damayanti, addressing her parents, pointing, said:—"Look, the king who drove the victorious and matchless chariot of the monarch ருதுபர்ணன் who has arrived in this excellent city, and who also is engaged in cooking, is my royal husband."

(இ - ள்.) [தாய் தந்தையருக்குத் தமயந்தி யறிவித்தது.] இத் திருநகர்க்கு வந்து அடைந்த - இந்தச் சிறப்பான பட்டணத்துக்கு வந்து சேர்ந்த, மன்னவற்கு - ருதுபர்ண ராசனுக்கு, கொற்றம் தனி தேரும் கொண்டு - அமைந்து - ஜயமுள்ள ஒப்பற்ற தேரையும் ஓட்டிக்கொண்டு வந்து, மற்றும் - மேலும், மடை தொழிலே செய்கின்ற - சமையல்வேலையுஞ் செய்கிற, மன்னவன் - அரசன், எங்கள் கொடை தொழிலான் - எங்கள் அதிபதியாகிய வள்ளல், காண் - அறி, என்றாள் குறித்து - என்று நிரூபித்துச் சொன்னாள் (தமயந்தி), எ - று.

முதல் மற்று, ஏ — அசைகள். தொழிலே — ஏ - எண்ணிடைச்சொல். (கூச)

386. போதலரும் கண்ணியான் போர்வேந்தர் சூழப்
போய்க், காதலிதன் காதலனைக் கண்ணுற்றான் -
ஓதம், வரிவளைகொண் டேறும் வளநாடன் றன்
னைத், தெரிவரிதா நின்றான் றிகைத்து.

386. King Bhima, who wore a garland on which the buds blossomed, going, surrounded by warlike kings, saw the husband of his daughter; but was perplexed at not being able to recognize in him the king of the fertile country of Nidatha; where the ocean, carrying with it the striped shells, ascends the shore.

(இ - ள்.) போது அலரும் கண்ணியான் - மொட்டுக்கள் மலர்கின்ற மாலைதரித்த வீமராசன், போர் வேந்தர் சூழ போய் - வீரரான அரசர்கள் சுற்றிவரச் சென்று, காதலிதன் காதலனை - தன் மகளுடைய கணவனை, கண்ணுற்றான் - பார்த்தான்; ஓதம் - கடல், வரி வளை கொண்டு - இரேகையுள்ள சங்குகளை எடுத்துக்கொண்டு, ஏறும் - கரையேறுகின்ற, வள நாடன்

தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
ஒளியாது காட்டுனின் னுரு.

388. "O thou who possessest the excellent country where the monkeys are confused as they mistake the spatha on the beautiful head of the arecanut palm for the hood on the beautiful head of the snake! Without hiding yourself, show us your form" said Bhima to Nala.

(இ-ள்.) [வீமன் நளனை நோக்கிச் சொல்லியது.] பூகத்தின் - பாக்குமரத்தினுடைய, ஐ தலையின் பாளைதனை - அழகிய தலையிலுள்ள பாளையை, பைந்தலைய - பசுமையான தலையுள்ள, நாக பணம் என்று ஐயுற்று - பாம்பின் படமென்று சந்தேகப்பட்டு, மந்தி - குரங்கு, தெளியாது இருக்கும் - மனந்தெளிவில்லாமலிருக்கிற, திரு நாடா - சிறந்த நாடுடையவனே, உன்னை ஒளியாது - உன்னை மறையாமல், உன் உரு - உன்ருபத்தை, காட்டு - காண்பி, எ - று.

உன்னாட்டுக் குரங்கு பாக்கின் பாளையைப் பாம்பின் படமென்று மயங்கித் தெளியாது வருந்துவதுபோல், யானும் உன்னைத் தெளியாது வருந்துகிறேனென்று குறிப்பித்ததாம், நாக பணம்—வடநூல் முடிபாதலால் பகரம் இரட்டவில்லை. (கஎ)

389. அரவரசன் றன்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்—ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்
டளிக்குங் கோத்தாய முன்னிழந்த கோ.

389. Nala who had lost by the deceit of the warlike Kali the kingly power which he inherited and protected, unfolding one of the very beautiful garments given him by the serpent-king, tied it round his waist; and the other he cast over him.

(இ-ள்.) பொரு கலியின் வஞ்சனையால் - போரிடச்செய்யும் கலியினது மோசத்தினால், பூண்டு அளிக்கும் - (இராச்சியத்தைப்) பெற்றுக் காக்கின்ற, கோ தாயம் - இராசாதிகாரத்தை, முன் இழந்த கோ - முன் போக்கடித்த நளமகாராசன், அரவரசன் தான் கொடுத்த - சர்ப்பராசன் கொடுத்த, அம் பூ துகிலின் - மிக அழகான ஆடைகளுள், ஒரு துகிலை

வாங்கி உடுத்தான் - மேலாடையைப்பிரித்து அரையிற் கட்டிக் கொண்டான், ஒரு துகிலை போர்த்தான் - மற்றொன்றை மேலே போர்த்துக்கொண்டான், எ - று. தான் - அசை.

தாயமாவது, பிதா முதலியோர்களுடையதாய், புத்திரன் முதலியோர் கைக்கொள்ளத்தக்க பொருள். இரண்டாடையு மொன்றுபோல் ஒட்டியிருந்ததனால் வாங்கி யென்றார். அம் பூந்துகில் - அழகான பூப்போன்ற துகிலெனவுமாம். (௩௮௯)

390. மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே - அக்காலம்
கானகத்தே காதலியைநீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

390. Like the sins of those who worship the sacred feet of the king of the Gods which measured the earth, the form of one who drives the huge mountain like chariot, which Nala had assumed when he deserted his wife in the forest and hid himself, left him when he put on the garment.

(இ - ள்.) அக்கால் - ஆடையணிந்த அந்தக் காலத்தில், கானகத்தே காதலியை நீத்து - காட்டில் மனைவியை விட்டு, கரந்து உறையும் - மறைந்து வாசஞ் செய்கிற, மானகம் தேர் பாகன் வடிவு - பெரிய மலையொத்த தேரையோட்டுஞ் சாரதியின் ரூபமானது, மிக்கோன் - தேவருள் மேலான திருமாலினுடைய, உலகு அளந்த - உலகங்களை அளவிட்ட, மெய் அடியே - மெய்யான திருவடியையே, சார்வு ஆக - துணையாக (உபாயமாக) புக்கோர் - அடைந்தவர்களுடைய, அருவினைபோல் - (நீங்குதல்) அருமையான பாவம்போல், போயிற்று - நீங்கிவிட்டது, எ - று. ஏ - அசை.

அடியே என்பதில் ஏகாரம் பிரிநிலை; மற்றொன்றையுஞ் சார்பாகப் புகாமல் என்பதைக் கொண்டது. மெய்கள்ந்த என்பது அருணன்புடமுதலிய ... விளக்குகின்றது. ... இவ் வடைமொழி ... ப்பார். மெய்யென்ப து நூல்களில் உண்மையான துணையென்றுஞ் சொல்லப்பட

393. In order that Damayanti, whose breasts filled her bodice, might not see, in the palace of Bhima, him who deserted her in the mandapam when she fell asleep through exhaustion, her eyes which were like rank poison, were filled with tears and hid him form her sight.

(இ - ள்.) வெம் விடத்தோடு ஒக்கும் - வெப்பமான விஷத்தோடு சமானமாயிருக்கிற, விழி இரண்டும் - (தமயந்தியின்) இரண்டு கண்ணும், வீழ் துயில் கொள் அவ்விடத்தே - சோர்வாலாகிய நித்திரைகொண்ட அந்த மண்டபத்தில், நீத்த அவர் என்றே - (இவர்) விட்டுப்போனவரென்று, இவ்விடத்தே - இந்த வீமன் மாளிகையிலே, வாரார் முலையாள் - கச்சு நிறைந்த தனங்களையுடைய தமயந்தி, அம் மன்னவனை காணாமல் - அந்த நளனைக் காணாதிருக்கும்படி, நீரால் மறைத்தன - ஜலத்தினாலே மறைத்து விட்டன; எ-று. ஏ - நின்று - அசைகள்.

நின்று மறைத்தன எனவுங் கூட்டலாம். தமயந்திக்குக் கண்ணீர் கூர்ந்து கண் தெரியாமலிருந்ததை, நளன் முன்செய்த பிழைக்காக இப்போது அவள் பாராதிருக்கும்படி கண்கள் செய்தன என்று கவி தற்குறிப்பாகக் கூறினார். (எஉ)

394. உத்தமரின் மற்றிவனை யொப்பா ரொருவரில்லை,
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்கும் —
கைத்தலத்தில், தேமாரி பெய்யுந் திருமலர்த்
தார் வேந்தன்மேற், பூமாரி பெய்தார் புகழ்ந்து.

394. Saying that there were none on this earth among the great to be compared to him, the Gods cast, with their hands, showers of flowers upon king Nala who was adorned with a splendid garland which poured forth honeyed rain.

(இ - ள்.) இ தலத்தில் - இப்பூமியில், உத்தமரில் - மேலானவர்களில், இவனை ஒப்பார் - இந்த நளனை யொத்திருக்கிறவர், ஒருவர் இலை என்று - ஒருவரும் இல்லை யென்று, இமையோர் - தேவர்கள், புகழ்ந்து - துதித்து, கைத்தலத்தில் - கையினிடத்தே, தேன் மாரி பெய்யும் - தேன்மழை பொழிகின்ற, திரு மலர் தார் வேந்தன் மேல் - மேன்மையான பூமாலை யணிந்த நளமகாராசன்மேலே, எம்மருங்கும் - எப்பக்கத்திலும்,

பூமாரி பெய்தார் - பூமழையைப் பொழிந்தார்கள், எ - று. மற்று - அசை.

ஒருவரும் என்பதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. இல்லை—லகரம் உ தொகுத்தல். (எ௩)

395. தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறை
மைக்கும், பூவுலகி லொப்பாயார் போதுவார்—
காவலனே, மற்றென்பால் வேண்டும் வரங்கேட்
டுக் கொள்ளென்றான், முற்றன்பாற் பாரளிப்
பான் முன்.

395. Kali stood before king Nala, the benign protector of the earth, and said :—"O king! who is there in this world to be compared to the chastity of your wife Damayanti, or to the regularity of your government? Ask of me whatever you desire."

(இ - ள்.) [கலி.] முற்று அன்பால் - நிறைந்த பிரீதியினாலே பார் அளிப்பான் முன் - பூமியைக் காக்கின்ற நளச்சக்கிரவர்த்தியின் எதிரில் (நின்று,) காவலனே - அரசனே, தேவி இவள் கற்புக்கும் - உன் தேவியாகிய இத்தமயந்தியின் பதிவிரதைத் தனத்திற்கும், செங்கோல் முறைமைக்கும் - உன் துரைத்தன ஒழுங்குக்கும், பூ உலகில் - பூலோகத்தில், ஒப்பா - சமானமாக, போதுவார் யார் .- வருகின்றவர் எவர், என்பால் வேண்டும் வரம் கேட்டுக்கொள் .- என்னிடத்தில் வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளு, என்றான்—, எ - று. மற்று - அசை.

—"ஒப்பாயார் போதுவார்" என்றதினால் அப்படிப்பட்டவர் உண்டானோருமில்லை, இருக்கின்றாருமில்லை, உண்டாவாரோவெனின் அவருமில்லை என்றதாயிற்று. யார் — உயர்திணைப் பொதுக்குறிப்பு வினைமுற்று. [வினையியல் ௩௦ - ம் - சூ.] கேட்டுக்கொள் — கொள் விகுதி தற்பொருட்டு என்னும் பொருளில் வந்தது. போதுவார் — புகுதுவார் என்பதின் திரிபென்பர்; போ - பகுதி, து - சாரியை, வ் - எதிர்கால இடைநிலை, ஆர் - விகுதி என்று, போ என்னு முதனிலைக்கு இங்ஙனம் புடை பெயர்ச்சியு முண்டென்னலாம். காவலன் - காவலைச் செய்பவன் எனவும், கா - காத்தலிலே, வலன் - வல்லவன்

வென்றும், இருவகையுங் கொள்ளலாம். கி — முதனிலைத் தொழிற்பெயர். (௭௪)

396. உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்து, மின்
சொரியும் வேலாய் மிகவிரும்பி — என்சரிதம்,
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்
பூண், வாட்டானை மன்னன் மதித்து.

396. King Nala, who was adorned with jewels of sparkling gems, and who commanded sword-girt armies, esteeming the words of Kali said :—"O thou, who possessest a glittering lance! In the age of your reign you must not trouble those who listen to my history with interest.

(இ - ள்.) கிளர் மணி பூண் - விளங்குகின்ற ரத்தினாபரணங்களையும், வாள் தானை மன்னன் - வாளேந்திய சேனையையுமுடைய நளமகாராசன், மதித்து - (கலியின் பேச்சை) மேன்மையாகக்கொண்டு, மின் சொரியும் வேலாய் - காந்தியைப் பொழிகின்ற வேலையுடையவனே, உன் சரிதம் [illegible] ட்க்கை செல்லும்படி, உலகு ஆளும் காலத்து - [illegible] யாளுநாளில், மிக விரும்பி என் சரிதம் கேட்டாரை - மிகவும் பிரியப்பட்டு என் சரித்திரத்தைக் கேட்பவர்களை, நீ அடையேல் - நீ சேராதிரு, என்றான் —, எ - று.

"உன் சரிதஞ் சொல்லி" எனவும் பாடமுண்டு. உன்சரிதஞ் செல்ல - வுலகாளுங் காலமாவது கலியுகம். (௭௫)

397. என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடை
யேன், மின்கா லயில்வேலாய் மெய்யென்று —
நன்காவி, மட்டடைக்குஞ் சோலை வளநாடன்
முன்னின்று, கட்டுரைத்துப் போனான் கலி.

397. Kali, standing before Nala, the king of the fertile country of Nidatha which is surrounded by groves, and in which the good dark-hued Kuvali flowers shed honey, spake with truth after this wise :—"O thou possessing a sharp lance which emits lightning! During my reign (கலியுகம்) I will not trouble those who listen to your history. This I say truly." Having thus spoken he departed.

(இ - ள்.) மின் கான்ற அயில் வேலாய் - மின்னலைக் கக்குகின்ற கூர்மையான வேலாயுதமுடையவனே, என் காலத்து - என்னுடைய காலமாகிய கலியுகத்தில், உன் சரிதம் கேட்டாரை - உன் கதை கேட்பவர்களை, யான் அடையேன் - நான் சேராமாட்டேன், மெய் - (இது) சத்தியம், என்று —, நன் காவி - நல்ல நீலோற்பலமலர்கள், மட்டு இறைக்கும் சோலை - மதுவை இறைக்கப்பெற்ற சோலை சூழ்ந்ததும், வள நாடன் - வளப்பம் பெற்றதுமான நிடதநாட்டரசனது, முன் நின்று - எதிரில் நின்று, கலி - கலிபுருடன், கட்டு உரைத்து - உறுதியான பேச்சைப் பேசி, போனான் —, எ - று.

நன்கு ஆவி எனப்பிரித்து, நன்கு - நன்றாக, ஆவி - குளங்களுக்கு, மட்டு இறைக்கும் எனவு முரைக்கலாம். கட்டுரைத்து — கட்டுரை என்பதை ஒரே சொல்லாக எடுத்துப் பகுதியாய்க் கொள்க. சோலையிற்காவி அங்குள்ள குளங்களில் எனக் கொள்க. (௭௧)

398. வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோந் — தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையர்க்கோன் செய்தான் விருந்து.

398. The king of the country of Vidarpa, which is fenced around with groves in which the pollen in the flowers is drowned in the gushing honey, having taken with him king Nala, who never departed from the paths of the Vedas, and Damayanti, whose eyes resembled tanks filled with flowers, as well as their children, made a feast.

(இ - ள்.) தாது புதைய - கேசரங்கள் புதைந்து போம்படி, தேன் பாய்ந்து ஒழுகும் - தேன் பாய்ந்து ஒழுகுகின்ற, பூ சோலை - பூவுள்ள சோலைகளாகிய, வேலி - வேலி சூழ்ந்த, விதையர் கோன் - விதர்ப்பநாட்டரசன், வேத நெறி வழுவா வேந்தனையும் - வேதமார்க்கம் தப்பாத நளமகாராசனையும், பூ தடம் கண் கோதையையும் - பூப்பூத்த தடாகம்போன்ற கண்களையுடைய தமயந்தியையும், மக்களையும் - (அவர்க

ருடைய) ஆண் பெண் மக்களையும் கொண்டு போய் - இட்டுக் கொண்டு போய், விருந்து செய்தான் —, எ - று.

விதர்ப்பம் என்னும் ஆரியமொழி விதையமெனத் திரிந்தது. பூந்தடங்கண் - பூப்போன்ற விசாலமாகிய கண் எனவு முரைக்கலாம். (எஎ)

399. உன்னையா னொன்று முணரா துரைத்தவெலாம்,
பொன்னமருந் தாராய் பொறுவென்று — பின்
னைத்தன், மேனீர்மை குன்றா வெறுந்தேர் மிசைக்கொண்டான், மானீ ரயோத்தியார் மன்.

399. The king of the inhabitants of the great fertile country of Oude, said :—"O thou adorned with garlands swarming with golden beetles! You must bear with all that I said in ignorance concerning you." And then, with his dignity unlessened he departed in an empty chariot.

(இ - ள்.) மானீர் அயோத்தியார் மன் - பெருமையான நீர்வளமுள்ள அயோத்தி நகரத்தாருடைய அரசன், பொன் அமரும் தாராய் - பொன் வண்டு பொருந்திய மாலை யணிந்தவனே, யான் ஒன்றும் உணராது - நான் ஒன்றுந் தெரியாமல், உன்னை உரைத்த எல்லாம் - உன்னைக் குறித்துச் சொன்னவை யனைத்தையும், பொறு என்று - பொறுக்கவேண்டுமென்று சொல்லி, பின்னை - பின்பு, தன் மேல் நீர்மை குன்றா - தன் மேலான குணம் குறையாமல், வெறு தேர்மிசை கொண்டான் - வெறுமையான தேர்மேலேறிச் சென்றான், எ - று.

குன்றா என்பதற்குக் குன்றி எனப் பொருள் கொண்டு தமயந்தி சுயம்வரமென்று வந்து இகழ்ச்சிப்பட்டதைக் கருத்தாக வு முரைக்கலாம். வெறுந் தேராவது தமயந்தியோடு கூடி வருஞ் சந்தோஷமற்ற தேர். பொன் அமருந் தாராய் என்பதற்குத் திருமகள் பொருந்தின சேனையையுடையாய் எனவும் பொருள்படும். மிசைக்கொண்டான் என்பதை ஒருசொன் னீர்மையாக வைத்து ஏறினான் எனப் பொருளுரைத்துக்கொள்க. தேர் — ஏழனுருபு தொக்கது. (எஅ)

400. விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப், பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்—முற்றாம்பல், தேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கும், மாநீர் நிடதத்தார் மன்.

400. The king of the inhabitants of the very fertile country of Nidatha, in which the honey which flows out of the old ambal blossoms, falling on the adjacent ears of corn, causes them to grow, rode with his wife in a golden chariot, the army of archers going before, and the kings with their lances following in the rear.

(இ-ள்.) முற்று ஆம்பல் - முற்றிய ஆம்பற்பூக்கள், தேன் நீர் அளித்து - தேனாகிய நீரைப் பாய்ச்சி, அருகு செந்நெல் கதிர் விளைக்கும் - சமீபத்திலுள்ள செந்நெற் கதிர்களை விளையச் செய்கின்ற, மா நீர் - மிகுதியான நீர்வளம் பொருந்திய, நிடதத்தார் மன் - நிடத தேசத்தாருடைய அரசன், வில் தானை - வில்லேந்திய சேனை, முன் செல்ல - முன்புறம் போய்க்கொண்டிருக்கவும், வேல் வேந்தர் - வேலேந்திய அரசர், பின் செல்ல - பின்புறம் போய்க்கொண்டிருக்கவும், தேவியொடு - தமயந்தியோடு, பொன் தேர் மேல் - பொன்னாற் செய்த தேர்மேல் (ஏறி,) போயினான்—, எ - று.

மா நீர் - மேன்மையான குணமுள்ள எனவுமாம். தேவியொடும் - உம் - அசை. செம்மை நெல் என்பதில் "ஈறுபோதல் இடையுகர மிய்யாதல்" என்னுஞ் சூத்திரத்தினால் ஐகெட்டு "மெய்யொன் றியைவன மயங்குமென்ப" என்று வரைந்திருத்தலால் மகரத்தோடு நகரத்திற்கு மயக்கமின்மையால் மகரமும் நகரமாகத் திரிந்தது. "இனையவும் பண்பிற் கியல்பே" என்பதில் அடக்கிக்கொள்க. "விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின் செல்ல" என்பவை வினைச்செவ்வெண். முன் பின் என்பன இடைச்சொல்லாதலால் "இடையுரிவடசொலி னியம்பிய கொளாதவும்" என்பதனால் னகரங்கள் இயல்பாயின. (௭௬)

401. தாள்வண்டு வெல்லத் தரித்தகண்டை வெவ்வேலாய்
வனமென்றி தூரமினி யெய்தகண்டேயோ—மாதே
இந்த மல்லிகைப் பொழிலைக் கப்புறமா [கேள்
விந்தமெனு மப்பதிதான் மிக்கு.

401. O thou who bore a long sharp lance in order to conquer the Asuras! What is the distance we have yet to go?" asked Damayanti. To which Nala replied:—"Harken, O wife! After passing the mountain before us and seven mountains beyond, our capital Mahavindam lies in all its greatness."

(இ - ள்.) தானவரை வெல்ல - அசுரரைச் செயிக்கும்பொருட்டு, தரித்த நெடு வை வேலாய் - ஏந்திய பெரிய கூர்மையான வேலுடையவனே, ஏனை நெறி தூரம் - மற்ற வழியின் தூரம், இனி எத்தனையோ - மேல் எவ்வளவோ (என்று தமயந்தி வினவ;) மானே கேள் - பெண்ணே கேள், இந்த மலை கடந்து - எதிரிலிருக்கின்ற பருவதத்தைத் தாண்டி, ஏழு மலைக்கு அப்புறம் - ஏழு பருவதங்களுக்கு அப்புறத்தில், மாவிந்தம் என்னும் நம் பதி - மாவிந்தமென்கிற நம்முடைய பட்டணம், மிக்கு (உளது) - மேன்மைப்பட்டிருக்கின்றது (என்று நளன் விடுத்தான்,) எ - று. தான் - அசை.

இதில் ஓராசிரியனை சீஷனொருவன் மோக்ஷலோக மெங்கே என்று வினவ, அவன் அது இவ்வண்டமும் இதனைச் சூழ்ந்த ஏழாவரணமுங் கடந்தபின் அது காணப்படுமென்று கூறியது எனப் பொருளொன்று தோன்றுதலால் சுருங்கச்சொல்லல் அணியாம். (௪0)

402. இக்கங்குல் போக விகல்வே ளெறிநீர்
செய்க்கங்கு பாயுந் திருநாடு புக்கான்
திருக்குமா காண்பான்போ லேறினான் குன்றிற்
செருக்குமான் றேர்வெய்யோன் சென்று.

402. When that night had passed away, Nala who bore an heroic lance, entered the excellent country of Nidatha, where the water which flows in waves down the rivers &c., enters the paddy fields, and the sun who possessed a chariot drawn by proud horses, rode on the mountains திடதநாடு, as if he came to see the town.

(இ - ள்.) இகங்குல் போக - இவ் விரவு நீங்க, இகல் வேல் நளன் - வீரங்கொண்ட வேலுள்ள நளன், எறி நீர் - (ஆறுமுதலானவை) அலைமோதிவீசுகிற தண்ணீர், செய்க்கு பாயும் திரு நாடு - கழனிகளுக்குப் பாயும்படியான மேலான நிடத

404. மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்
தண்டெரியற் றேர்வேந்தன் றான். [தான்

404. King Nala, who was adorned with a cool garland sent the messengers, whose ancestors performed the same office, saying, 'Go and inform Putcara of my arrival; tell him that I have a fit wager for a second game of dice, and bring that king here.'

(இ-ள்.) தண் தெரியல் தேர் வேந்தன் - குளிர்ச்சியான மாலையணிந்த நளமகாராஜன், மற்றவற்கு - மற்றவனுக்கு (புட்கரனுக்கு,) என் வரவு சொல்லி - நான் வந்ததைச் சொல்லி, மறு சூதுக்கு - மறுதரம் ஆடுஞ் சூதுக்கு, உற்ற பணையம் - தகுதியான பந்தயப் பொருள், உளது என்று - உண்டென்று சொல்லி, கொற்றவனை கொண்டு அணைவீர் - (அந்த) அரசனைக் கொண்டுவருகுங்கள், என்று, குல தூதரை விடுத்தான் - குலபரம்பரையாய்வருந் தூதரை அனுப்பினான், ஈற்று தான் - அசை.

பரம்பரையாய் ஒருதொழில் செய்வோர்க்கே அத்தொழிலை நிறைவேற்று மாற்றலிருக்கும் ஆனதுபற்றி 'குலத்தூதரை விடுத்தான்' என்றார். அவராயின் அவரைச் சூதுக்கு இசையச் செய்வாரென்பது கருத்து. (அ௫)

465. மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தாயநறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர்.

405. The hard-hearted Putciran, who deceived Nala in the fatal game at dice, saw before him, in the clean and beautiful grove which was filled with fragrant flowers, Nala and Damayanti whose (i. e. Damayanti's) gait resembled the walk of a female swan, as they stood surrounded by a large and trusty host.

(இ-ள்.) மாயம் நெடு சூதில் - மோசத்துக்குரிய நெடிய சூதாட்டத்தில், வஞ்சித்த வல் நெஞ்சன் - (நளனை) மோசஞ்

"சூதவர்க்கு" எனப், பாடமாயின் மக்களுக்கு என உரைத்துக் கொள்க. (அரு)

407. தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து.

407. Putcaran forgetting the assistance rendered to him on the former occasion by Kali the progenitor of evil, while playing at dice asked :—"What is the wager?" and Nala, who resembled Vishnu who slept on the dark ocean, took out the beautiful ring which was on his finger and placed it before him.

(இ - ள்.) தீது தரு கலி - தீமையைத் தரும்படியாகிய கலி புருஷன், முன் செய்ததனை - முன்பு செய்த சகாயத்தை, ஓராதே - நினையாமலே (புட்கரன்,) சூது ஆட—, யாது பணையம் என இயம்ப - என்ன பந்தயம் என்று சொல்ல, மை ஆழியில் துயிலும் - கறுப்பான கடலில் கண்வளர்கின்ற, மால் அனையான் - திருமாலை ஒத்தவனாகிய நளன், வண்மை புனை - அழகணிந்த, கை ஆழி - கையிலிருக்கும் மோதிரத்தை, கழித்து வைத்தான் - கழற்றி வைத்தான், எ - று.

"மால் பராய்" எனவும் பாடமுண்டு, திருமாலைப் போற்றி என்பது அதன் பொருள். (அஎ)

408. அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

408. King Nala earned the praises of those around him by winning in one game, the town whose beauty and wealth are indescribable, the army matchless in strength, and the fertile country, and by conquering Putcaran who before had won these from him by deceit.

(இ - ள்.) அவ் வேந்து - அந்த நளமகாராசன், அருகு இருந்தார் மதிக்க - பக்கத்திலிருந்தவர்கள், மெச்சும்படி, அப் பலகை ஒன்றில் - சொக்கட்டானின் பலகை ஒன்றிலேயே [ஒரே

பெற்று, மாதோடு மன்னன் வரக்கண்ட மாநக
ருக், கேதோ வுரைப்ப னெதிர்.

411. To what shall I compare the great town of Mahvintham, as Nala, having regained his Government, entered with Damayanti? Is it like the peacock hailing the coming clouds? Is it like the brightened countenance regaining its lost sight? Or is it like the fertile and excellent fields, filled with water?

(இ - ள்.) பார் பெற்று - பூமியாள்வதைப் பெற்று, மாதோடு - தமயந்தியோடு, மன்னன் - நளமகாராஜன், வர கண்ட - வருவதைப் பார்த்த, மா நகருக்கு - பெருமையான மாவிந்த நகரத்துக்கு, கார் பெற்ற தோகையோ - மேகம் வரப்பெற்ற மயிலேயோ, கண் பெற்ற வாள் முகமோ - கண்ணொளிப்பெற்ற பிரகாசமான முகத்தையோ, நீர் பெற்று உயர்ந்த நிறை புலமோ - தண்ணீரைப் பெற்று மேன்மைபெற்ற விளைவு நிறைந்த கழனியையோ, ஏதோ - எதையோ, எதிர் உரைப்பன் - சமானமாகச் சொல்லுவேன் (நான்), எ - று.

நகரத்தாரெல்லாம் அரசனும் அரசியும் வரக்கண்டு களித்திருந்தார்கள் என்றபடி.

பார் அதன் ஆளுகைக்கும், நகர் அங்குள்ளார்க்கும் ஆகு பெயர், இ - நான்கும் ஐயப்பொருளில் வந்தன, ஈண்டு ஐயம் உபமானமாதற்கு உரிமைப் பற்றியது. ஆகவே இவையாவும் உபமானம் என்பது கருத்து. (௩௦)

நளவெண்பாவுரை

முற்றியது.

---

## இலக்கணக்குறிப்பு.

☞ ஒருசொல்லுக்கு இலக்கணங்கூற என்றால் திணை - பால் - எண் - இடம் - வேற்றுமை - தொழிற்பெயர் - பண்புப்பெயர் - வினையாலணையும்பெயர் என்கிற சிறப்புகளையும் பெயர்க்குக் கூறவேண்டும்.

திணை முதலானவைகளோடு காலம் - தன்வினை - பிறவினை - செய்வினை - செயப்பாட்டுவினை முதலிய சிறப்பும், பெயரெச்சம் - வினையெச்சம் - இன்ன வாய்பாடு என்பவைகளும், வினைக்குக் கூறவேண்டும்.

தொடர்சொல்லவேண்டுமாயின் இரண்டு சொற்களுக்கு நடுவில் வேற்றுமையுருபோ, அல்லது வினைவிகுதி முதலியவைகளோ, தொக்கு இருப்பது இன்னதென்றறிந்து இன்ன தொகைநிலைத்தொடர் என்றாவது, இன்ன தொகாநிலைத்தொடர் என்றாவது, கண்டு உரைக்கவேண்டும்.

உதாரணம்.

365 - வது பாட்டு.

பணையில் — அஃறிணை ஒன்றன்பால் ஒருமைப்படர்க்கைக்குறிப் பெயர், ஏழாம்வேற்றுமை, தான்றி எனும் பிறிதின் கிழமைக்கு இடமாயிற்று.

எண்ணினான் — உயர்திணையாண்பால் ஒருமைப்படர்க்கை இறந்தகாலச் செயப்படுபொருள் குன்றாத தன்வினை வினைமுற்று, தாரான் என்னும் பெயரைக் கொண்டது.

பார் — ஏவலொருமை முன்னிலை வினைமுற்று, இது இருதிணைப் பொது, இங்கு உயர்திணை முன்னிலைப்பெயரைக் கொண்டது.

---

என்ன — இடைச்சொலடியாகப் பிறந்த செயவென் வாய்பாட்டு வினையெச்சம். இங்கு காரணப் பொருட்டாகையால் இறந்த காலமாயிற்று, ருதுபர்ணன் என்னும் பெயரைக் கொண்டது.

இத்தாழ் — இடைச்சொற்றொடர்.

தாழ்பணையில் — வினைத்தொகைநிலைத்தொடர், தாழ்ந்தபணையில்என விரியும்.

பணையிலிரு — ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

இருந்தான்றி — பண்புத்தொகைநிலைத்தொடர், இருமையாகிய தான்றியென விரியும்.

தான்றிக்காய் — ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர், தான்றியினது காயென விரியும்.

பத்தாயிரம் — பண்புத்தொகைநிலைத்தொடர்.

ஆயிரங்கோடி — இதுவுமது.

கோடி என்பதை முற்றெச்சமாக் கொண்டால் கோடியார் என்பது வினையெச்சத் தொகாநிலைத் தொடர்; பெயராக்கின் இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்.

யார் என்ன — வினைமுற்றுத் தொடர்.

---

உய்த்ததனில் — வினையெச்சத் தொடர்.

அதனில் தேர் — ஏழாம் வேற்றுமை தொகாநிலைத்தொடர்.

நிறுத்தி எண்ணினன் — வினையெச்சத்தொடர்.

எண்ணினன்தேவர் — வினைமுற்றுத் தொடர்.

தேவர் சபை — ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர், தேவரது சபையென விரியும்.

தார் நிறுத்தும் — இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர், தாரைநிறுத்தும்என விரியும்.

நிறுத்தும்தோள் — பெயரெச்சத்தொடர்.

தோள் வேந்தன் — இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகைநிலைத்தொடர், தோளையுடைய வேந்தன் எனவிரியும்.

இப்படி விலமொழிநோக்கி யின்னதொடரெனச் சொல்லுக.

இடைச்சொல் முன்னும் பின்னும் வருமாதலால் எப்படியிருந்தாலும் இடைச்சொற்றொடரே யாம்:

(உ-ம்.)

மற்றொருவன்,—முன்வந்தது.

ஆளுமே, அவனும்,—பின்வந்தது.

தத்தம்பொருள், அசைநிலை, இசைநிறை, குறிப்பு, இப்படிப்பட்ட இடைச்சொற்களைத் தனிச்சொல்லாய்ப் பிரிக்க வேண்டும்.

வேற்றுமையுருபு, விகுதி, இடைநிலை, சாரியை இப்படிப்பட்ட இடைச்சொற்களைப் பிரிக்கக்கூடாது.

எல்லாவற்றிற்கும் முடிபும் சம்பந்தமும் கூறவேண்டும். இதுதான் இலக்கணஞ் சொல்லுமுறை.

இப்படி ஆங்காங்கு காட்டிக்கொடுத்த வழியால் மற்ற விடங்களிலும் இலக்கணமுறைகளை அமைத்துக்கொள்க.

---

## வெண்பாவியற்சுருக்கம்.

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, என நான்கு பாக்கள் உண்டு. பா=பாட்டு.

இவற்றுள் வெண்பாவிற்கு அடியிற்கூறுகிறபடி இலக்கண முறையறியத்தக்கது.

ஒருகுற்றெழுத்தாகிலும் ஒருநெட்டெழுத்தாகிலும் தனித்தாவது ஒற்றடுத்தாவது வந்தால் நேர் அசை யெனப்படும்.

(உ-ம்.) அ, ஆ, அல், ஆல்.

இரண்டு குறிலாவது, குறில் நெடிலுமாவது, தனித்தும் ஒற்றடுத்தும் வந்தால் நிரை அசை யெனப்படும். (உ-ம்.) கர, கரா, கரம், கராம்.

இவ்வசைகள், இரண்டு மூன்று நான்கு சேர்ந்து வருவது சீர் எனப்படும்.

இவற்றுள் - நேர் நேர், நிரை நேர், நேர் நிரை, நிரை நிரை, இந்நான்கும் ஈரசைச்சீராம்.

இவற்றிற்கு உதாரணவாய்ப்பாடு.

| | | |
|---|---|---|
| தே மா = நேர் நேர் | } | இவ்விரண்டும் மாச்சீர். |
| புளி மா = நிரை நேர் | | |
| கூ விளம் = நேர் நிரை | } | இவ்விரண்டும் விளஞ்சீர். |
| கரு விளம் = நிரை நிரை | | |

இந்நான்கும் இயற்சீர் எனவும் ஆசிரியவுரிச்சீர் எனவும் வழங்கப்படும்.

நேர் நேர் நேர், நிரை நேர் நேர், நேர் நிரை நேர், நிரை நிரை நேர், நேர் நேர் நிரை, நிரை நேர் நிரை, நேர் நிரை நிரை, நிரை நிரை நிரை, இவ்வெட்டும் மூவசைச்சீராம்.

| | | |
|---|---|---|
| தே மாங் காய் = நேர் நேர் நேர் | } | இவை காய்ச்சீர் எனவும் வெண்சீர் எனவும் படும். |
| புளி மாங் காய் = நிரை நேர் நேர் | | |
| கூ விளங் காய் = நேர் நிரை நேர் | | |
| கரு விளங் காய் = நிரை நிரை நேர் | | |
| தே மாங் கனி = நேர் நேர் நிரை | } | இவை கனிச்சீர் அல்லது வஞ்சிச்சீர் என்னப்படும். |
| புளி மாங் கனி = நிரை நேர் நிரை | | |
| கூ விளங் கனி = நேர் நிரை நிரை | | |
| கரு விளங் கனி = நிரை நிரை நிரை | | |

இக் கனிச்சீர்களும் நாலசைச்சீர்களும், வெண்பாவில் வருவனவல்ல. சிலவெண்பாக்களில் ஓரசையும் சீராய்க் கடைசியில் வரும்.

மாச்சீர்முன் நிரைவருவதும், விளஞ்சீர்முன் நேர்வருவதும், இயற்சீர் வெண்டளை யெனப்படும்.

காய்முன் நேர்வருவது வெண்சீர்வெண்டளை என்னப்படும்.

வெள் தளை = வெண்டளை. தளை, கட்டு, பந்தம் என்றாலும் யாப்பென்றாலும் தளையே. வெண்பாவிற்கு உரிய தளை வெண்டளை. வெண்டளையின்றி வேறுதளை வெண்பாவில் வராது. இப்படிப்பட்ட தளை தப்பாமல் ஈற்றடி முச்சீராயும் மற்றையடி நாற்சீராயும் வருவது வெண்பா என்னப்படும். ஈற்றடியில்

கடைச்சீர் காசு, பிறப்பு என்கிற குற்றியலுகர வாய்பாட்டாயும் நாள், மலர் என்கிற ஓரசைச்சீராயும் வரவேண்டும்.

இவ்வெண்பா குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, என ஐவகைப்படும்.

இரண்டடியால் வருவது குறள்வெண்பா; மூன்றடியால் வருவது சிந்தியல்வெண்பா; நான்கடியால்வருவது நேரிசை வெண்பாவும் இன்னிசை வெண்பாவும்; நான்குக்கு மேற்பட்ட அடிகளால் வருவது பஃறொடைவெண்பா.

இந் நளவெண்பா முற்றும் நேரிசைவெண்பாவே. இதன் இலக்கணம், ஒருவிகற்பத்தாலேனும் இருவிகற்பத்தாலேனும் வந்து, இரண்டாமடிக் கடைச்சீர் தனித்துவருவது. விகற்பம் என்றால் எதுகை.

(உ-ம்.)

முன் னை - வினை யான் - முடிந் ததோ - மொய் குழ லாள்
நேர் நேர் - நிரை நேர் - நிரை நிரை - நேர் நிரை நேர்
தே மா - புளி மா - கரு விளம் - கூ விளங் காய்

என் னைத் தான் - கா ணா - விசைந் ததோ - தன் மா புத்
நேர் நேர் நேர் - நேர் நேர் - நிரை நிரை - நேர் நிரை நேர்
தே மாங் காய் - தே மா - கரு விளம் - கூ விளங் காய்

நோவ் வா த - வார்த் தை - யுல கத் - துரைப் பட்ட
நேர் நேர் நேர் - நேர் நேர் - நிரை நேர் - நிரை நேர் நேர்
தே மாங் காய் - தே மா - புளி மா - புளி மாங் காய்

நெவ் வா று - சொல் லோ - விது.
நேர் நேர் நேர் - நேர் நேர் - நிரை
தே மாங் காய் - தே மா - மலர்

முன்னை வினையான் - இது மாமுன் நிரைவந்த இயற்சீர் வெண்டளை.

வினையான் முடிந்ததோ - இதுவுமது.

முடிந்ததோ மொய்குழலாள் - இது விளமுன் நேர்வந்த இயற்சீர்வெண்டளை.

மொய்குழலாள் என்னைத்தான் - காய்முன் நேர்வந்த வெண்சீர் வெண்டளை.

என்னைத்தான் காண - இதுவுமது.

காண இசைந்ததோ - இது மாமுன் நிரைவந்த இயற்சீர் வெண்டளை.

இசைந்ததோ தன்மரபுக் - இது விளமுன் நேர்வந்த இயற்சீர் வெண்டளை.

"மீண்டோர் சுயம்வரத்தை" என்னும் ௭௨-வது பாட்டின் கடைச்சீர் "புரிந்து" பிறப்பு என்னும் வாய்பாட்டால் வந்தது.

"எங்கோன்மகளுக்" என்னும் (௭௩)வது பாட்டின் கடைச்சீர் "சேர்ந்து" காசு என்னும் வாய்பாட்டால் வந்தது.

"ஒற்றைத்தனியாழி" என்கிற ௭௭-வது பாட்டின் கடைச்சீர் "செய்" நாள் என்னும் வாய்பாட்டால் வந்தது.

"மறையொழுக" என்கிற ௮௮-வது பாட்டின் கடைச்சீர் "பொழில்" மலர் என்னும் வாய்பாட்டால் வந்தது.

இவ்வாறு வேண்டும் வெண்பாக்களைப் பிரித்துச் சீருந்தளையும் முன் கூறியபடி சிதையாமல் வரப்பார்த்துக்கொள்ள வேண்டும்.

அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவருவதை எதுகையென்றும், அவ்வடிகளின் சீர்களின் முதல் எழுத்து ஒன்றி வருவதை மோனையென்றுஞ் சொல்வார்கள்.

| | |
|---|---|
| அ-ஆ-ஐ-ஔ-இவைகளும்<br>இ-ஈ-எ-ஏ-இவைகளும்<br>உ-ஊ-ஒ-ஓ-இவைகளும் | தம்முள் ஒன்றோடொன்று இனமாம். |

ச-த-இவையும்
ந-ஞ-இவையும் } தம்முள் ஒன்றோடொன்று இனமா
ம-வ-இவையும்

மோனையாகிய மெய்கள் அவ்வுயிர்களாயினும் இனவுயி
யினும் ஏறப்பெற்றே வரவேண்டும்.

(உ-ம்.)

"கொற்றவேற் றானைக் குருநாடன் பாலனைந்தான்"

"தீதோவப் பார்காத்த சேய்"

"மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்"

இவற்றுள் உயிரும் மெய்யும் இனங்களாய் மோனைய
காண்க.

எதுகையு மிவ்வாறே? எதுகையிலும் முதலெழுத்து
லோகுறிலோ ஒன்றியே வரவேண்டும்.

(உ-ம்.)

"கொற்றவேற் றானை" என்பதற்கு

"எற்றுநீர் ஞாலம்" என்று வருவதேயல்லது

ஏற்றுநீர் ஞாலம் என்று வரமாட்டாதென அறிக.

தனிச்சொலென்பது முன் இரண்டடிகளில் வந்த எதுகை
திருப்பதேயாம்.

---

